# திராவிட இயக்கத்தை நிராகரிப்பது ஏன் ?

(திராவிட இயக்கம், ஈ.வே.ரா. குறித்த கட்டுரைகள்)

ஜெயமோகன்

**இலக்கியம்**

## *1) அறுவை சிகிழ்ச்சைக்கு கடப்பாரை : ஈ வே ரா வின் அணுகுமுறை*

*இக்கட்டுரை , ஈ.வே.ரா குறித்த எனது முழுமையான மதிப்பீடு அல்ல. அவரது மொத்த எழுத்துக்களையும் ஆனைமுத்து தொகுப்பில் கூர்ந்து படித்ததுண்டு. அவர் மீது விமரிசனங்களை அவ்வடிப்படையில் முழுமையாக ஆதாரங்களுடன் முன் வைக்க என்னால் முடியும். அது இச்சந்தர்ப்பத்தில் எளிதாகச் செய்யப்பட வேண்டிய ஒன்றல்ல. இக்கட்டுரையை என் மனப் பதிவும், நிலைப்பாடும் என்ன என்பதை இவ்விவாதச் சூழலில் விளக்குவதற்கே எழுதியிருக்கிறேன்.*

*பொதுவாக ஈ.வே.ரா குறித்துப் பேசுபவர்களுக்கு ஒரு போக்கு உண்டு. அவர்கள் மற்ற சிந்தனையாளர்களை அச்சிந்தனையாளர்களின் சொந்த வாழ்க்கை, பொதுச் செயல்பாடுகள், அவற்றின் விளைவுகள் ஆகியவற்றை முக்கியமாகக் கொண்டு மதிப்பிடுவார்கள். ஆனால் ஈ.வே.ரா வை மதிப்பிட முன் வருபவர்கள் அவரது பேச்சுகளை மட்டுமே கணக்கில் கொள்ள வேண்டும் என்றும், மற்ற விஷயங்களைக் கணக்கில் கொண்டால் அது அவதூறு என்றும் சொல்ல ஆரம்பித்து விடுவார்கள்.*

*பெரியாரியர்களுக்கும் இது பொருந்தும். அவர்கள் மற்ற அனைவரையும் தனி வாழ்க்கை சார்ந்தே விமர்சித்து வந்துள்ளனர். ஆனால் அவர்கள் தனி வாழ்க்கை எப்போதுமே விசித்திரமான முறையில் மர்மமாக இருக்கும். தமிழகத்துப் பெரியாரியர்களில் தங்கள் சொந்த சாதியின் எல்லையை கடந்தவர்கள் மிக, மிகக் குறைவு என்ற எளிய உண்மை கூட, இதனால் விவாதத்துக்கு வருவது இல்லை.*

*என்னைப் பொறுத்த வரை, ஒருவர் என்ன சொன்னார் என்பது ஒரு போதும் முதன்மையான அளவுகோல் அல்ல.*

*சொல்வது யார்க்கும் எளிய அரியவாம்*

*சொல்லிய வண்ணம் செயல்.*

*ஈ.வே.ரா தன் நீண்ட வாழ்வில் பல் வேறு இடங்களில் பேசிய பேச்சுகளில் பலவகைப் பட்ட கருத்துக்கள், உணர்ச்சி வெளிப்பாடுகள் உள்ளன. பொதுவாக அவரது இயல்பு, மிகையாக உச்சகட்ட வேகம் வெளிப்பட கருத்து சொல்வது. ஆகவே இன்று, அவரைத் தங்கள் விருப்பப் படி சித்தரிப்பது மிக எளிது.*

*எஸ். வி. ராஜதுரை, அ.மார்க்ஸ், கி வீரமணி ஆகியோர் முன் வைக்கும் மூன்று கோணங்களும் அவரது பேச்சுகளில் இருந்து உருவாக்கப் பட்டவை. ஈ.வே. ரா வை ஒரு இந்து ரிஷி எனச் சித்தரிக்கும் பல நூறு மேற்கோள்களைத் திரட்டி ஒருவர் வைத்திருந்ததைப் பார்த்திருக்கிறேன். ஆகவே எஸ். வி. ஆர், அ மார்க்ஸ் ஆகியோரின் முயற்சிகளை ஒருவகை அறிவுத் தொழில் நுட்பங்களாக மட்டுமே நான் பார்க்கிறேன். எனக்கு அவரது வாழ்க்கையும், அவரது செயலின் விளைவுகளும் முக்கியமே. பேச்சுகளை மட்டும் வைத்து மதிப்பிட வேண்டுமென்றால் தமிழ் சரித்திரத்திலேயே பெரிய கலகக்காரர் சாரு நிவேதிதா தான், ஈ.வே.ரா உறை போடக் கூடக் காணாது.*

*ஈ.வே.ரா வின் வாழ்க்கையை வைத்து அவரை ஒரு கலகக்காரர் என்றோ, சமூக அமைப்பை முழுமையாக மறுதலித்தவர் என்றோ சொல்வது வேடிக்கையானது. சொத்து சேர்ப்பது, அச்சொத்தை வாரிசுகளிடம் விட்டுச் செல்ல முனைவது, அதற்காக வயதில் பாதி கூட இல்லாத பெண்ணை மணம் செய்வது, சொந்த சாதியின் எல்லைகளை மீறாமலிருப்பது, ஏன் சொந்த மதத்தின் அடையாளத்தைக் கூடத் துறக்க மறுப்பது என ஈ.வே.ராவின் மனம் ஒரு மரபார்ந்த முறையிலேயே செயல் பட்டுள்ளது .*

*அவரது எழுத்துக்களில் ஒட்டு மொத்தமாக ஒரு ஒழுக்கவாதியின் பார்வையையே காண முடிகிறது -மதத்துக்குப் பதிலாக ஒழுக்கத்தை முன் வைத்தவர் என்று ஈ.வே.ராவை கூறி.விட முடியும். அந்த ஒழுக்கங்கள் பல மரபால், மதத்தால் உருவாக்கப் பட்டவை . அவர் அவற்றின் மூல ஊற்று குறித்தெல்லாம் சிந்தித்ததே இல்லை. எந்த சந்தர்ப்பத்திலும் அவர் மரபான அறம், ஒழுக்கம் சார்ந்த அறிவுரைகளையே தன்னை நாடி வந்தவர்களின் சொந்த வாழ்க்கை குறித்து சொல்லியுள்ளார் .*

*பல நூல்களை இது குறித்து சொல்லலாமென்றாலும் முக்கியமாகச் சொல்லவேண்டிய நூல் கோவை அய்யாமுத்து வின் சுயசரிதை. ஈ.வே.ராவின் நண்பராகவும், குடியரசு வெளியீட்டாளராகவும் இருந்த சர்வோதயத் தலைவர் அவர். அவர் காட்டும் ஈ.வே.ரா மரபான மனப் போக்கும், லௌகீக விவேகமும், சக மனிதர்களிடம் அபாரமான கனிவும்*

*கொண்ட, அதே சமயம் மிகக் கறாரான, துடுக்குத்தனமும் , நிலையற்ற சிந்தனைப் போக்கும். கொண்ட, ஒரு மேலான மனிதர் மட்டுமே.*

*இன்று ஈ.வே.ரா தமிழகத்தில் விமரிசனத்துக்கு அப்பாற்பட்ட பிம்பமாகக் கட்டமைக்கப் பட்டு வருகிறார். படிப் படியாக அவர் குறித்த நினைவுகளும் அப்படியே தொகுக்கப் பட்டுப் பதிவாகும். வரலாறும் அப்படியே சமைக்கப்படும். ஆயினும் சிலராவது இம்மாதிரி படிமச் சமையல்களை மீறி விஷயங்களக் காண முறப்படவேண்டிய அவசியமுள்ளது. ஆனால் இங்கு அறிவு ஜீவிகள் கூட இவ்வாறு உருவாக்கப் படும் கெடுபிடிகளை அஞ்சியே செயல் படுகிறார்கள் .*

*உதாரணமாக ஒரு நிகழ்ச்சி: நான் எவருடைய பட்டப் பெயரையும் குறிப்பிடுவதில்லை. ஆகவே மகாத்மா என்றோ, பெரியார் என்றோ எழுதுவதில்லை. சிலகாலம் முன்பு கன்னட சிந்தனையாளர் டி. ஆர். நாகராஜ் அவர்களை, காலச் சுவடுக்காக பேட்டி கண்டேன். நாகராஜ் ஈ.வே.ராவின் இயக்கத்தில் தொடர்பு கொண்டிருந்து பிறகு தலித் சிந்தனையாளராக ஆனவர். ஈ.வே.ரா மீது மதிப்பை வெளியிட்டு, கூடவே அவர் ஒரு சிந்தனையாளர் அல்ல, பாமரத் தனமான சீர் திருத்தவாதியே, என்றும் கருத்து சொல்லியிருந்தார். தன் பேட்டியில் அவர் ஈ.வே.ரா [E.V.R] என்று மட்டுமே சொல்லியிருந்தார். ஆனால் காலச்சுவடு , பெரியார் என்று போடா விட்டால் இதழுக்கே பிரச்சினை வரும் என்று பயப் பட்டது. அது உண்மையும் கூட. அவர்கள் வற்புறுத்தலுக்கு இணங்கி கடைசியில் ஒரு சமரசமாகப் பெரியார் என்று தான் போட வேண்டி வந்தது. இன்று இம்மாதிரி கெடு பிடிகளை மீறி அவரை, அவரது பங்களிப்பின் ஒட்டு மொத்தத்தை வைத்துத்தான் மதிப்பிட வேண்டும்.*

*ஈ.வே.ரா முற்றிலும் மரபான மனம் கொண்டவர் என்று நான் சொல்ல வரவில்லை. முற்றிலும் மரபை எதிர்த்தவர் என்று சொல்ல முடியாது என்று தான் சொல்கிறேன். யதார்த்த மனம் கொண்ட எவருமே அப்படி எல்லாவற்றையும் தலைகீழாக்க வேண்டுமென்று சொல்லவும் மாட்டார்கள். ஈ.வே.ரா வாய்ப்பந்தல்காரர் அல்ல,செயல்வாதி. அவர் வரையில் எதை நம்பினாரோ அதைச் செய்ய முயன்றவர் அவர். அவ்வகையில் திராவிட இயக்கத்தவரில் அவர் விதி விலக்கு.*

*ஒவ்வொன்றும் அதன் உள்ளார்ந்த பல காரணங்களுடன், ஒரு தொடர்ச்சி நிலையில் தான் இங்கு காணப்படுகிறது. ஒவ்வோரு விஷயமும் ஏராளமான பிற விஷயங்களுடன் கலந்தும் உள்ளது. முழுப்புரட்சி பேசும் மார்க்ஸியர் கூட அதை ஏற்றுத்தான் பேச முடியும்.*

அந்தச் சிக்கலை ஓரளவேனும் புரிந்துகொண்டவன் தான் சீர்திருத்தவாதியாக ஏதேனும் செய்ய முடியும். ஈ.வே.ரா அமைப்புக்கு வெளியே போய்த் தீர்வு காண முயன்றவர். மற்ற அத்தனை பேரும் அமைப்புக்குள்ளேயே தீர்க்க முயன்றவர்கள், என்றெல்லாம் பொத்தாம் பொதுவாகச் சொல்ல என்ன ஆதாரம்? [மேற்கோள் என்றால் காஞ்சி சங்கராச்சாரியாரில் இருந்தே அதேபோல எடுத்துக் காட்டுகிறேன்] இம்மாதிரி பொது சொற்றொடர்களைத் தவிர்த்து விட்டுப்பேச முயல்வது நல்லது.

என்னைப் பொறுத்த வரை ஈ.வே.ரா ஒரு சமூக சீர்திருத்தவாதி மட்டுமே. எல்லா சீர்திருத்த வாதிகளிடமும் மேலான ஒரு சமூகம் குறித்த கனவு இருக்கும். அது எப்போதுமே நடைமுறையிலிருக்கும் அமைப்புக்கு வெளியேதான் இருக்கும். அதை நடைமுறைக்கு கொண்டு வருவதற்குரிய ஒரு குறைந்த பட்ச செயல் திட்டமும் இருக்கும். அத்துடன் அவர்கள் அடிப்படையில் சார்ந்து இருக்கும் ஒரு சமூகப்பின்னணி [அல்லது ஆதரவுத்தளம்] இருப்பதையும் காணலாம். அது அக்காலத்தைய வரலாற்றுச் சந்தர்ப்பத்தால் இயல்பாக உருவாகி வரக்கூடிய ஒன்று

ஒரு சமூகவியல் ஆய்வாளன் அச்சீர்திருத்தவாதியை முற்றிலும் தவிர்த்து விட்டு அவரது எழுச்சியையும், சாதனைகளையும் முழுக்க ஒரு சமூக வர்க்கப் போராட்டமாக மட்டும் காணமுடியும்– ஈ.எம்.எஸ் எப்போதுமே அப்படித் தான் பார்க்கிறார். நாராயண குரு ஈழவப் பின்னணி உடையவர். பூலே மகர்களின் பின்னணி உடையவர். இப்படி அனைத்து சீர்திருத்தவாதிகளைப் பற்றியும் சொல்லலாம். அதே சமயம் அவர்கள் இப்பின்னணியின் உருவாக்கம் மட்டுமே என்று சொல்லும் அணுகு முறைகளை என்னால் ஏற்க முடியவில்லை. இப்பின்னணிக்கு அப்பாலும் அவர்கள் இருக்கிறார்கள். உண்மையில் அவர்களுடைய தனி ஆளுமைக்கும், இப்பின்னணிக்கும் இடையேயான ஒரு மோதல்-சமரசப் புள்ளியாகவே அவர்களின் செயல் பாட்டுத் தளம் அமைகிறது .

நீண்ட காலமாக ஒடுக்கப் பட்ட ஈழவ மக்கள் ஆட்சியிலும், சமூக அதிகாரத்திலும் பங்கு பெறும் பொருட்டுக் கொண்ட சமூக எழுச்சி, நாராயண குருவின் பின்னணியில் உள்ளது. அதை அவர் உருவாக்கினார், அது அவரையும் உருவாக்கியது. இரண்டையும் பிரிக்க முடியாது. அந்த எழுச்சியின் தேவைகளும், விதிகளும் அவரைத் தீர்மானித்தன. கூடவே அவரது தத்துவத் தேடல், தனிப்பட்ட ஆளுமைஅம்சங்களும் அவரை தீர்மானித்தன. அவரது வாழ்க்கை முழுக்க இவ்விரு சக்திகளுக்கும் இடையேயான மோதலும், சமரசமும் மாறி மாறி நடக்கும் வலி மிக்க நாடகத்தை நாம் காணலாம். அவரது

வாழ்க்கை குறித்து, கறாரான வரலாற்றுப் பதிவுகள் பல எழுதப் பட்டிருப்பதனால் நமக்கு இன்று இது தெரிகிறது.

ஈழவர்களுக்கு, மற்ற தீண்டப்படாதாருடன் உள்ள துவேஷத்தை நீக்க, நாராயண குரு தன் வாழ்வின் கடைசிக் கணம் வரை போராடினார். அதில் ஏராளமான மனக் கசப்புகளையும் விரோதங்களையும் கூட அவர் அடைந்தார். ஈழவர்களின் அதிகாரப் போட்டிகளை அவர் தொடர்ந்து காண நேர்ந்தது. அவரது பிரியப்பட்ட மூன்று முக்கிய மாணவர்களும் [நடராஜ குரு, 'புலையன் ' அய்யப்பன், குமாரன் ஆசான்] அவரது இயக்கத்திலிருந்து வெளியேற நேர்ந்தது. இறுதிக் கட்டத்தில் அவரும் வெளியேறினார். இதெல்லாம் தான் நிதரிசனங்கள். எல்லா சீர்திருத்த வாதிகளின் வாழ்க்கையிலும் இந்த போராட்டமும், அவலமும் இருக்கும். உண்மையில் இது இலட்சிய வாதத்துக்கும், யதார்த்தத்துக்கும் இடையேயான போராட்டம்.

ஈ.வே.ரா குறித்து தமிழில் வரலாற்றுப் பதிவுகள் இல்லை, துதிகளே உள்ளன. ஆயினும் அவர் ஏறத்தாழ சமகாலத்தவர், நானே அவரைப் பார்த்து, பேச்சை கேட்டிருக்கிறேன். ஆகவே பல விஷயங்களை நாம் இப்போதும் அறிய முடிகிறது. ஈ.வே.ரா வின் ஆதரவுத் தளம் அவரது அரசியலில் தெளிவாகவே இருக்கிறது. பிராமணரல்லாத உயர் சாதியினர் ஆட்சி மற்றும், சமூக அதிகாரத்துக்காக நடத்திய சமூகப் போராட்டத்தின் பின்னணியே ஈ.வே.ரா வின் இயக்கம். அந்த எல்லையைத் தாண்டிப் போகும் அம்சங்களும் அவரிடமிருந்தன. அவை அந்த அரசியலில் சமரசத்துக்கும் உள்ளாயின. அதிகாரம் கிட்ட நெருங்கியபோது அவரும், நாராயணகுரு போலவே புறக்கணிக்கப் பட்டார்

ஈவேராவின் இயக்கம், பிரிட்டிஷ் அரசதிகாரத்துடன் சமரசம் செய்துகொண்டு, அதற்குக் குற்றேவல் புரிந்தது என்று கூடச் சொல்லலாம். ஆட்சியதிகாரத்தைக் கையாள விரும்பிய உயர் குடியினரால் உருவாக்கப்பட்ட, ஜஸ்டிஸ் கட்சியில் இருந்து உருவானது. அன்று வரி செலுத்துவோர் மட்டுமே வாக்களித்தனர். ஆகவே நிலமும், சொத்தும் வைத்திருந்த பிராமணர் வலுவான சக்தியாக இருந்தனர். அதனால் அந்த இயக்கம் பிராமணரல்லாதார் இயக்கமாக ஆரம்பித்து ஆட்சிக்கு முயன்ற போது ஜஸ்டிஸ் கட்சியாக ஆகியது.

சுதந்திரத்திற்குப் பின்னர் அனைவருக்கும் வாக்குரிமை வந்த போது, பிற பிற்பட்ட சாதியினர் எண்ணிக்கை பலம் காரணமாக அரசியல் சக்தியாக ஆனார்கள். அப்போது ஈ.வே.ராவின் இயக்கம் அவரை மீறி சி.என்.அண்ணாத்துரை தலைமையில் பிற பிற்பட்ட சாதியினர் இயக்கமாக ஆகியது. பிராமணர் வெறுப்பு என்ற கொடியின் கீழ் உயர் சாதி

நிலப் பிரபுக்களையும், குடியானவ சாதிகளையும் இணைக்கவும், அதிகாரத்தை நோக்கி செல்லவும் அது முயன்றது. ஒரு கட்டத்தில் உயர் சாதியினர், பிற பிற்பட்ட சாதியினரின் எண்ணிக்கை பலத்தால் ஓரம் கட்டப்பட்டு முற்றிலும் பிற்பட்ட சாதியினருக்கான அரசியலியக்கமாக அது ஆகியது. இத்தருணத்தில் ஈ.வே.ராவும் அதிகார அரசியலில் ஓரம் கட்டப் பட்டார். அவரது மரணத்துக்குப் பின்னரே அவர் ஒரு புனித தந்தைச் சின்னமாக ஆக்கப் பட்டார்.

தலித்துக்கள் மீதான ஈ.வே.ராவின் அணுகுமுறை இன்று தமிழ் நாட்டில் மிகக் கடுமையாக விமரிசிக்கப் படுகிறது. வரும் காலத்தில் அது மேலும் வலுப்படவே செய்யும். நடைமுறையில் ஈ.வே.ரா தலித்துக்களுக்காக ஏதும் செய்யவில்லை. அவரது ஆதரவுத் தளங்களில் இருந்த கடுமையான சாதிக் கொடுமைகளைத் தடுப்பதற்காகக் குரல் கொடுக்கவோ, திட்டவட்டமான போராட்டங்களில் ஈடுபடவோ இல்லை. பல தலித் போராட்டங்களில் அவர் எடுத்த மேம்போக்கான நிலைப்பாட்டை, இன்று தலித் சிந்தனையாளார்கள் பலர் கடுமையாக விமரிசித்தும் வருகிறார்கள் .

தமிழகத்தில் தலித்துக்கள் தங்களை நேரடியாக அடக்கி ஆண்ட பிற்படுத்தப் பட்ட மக்களிடமிருந்து விடுதலை பெறுவதற்கான எந்த போராட்டத்தையும் அவர் நிகழ்த்தவில்லை. இந்த உண்மையை மறைக்கவே அவர் கேரளத்தில் பங்கு கொண்ட ஒரே போராட்டமான வைக்கம் ஆலய நுழைவுப் போராட்டம் பெரிது படுத்தப் படுகிறது. இங்கே கவனிக்கத் தக்கது என்னவென்றால் வைக்கத்தில் ஆலய நுழைவுக்காகப் போராடியவர்கள் தலித்துக்கள் அல்ல, பிற்படுத்தப் பட்டவர்களான ஈழவர்களே. அவர்களுடன் இணைந்தே ஈ.வே.ரா போராடினார். இந்த உண்மை இங்கே பேசப் படுவதே இல்லை.

தமிழகத்தில் ஈ..வேராவின் அரசியல் பிரவேசத்துக்கு முன்னரே தலித் எழுச்சி உருவாகிவிட்டிருந்தது. அயோத்திதாச பண்டிதர், இரட்டைமலை சீனிவாசன், எம்.சி.ராஜா போன்றவர்கள் அவ்வெழுச்சியின் நாயகர்கள். ஆனால் அந்த எழுச்சியை பிராமணரல்லாத உயர்சாதியினரின் பிராமண எதிர்ப்பு அரசியலுடன் பிணைத்தது வழியாக அதை மழுங்கடித்தார் ஈ.வே.ரா. அவரது கொள்கைகள், பிற்படுத்தப்பட்டவர்கள் அரசியலதிகாரம் நோக்கிச் செல்லத் தோள் கொடுக்கும் சக்தியாக தலித்துக்களை முக்கால் நூற்றாண்டுக் காலம் நிறுத்தி வைத்தன. பிற்படுத்தப்பட்டவர்கள், தலித்துக்களை ஒடுக்குகிறார்கள் என்ற நடைமுறை உண்மையை பிராமண எதிர்ப்பு என்ற ஒற்றைக் கோஷத்தால் மூடி வைத்தது ஈ.வே.ராவின் இயக்கம்

*ஈ.வே.ரா மறைந்து அரை நூற்றாண்டு கழித்து, உருவான தலித் இயக்கங்கள் தங்கள் முன்னோடிகள் நிறுத்தி விட்ட புள்ளியில் இருந்து, ஈ.வே.ரா தொடங்கிய புள்ளியில் இருந்து மீண்டும் புதிதாகத் தொடங்க வேண்டியிருந்தது. இந்த அடிப்படையிலேயே அவர்கள் ஈ.வே.ராவை எதிர்க்கிறார்கள். இன்று தலித் இயக்கங்கள் உருவாகி தலித் விடுதலைக்கான 'உண்மையான' போராட்டங்கள் நடக்கும் போது ஈ.வே.ராவின் ஆதரவுத் தளமே அவர்களின் முதல் எதிரியாக இருப்பதையும், எவரும் காணலாம்.*

*தலித்துக்கள் அறிவும், விவேகமும் சற்று குறைவானவர்கள், அவர்களையும் நாம் சற்று அணைத்துப் போக வேண்டும் என்பதே அவரது பார்வையாக இருந்துள்ளது. இந்த உயர்சாதிப் பார்வையை அவர் தவிர்த்திருக்க முடியாது, அது ஓரளவு அவரது அந்தரங்க நம்பிக்கை, ஓரளவு அரசியல் சமரச நிலைப்பாடு. அவருக்கு ஆதரவுத் தளமாக இருந்த உயர் / நடுத்தர சாதிகளின் நம்பிக்கை அது. அந்த மனப் போக்குக்கு வெளியே அவரால் அதிகம் நகர்ந்திருக்க முடியாது.*

*ஈ.வே.ரா அரசியலுக்கு வருவதற்கு முன்னரே தலித்துக்களின் வரலாற்றுக்கான ஒரு முன் வரைவு பண்டித அயோத்தி தாசரால் முன் வைக்கப்பட்டு பிற இரு தலித் தலைவர்களால் வலுவாக முன்னெடுக்கப் பட்டிருப்பதை இன்று தலித் ஆய்வாளர்கள் நமக்கு எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். தலித்துக்கள் தங்கள் மரபாலோ, குணத்தாலோ இழிந்தவர்கள் அல்ல என்பதே அந்த வரலாறு. அவர்கள் இந்நிலத்தின் பூர்வகுடிகள். நில உடைமையாளர்கள். பழைய பௌத்தர்கள். பௌத்தம் வீழ்ச்சியடைந்த போது நிலம் பிடுங்கப் பட்டு மெல்ல,மெல்ல ஒடுக்கப்பட்ட நிலை அடைந்தவர்கள். இதை அயோத்தி தாசர் ஆதாரங்களுடன் முன்வைத்து பேசியிருக்கிறார். அக்காலத்து மேலை ஆய்வாளர்களான கர்னல். ஆல்காட் போன்றவர்கள் இதை ஏற்றிருக்கிறார்கள்.*

*ஆனால் ஈ.வே.ரா இந்த நம்பிக்கையை, ஒரு போதும் முழு மனதாக ஏற்க வில்லை, என்பதை அவரது மொத்த எழுத்துக்களை வாசிக்கையில் காணலாம். அவரது இயல்புக்கு ஏற்ப அவர் தன் தரப்பை மாற்றி, மாற்றிச் சொல்லியிருந்தாலும் தலித்துக்கள் புராதனமான காலத்தில், பண்பாட்டின் ஆரம்பத்திலேயே, ஆரியர்களின் புராணங்களால் தாழ்த்தப் பட்டவர்கள் ஆக ஆனவர்கள் என்பதே, அவர்களின் கொள்கையாக இருந்துள்ளது.*

*இங்கே ஒரு நிகழ்ச்சியைச் சொல்லவேண்டும். என்னுடைய விஷ்ணுபுரம் நாவல் 1997ல் வெளி வந்த போது, அதில் பத்தாம் நூற்றாண்டில், பறையர்கள் நகர,வீதிகளில் நடமாடும் உரிமையுடன், கோயில்,சேவையில் இருந்ததாக எழுதியிருந்ததை சென்னையில் நடந்த*

ஒரு கூட்டத்தில் அ.மார்க்ஸ் மிகக் கடுமையாக விமரிசித்து அது ஒரு 'இந்துத்துவ அஜெண்டா' என்று குற்றம் சாட்டினார். ''பறையரை ஒருத்தர் 'நீர் பறையரா?' என்று கேட்கிறார். அவர்கள் பறையுடன் கோயிலுக்குள் செல்கிறார்கள். இதென்ன இந்துத்துவ சொர்க்கமா? ஆயிரமாயிரம் ஆண்டுகளாக, இந்து மரபால் அடிமைப்படுத்தப்பட்ட தலித்துக்கள், மனிதர்களாகக் கருதப்பட்டதே கிறித்தவ மிஷனரிகளால்தான். அந்த யதார்த்தத்தை மூடிவைத்து இந்துக்கள் பறையர்களை மதித்தார்கள் என்ற கட்டுக்கதையை இந்நூல் உருவாக்குகிறது' என்றார் அ. மார்க்ஸ்

அப்போது அயோத்தி தாசரின் படைப்புகள் வெளியாகவில்லை. நான் அவர் பெயரையே கேள்விப் பட்டிருக்கவும் இல்லை. ஆனால் நான் அப்படி எழுதியமைக்கான காரணத்தை விளக்கினேன். பறையர்களும், கேரளத்தில் புலையர்களும் நில உடைமையாளர்களாக இருந்தமைக்கான ஆதாரங்கள் உள்ளன. கேரள ஆய்வாளர்கள் விரிவாகவே எழுதியிருக்கிறார்கள். அபிதான சிந்தாமணியில் கூடத் திருவாரூர்க் கோயிலில் பறையர்களுக்கு உள்ளே நுழையும் உரிமை கொடுக்கும் ஆசாரம் உள்ளது என்றும் இது அவர்கள் எப்போதோ உயர்நிலையில் இருந்திருக்க வேண்டும் என்பதற்கான ஆதாரம் என்றும் சொல்லப் பட்டிருக்கிறது. அதனால் தான் எழுதினேன் என்றேன். அ.மார்க்ஸ் அதை ஏற்காமல் மீண்டும், மீண்டும் அது ஓர் இந்துத்துவப் பொய் என்றும், அதை ஈ.வே.ரா 'தோலுரித்து' ஐம்பதாண்டுகள் ஆகின்றன என்றும் சொன்னார். பெரியாரியர்களின் மனப்போக்குக்கு அ.மார்க்ஸின் இந்த அணுகுமுறை சரியான உதாரணம்.

கூட்டம் முடிந்து வெளியே செல்லும்போது ஒருவர் என்னிடம் நான் சொன்னதே உண்மை என்றும் அதற்கு ஆதாரங்கள் ஏராளமாக உள்ளன என்றும், அயோத்திதாசர் என்பவரைத் தெரியுமா, என்றும் கேட்டார். 'இல்லை' என்றேன். 'பாருங்கள் பெயரே தெரியாமல் புதைத்துவிட்டார்கள்' என்று வருந்திய பின் சென்னையில் உள்ளஅன்பு. பொன்னோவியம் என்ற அறிஞரை, நான் சந்திக்கவேண்டும் என்றார். நான் அடுத்த சென்னைப் பயணத்தில் அன்பு. பொன்னோவியத்தைச் சென்று சந்தித்தேன். ஆனால் அவர் உடல்நலம் குன்றியிருந்தமையால் சிறிதளவே பேச முடிந்தது. பின்னர் அயேத்திதாசர் நூல்கள் பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரியால் வெளியிடப்பட்டன.

ஈ.வே.ரா தலித் அரசியலின் அடிபப்டையாக இருக்கும் அவர்களின் வரலாற்றுவாதத்தை ஏற்க.வில்லை. அதை ஒரு மூட.நம்பிக்கை என்றே அவர் எண்ணினார். ஏனென்றால்

அவர் அதை வெளிப்படையாக திட்டவட்டமாக ஏற்றிருந்தால் அவரால் அவரது ஆதரவு வட்டமான பிராமணரல்லாத உயர்சாதியினர் மற்றும் பிற்பட்ட மக்களின் ஆதரவை இழக்க வேண்டியிருக்கும்

இதே போல ஈ.வே.ரா தொழிலாளர் இயக்கங்களுடன் கொண்டிருந்த உறவு குறித்தும், ஆழமான விமரிசனங்கள் எதிர்காலத்தில் வரும் என்று தான் நான் நம்புகிறேன். இன்றைய இடது சாரி கட்சிகள் திராவிட இயக்கம் உருவாக்கியுள்ள உணர்ச்சி வேகங்களை எதிர் கொள்வதை விட அதனுடன் சேர்ந்து போவதே மேல் என்று முடிவு செய்து வெகு நாள் ஆகிவிட்டது . தொழிலாளர் இயக்கங்களில் ஈ.வே.ராவின் உறவு அவரது ஆதரவுத் தளமான நடுத்தர வியாபாரிகள், நிலவுடமையாளர்கள் ஆகியோரின் மனநிலையால் கட்டுப்படுத்தப் பட்டது .

ஈ.வே.ராவின் மீதான என் முக்கிய விமரிசனங்கள் இவற்றின் அடிப்படையிலானவை அல்ல. எந்த சீர்திருத்த வாதியும் அவனது சமூகச் சிந்தனையாலும், வரலாற்று சந்தர்ப்பத்தினாலும் தான் தீர்மானிக்கப் படுகிறான். ஈ.வே.ரா உருவாக்கிய அறிவார்ந்த விவாதத் தளம் மிக மேலோட்டமானது. அவசர முடிவுகளின் அடிப்படையில் அதி மூர்க்கமான செயல் பாடுகளில் இறங்கும் போக்கு கொண்டது. அறிவியக்கத்தின் அடிப்படை விதிகளைப் பாமரத்தனமாக நிராகரிக்கும் இயல்பு கொண்டது என்பதே என் விமரிசனம். அதனால்தான் அவரது இயக்கம் ஒரு அறிவியக்கமாக ஆகாமல் போயிற்று. தமிழின் பொதுவான அறிவுச் செயல்பாடுகளுக்கு ஆழமான பின்னடைவை அது உருவாக்கியது. பல விதமான விமரிசனங்களைத் தொடர்ந்து முன் வைத்த ஒருவர் மீது, இம்மாதிரி ஒரு விமரிசனத்தை முன் வைப்பது ஒன்றும் பெரிய பழி பாவமல்ல என்று தான் நான் எண்ணுகிறேன்.

இவ்வகையில் ஈ.வே.ராவின் முதல் பிரச்சினை அவர் எதைப் பற்றியெல்லாம் பேசினாரோ அதைப்பற்றி அவருடைய ஞானம் மிகக் மிகக் குறைவு என்பதே. அவர் சமத்துவம்,பொதுவுடைமை குறித்துப் பேசுகிறார். அதைப் பற்றிய அவரது அறிவு பாமரத்தனமானது. அவர் ஜாதி குறித்து கடுமையான விமரிசனங்களை முன்வைக்கிறார் அதைப் பற்றி ஒரு குறைந்த பட்ச ஆய்வை அவர் மேற் கொண்டதற்கான தடயங்களை அவரிடம் காண முடியாது. அவர் மதம் குறித்தும், கடவுள் குறித்தும் பேசுகிறார், ஆனால் அவை குறித்த அவரது புரிதல் மிக சாதாரணமானது. அவருக்குச் சமானமான தளத்தில் இயங்கிய பூலே, அம்பேத்கார் ஆகியோரின் விரிவான அசல் ஆய்வுகளை இங்கு சுட்டிக்

காட்டலாம். அதை விட முக்கியமாக அவருக்கு முன்னரே தமிழில் இயங்கிய அயோத்திதாச பண்டிதரின் ஆய்வுகளை.

ஏன் இந்த ஆய்வுகள் தேவை என்ற கேள்வி எழுப்பப் படுகிறது. அடிப்படை ஆய்வுகளின் பலம் கொண்ட செயல் திட்டங்களே நிதரிசனத்துக்கும், வரலாற்றுத் தேவைகளுக்கும் நெருக்கமாக வர முடியும். சாதி என்பது பிராமணச் சதி என்ற ஒற்றை வரியில் புரிந்து கொண்ட ஈ.வே.ரா உண்மையில் சாதியின் எடையின் அடித் தட்டில் நசுங்கிக் கிடந்த தலித்துக்களை ஏமாற்றுகிறார். சாதியைக் கற்பித்தவன் பார்ப்பான். ஆகவே தேவர்களும், நாயுடுக்களும், பார்ப்பானை ஒழிப்பார்கள். தலித்துக்களை தீண்டாமலும் இருப்பார்கள் என்ற விபரீத நிலைமை தமிழ் நாட்டில் உருவாக இதுவே காரணம்..

இரண்டாயிரம் வருடங்களாக இங்கு வேரூன்றியவை மதங்கள். அவற்றுக்கு மிக விரிவான தத்துவ கட்டமைப்பு உள்ளது. அவற்றின் படிமங்களே நம் ஆழ்மனத்தை உருவாக்கியுள்ளன. ஆயிரம் வருடக் கலையிலக்கியப் போக்குகள் அவற்றிலிருந்து முளைத்தவை. போகிற போக்கில் கடவுள்களைத் திட்டினால் மதத்துக்கு ஏதும் ஆகி விடுவது இல்லை. அதுவும் ஈ.வெ.ரா மதம் உருவாகிய குறியீட்டு அமைப்புகளைக் கூட அப்படியே நேரடி அர்த் தம் எடுத்துக் கொண்டு விளாசியவர் . அவர் வாழ்ந்த காலத்திலேயே மதச் சொற்பொழிவளர்கள் அவற்றுக்குத் திட்ட வட்டமான பதிலை அளித்து விட்டார்கள். ஈ.வே.ரா கேட்ட கேள்விகள் மிக மேலோட்டமானவை மட்டுமல்ல அவற்றுக்கு திட்ட வட்டமான பதிலும் மரபில் ஏற்கனவே இருந்தது.கடவுளை *empirical* ஆக நிரூபிக்க முடியுமா என்றார் அவர்.அப்படியானால் *empirical* ஆக நிரூபிக்க முடியாத எல்லாமே பொய்யா,தேவையற்றவையா என்று திருப்பி கேட்கப்பட்ட போது பதில் சொல்ல முடிய வில்லை.

சில வருடங்களுக்கு முன்பு நாகர்கோவிலில் ஒரு தி. க கூட்டம் நடந்தது .அதில் ஈ.வே.ராவின் ஒரு மேற்கோளை சொல்லிப் பேசினார் ஒருவர். 'சரஸ்வதி நாவில் இருக்கிறாள் என்றால் அவள் மலம் கழிப்பது எங்கே ?' நான் போன ஆட்டோ ஓட்டுநரிடம் அவரது கருத்தைக் கேட்டேன். 'இவர்கள் இதயத்தில் குடிகொண்டிருக்கும் அண்ணாவுக்கு அங்கே என்ன கக்கூஸா கட்டி வைத்திருக்கிறார்கள்?'என்றார் அவர். ' சரஸ்வதின்னா ஒரு சக்தி சார்.வீணை நாதத்திலேயும், பாட்டோட அழகிலேயும் அது இருக்குது. நம் நாக்கிலும், புத்தியிலும் அது வரணும்னு ஆசப்படறோம். கும்பிடற வசதிக்காக அத அம்மான்னு சொல்லிக்கிறோம்.வேற மாதிரியும் சொல்லலாம்... அவரு பாவம் வயசானவரு. படிச்சவர் கூட கெடயாது. ஏதோ சொல்லிட்டார். இவரு எம்மே

*படிச்சவர் தானே, இவருக்கு எங்கே போச்சு சார் புத்தி?'' இது தான் தமிழ் நாட்டில்இன்று ஈ.வே.ராவின் இடம்.*

*அதாவது அறிவார்ந்த ஆய்வின் பலம் இல்லாமல் பொதுப் புத்தியால் [பிராமண காங்கிரஸ் தலைவர்கள் மீதுள்ள தனிப் பட்ட கோபங்களாலும்] ஈ.வே.ரா உருவாக்கிய எளிய வாதகதிகள் உடனடியாக உடைத்து எறியப் பட்டன . இந்தியா முழுக்க சனாதனப் போக்குக்கு எதிராக தத்துவப் பரிமாணமுள்ள, வரலாற்றுப் பிரக்ஞை உள்ள ஆழமான விமரிசனங்கள் உருவாயின. அவற்றை இன்றுவரை சனாதன மதம் எதிர் கொள்ள முடியவுமில்லை. நாராயண குரு முதல் அம்பேத்கர் வரை பல உதாரணங்கள் சொல்லலாம். தமிழில் ஈ.வே.ரா உருவாக்கிய சருகு வேலி உடைபட்டதும் சனாதன மதம் விஸ்வரூபம் கொண்டு வளர்ந்துள்ளது. இதை எவரும், இன்றைய தமிழ்ச் சூழலை அவதானித்தால் காணமுடியும்.*

*பதினாறு வருடம் முன்பு பி.கெ. பாலகிருஷ்ணன் [கேரள வரலாற்றாசிரியர் ] சொன்னார். 'இனி தமிழ் நாட்டில் பிராமணர்களுக்கு நல்ல காலம். யாகமும், ஹோமமும் தூள் கிளப்பப் போகின்றன'' . ''ஏன்?'' என்று கேட்டேன். ''எளிமையான ஒரு பிராமண எதிர்ப்பு மட்டுமே அங்கே உருவாக்கப் பட்டுள்ளது. பிராமண தத்துவம் எதிர் கொள்ளப் படவேயில்லை. அங்கே வெள்ளைக்காரன் காலத்தில் பிராமணன் கைப்பற்றிய ஆட்சி அதிகாரத்தை இனி மற்ற சாதியினர் கைப்பற்றியதுமே சமரசம் ஆரம்பித்து விடும். அவர்களுக்காக பிராமணன் யாகம் செய்ய ஆரம்பித்து விடுவான்'' மேற்கொண்டு இதற்கு ஆதாரம் தேவை என்றால் ஸி .ஜெ.ஃபுல்லர் எழுதிய தேவியின் திருப் பணியாளார்கள் என்ற நூலை பார்க்கலாம்.*

*மதமும், பாரம்பரியமும், அன்றாட நம்பிக்கைகளும் பின்னிப் பிணைந்துள்ள நம் சூழலில் மிகுந்த ஆய்வுக்குப் பிறகு நிதானத்துடன் தான் ஒரு சீர்திருத்தக் கோணத்தை முன் வைக்க முடியும். முளைப்பாரி இல்லாத மாரியம்மன் விழா இல்லை. முளைப்பாரி , பல்லாயிரம் வருட விவசாய வாழ்க்கையின் தொடர்ச்சியான விவசாயச் சடங்கு. மாரியம்மன் கோவில்களை இடித்து விட்டு அங்கே கிராமக் கக்கூஸ் கட்டலாம் என்று சொல்வது எளிய விஷயம். அதன் விளைவாக மாரியம்மன், பராசக்தியாக மாறுவதும் பல்லாயிரக் கணக்கான முளைப் பாரித் தட்டுகளை மேல் மருவத்தூருக்குக் கொண்டு போவதும் தான் நடந்தது தமிழ் நாட்டில்.*

முன் வைத்த ஒரு சீர்திருத்தக் கருத்தை, மெல்ல மெல்ல வளர்த்தெடுப்பது அதைவிட முக்கியமான விஷயம். அப்போக்கில் அது பல மாற்றங்களுக்கு உள்ளாகும் என்பது ஓர் உண்மை. அது மக்கள் அக்கருத்தை உள் வாங்கிக் கொண்டதன் விளைவு. .ஈ.வே.ராவைத் தமிழகம் எந்த அளவுக்கு உள்வாங்கிக் கொண்டது? இங்குள்ள தந்தை[முதுமை] வழிபாட்டு மனநிலை அவரை மதிக்கச் செய்தது. தமிழ் இளைஞர்களில் ஒரு சிறு சாரார் இளமையின் ஒரு கட்டத்தில் அவர் மீது எளிய ஈர்ப்பினை அடைந்து சில வருடங்களியே நேர் எதிராகத் திரும்பியும் விடுகிறார்கள். ஈ.வே.ராவின் கருத்துக்கள் முளைக்காத கூழாங்கல் விதைகள்போல இன்று தமிழ்நாட்டு அகநிலத்தில் சிதறிக்கிடக்கின்றன என்பதே உண்மை. அவர் மீது ஏன் தீவிரமான விமரிசனங்கள் எழவில்லை, ஏன் எளிய மரியாதையுடன் எல்லாரும் தாண்டிச்செல்கிறார்கள் என்றால் ஈவேராவை ஏற்றுக் கொண்டு வாழ்க்கையின் பகுதியாக ஆக்கிக் கொள்வதில்லை.

“ தன் தரப்புக்கு வலு சேர்க்கும் விஷயங்களைக்கூட ஈவேரா கற்றுக் கொள்ளவில்லை” என்கிறார் டி ஆர் நாகராஜ்[காலச்சுவடு பேட்டி] . இந்திய மரபிலேயே அழுத்தமான நாத்திக போக்குகள், அவைதீக போக்குகள் பல உள்ளன. அவற்றை அடையாளம் கண்டு தமிழ் மரபின் ஆக்கபூர்வமான கூறுகளுடன் பிணைக்க முயலும் அயோத்தி தாச பண்டிதர் மிக முக்கியமான முன்னுதாரணமாக இங்கு ஏற்கனவே இருந்தார். தத்துவ மேதையாக ஈ.வே.ராவைக் காட்டப் பெரும் பணமும், உழைப்பும் செலவிடப்படும் இன்றும் கூட பலவகையிலும் நவீனத் தமிழின் முதல் தத்துவ சிந்தனையாளரான அயோத்திதாச பண்டிதர் ஏன் அப்படி முன்வைக்கப்படுவது இல்லை?

தமிழ் அறிஞர்களை தேடித் தேடி படித்த எனக்கு அவரது படைப்புகள் தலித் இயக்கங்கள் தலையெடுத்த பிறகே வாசிக்கக் கிடைத்தன என்ற நிதரிசனத்தை ஒரு போதும் நான் மறக்க சித்தமாக இல்லை. தமிழ் பௌத்தம் குறித்த எனது பத்தாண்டு தேடலின் அடிப்படை விடைகளைப் பண்டிதர் அரை நூற்றாண்டுக்கு முன்னரே எழுதி விட்டிருந்தார் என்பதும் அவை மறைக்கப்பட்டன என்பதும் எனக்கு தமிழ் அறிவுத் துறையில் செயல்படும் சாதி மனநிலையின் ஆதாரமாகவே தெரிகிறது . விஷ்ணுபுரம் எழுதுவதற்கு முன்பு அயோத்தி தாச பண்டிதர் கிடைத்திருந்தால் பல தளங்களை விரிவு செய்திருப்பேன் .

ஈ..வே.ரா வின் நடைமுறை வெற்றி அவர் தன் இயக்கத்தை ஜஸ்டிஸ் கட்சியுடன்[பிராமணரல்லாதார் இயக்கத்துடன்] இணைத்துக் கொண்டதில் தான் உள்ளது. சமூக/அரசியல் ரீதியாக தவிர்க்க முடியாத ஒரு தரப்பு அது. இந்தியா முழுக்க அந்தத் தரப்பு வலுப் பெற்று அதிகாரத்தை பிடித்தது. இப்போது இந்திய அரசியல் பிற்பட்ட

[குடியானவ/மேய்ச்சல் ] சாதிகளுக்கு ஆதரவாக உள்ளது. நாளை அது தலித்துக்களுக்கும் பிற்பட்ட சாதிகளுக்கும் இடையேயான ஒரு சம நிலையாக இருக்கும். இவ்வாறு பிற்பட்ட சாதிக்குரிய அரசியல் அலையின் திவலையாக,ஒரு முத்திரையடையாளமாக மட்டுமே ஈ.வே.ரா இன்று முக்கியத்துவம் பெறுகிறார்.

ஈ.வே.ரா திராவிட இயக்கம் முன்வைத்த தமிழ் தேசியம், தமிழ் கலாச்சார அடையாளத்தேடல் முதலியவற்றுக்கு முற்றிலும் எதிரானவர் என்பது ஒரு உண்மை. இன்று திராவிட இயக்க அரசியல் தமிழ் இன அரசியலாக மாற்றப் பட்டுள்ளது. கொள்கை ரீதியாக ஈ.வே.ரா தோற்று, புறக்கணிக்கப் பட்டுள்ளார் என்பதற்கு இதுவே சான்றாகும். இப்போது தன் தெலுங்கு அடையாளத்தை மறக்காத, அவரே தமிழ் இன அரசியலின் தொடக்கப்புள்ளி என்று கூசாமல் வரலாறு திரிக்கப் படுகிறது. அதே சமயம் தமிழ் இன அரசியல் அதன் தீவிரத் தளத்தை அடையும் போது ஈ.வே.ராவே தெலுங்கு ஆதிக்கவாதி என குற்றம் சாட்டப்படும் நிலையும் இங்கு உள்ளது [பார்க்க. குணாவின் திராவிடத்தால் வீழ்ந்தோம்] எப்போது உண்மையிலேயே தமிழின அரசியல் அதிகாரம் நோக்கி நெருங்குகிறதோ அப்போதே ஈ.வே.ராவும் அவர்களால் தூக்கி வீசப்படுவார் என்பதற்கான சான்று அது.

ஈ.வே.ராவை முன்னிறுத்த இன்று நடக்கும் எல்லா முயற்சிகளுக்கும் பின்னால் அரசியல் நோக்கமே உள்ளது என்பது என் புரிதல். உயர்சாதியிலிருந்தும் [எஸ்.வி.ராஜதுரை,வ கீதா,ஆ.இரா. வேங்கடாசலபதி,.ராஜன் குறை ] பிற்படுத்தப்பட்ட சாதியிலிருந்தும்[அ.மார்க்ஸ், எம். எஸ். எஸ். பாண்டியன் ]செய்யப் படும் இம்முயற்சிகள் உருவாகி வரும் தலித் எழுச்சி கண்டு அஞ்சி செய்யப் படுபவை. பிராமணர்களைப் பொது எதிரியாகக் காட்டித் தங்கள் மீதான தலித்துக்களின் அதிருப்தியை சமாளிக்கும் நோக்கம் கொண்டவை. தலித்துக்களைத் தங்கள் தலைமையின் கீழ் சேர்க்கும் பொருட்டு ஈ.வே.ராவைப் பொதுவான தத்துவ வழிகாட்டியாக சித்தரிக்க முயல்பவை.

கிட்டத்தட்ட ஒரே கால கட்டத்தில் ஈ.வே.ரா அவசர அவசரமாக 'மறுகண்டுபிடிப்பு ' செய்யப் பட்டிருப்பது தற்செயலல்ல. ஈ.வே.ராவைத் தத்துவ அறிஞராகச் சொல்லும் போது ஏன் பெரும்பாலானவர்களுக்குச் சிரிப்பு வரவில்லை என்றால் நாம் செத்துப்போன அனைவரையுமே அமரர் ஆகக் காண்பவர்கள் என்பதனால் தான். ஈ.வே.ரா சிலைக்குப் பிறந்த நாளுக்கு மாலை போட்டு சுண்டல் வினியோகித்து வழி படுகிறார்கள் தமிழர்கள். அதைப் போன்ற ஒரு வழிபாடு தான் இதுவும், வேறெதுவும் அல்ல

*தமிழ்ச் சூழலில் ஈ.வே.ரா உருவாக்கிய அறிவார்ந்த வெளிறலை பற்றி ஏராளமாகச் சொல்லலாம். தர்க்க பூர்வ விவாதத்தில் கோபம் எழுவது இயல்புதான். தர்க்கமே இல்லாமல் எளிய ஒற்றை வரியைத் தன் தரப்பாக முன்வைப்பது, அதற்கு எதிராகச் சொல்லப் படும் தர்க்கங்களைக் கூட எளிய ஒற்றை வரியாக மாற்றிக் கொள்வது எனும் போக்கு ஈ.வே.ராவில் இருந்து தமிழ் சூழலில் பரவிய ஒன்று.*

*இரண்டாவது விஷயம், எல்லா அறிவார்ந்த விஷயங்களையும், பாமரத்தனமாகக் குறுக்கி எளிய ஒற்றை வரிகளாக மாற்றிகொள்வது. பேசும் விஷயம் குறித்து அடிப்படை ஆய்வு கூடச் செய்யாமலிருப்பது. இப்போக்கு தமிழில் எதையுமே வசையாக மட்டுமே முன் வைக்க முடியும் என்ற நிலையை ஏற்படுத்தி விட்டது. மாற்றுத் தரப்பை எளிமைப் படுத்துவது போன்று அறிவார்ந்த விவாதத்துக்குத் தீங்கு செய்வது பிறிதில்லை. விவாதத்தை நடத்தவே முடியாது போகும். முடிவில்லாமல் ''ஐயா, நான் சொல்ல வந்தது அதல்ல'' என்று மாற்றுத் தரப்பினர் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும்.*

*உதாரணமாகப் பெரியாரியர்களின் சங்கர மட எதிர்ப்பையே எடுத்துக் கொள்வோம். அந்த மரபார்ந்த சாதியமைப்பின் மீதுள்ள விமரிசனத்தை அப்படியே அவர்கள் அத்வைதம் மீதான விமரிசனமாக ஆக்கி விடுவார்கள். அத்வைதம் ஒரு சாதிய சித்தாந்தம், அதைக் கற்பித்த சங்கரர் சாதியை நம்பினார் என்பதனால் –என் று சொல்வது இன்றைய பெரியாரிய நோக்கு. ஆகவே அது புதைந்து போகவிடுவதே மேல்! பிளேட்டோ முதல் ஹெகல் வரையிலான மேற்கத்திய சிந்தனையாளார்கள் அடிமை முறையில் நம்பிக்கை கொண்டவர்கள். அத்தனை பேரையுமே குழி தோண்டிப் புதைத்து விட்டார்களா? இந்திய மறுமலர்ச்சிக்கால சீர்திருத்தவாதிகளில பலர் அத்வைதிகள். விவேகானந்தர் போன்ற சூத்திரர்கள், நாராயண குரு, அய்யா வைகுண்டர் போன்ற தீண்டப் படாத சாதியினர் ..... தலித்துக்களில் மீட்பின் முதல் செய்தியை கொண்டு சென்ற சுவாமி ஆத்மானந்தா, தலித் துறவியான சுவாமி சகஜானந்தா போல [150 பேரை நான் பட்டியலிட முடியும்] இவர்களெல்லாம் அத்வைதிகளே. இது எப்படி?*

*சங்கரர் குறித்துப் பல வகையான ஐயங்கள் இது வரை பதிவு செய்யப் பட்டுள்ளன. பிரம்ம சூத்திர பாஷ்யம் எழுதிய சங்கரரும், கேரள ஜாதியமைப்பின் இலக்கண கர்த்தா என்று அடையாளம் காட்டப் படும் சங்கரரும், இந்திய சங்கர மடங்களை நிறுவிய சங்கரரும் ஒருவரல்ல என்று ஆய்வாளர்களால் கூறப் படுகிறது. பல ஐதிகங்கள் அவர் பெயரின் வலிமையைப் பயன் படுத்தி கொள்ளும் பொருட்டு உருவாக்கப் பட்டவை. பல நூல்கள் அவர் பெயரில் பிறகு எழுதி சேர்க்கப்பட்டவை. நித்ய சைதன்ய யதி போன்றவர்கள்*

*சௌந்தர்ய லஹரிக்கும், பிற நூல்களுக்கும் இடையே மொழி அமைப்பில் பெரிய கால வேறு பாடு உள்ளது என்று சொல்லியிருக்கிறார்கள். 18 ஆம் நூற்றாண்டில் கூட சங்கரர் பேரில் நூல்கள் எழுதப் பட்டுள்ளன.*

*இப்படிப் பட்ட ஒரு விஷயத்தில் கருத்துக்களை உருவாக்கிக் கொள்வது மிக சிக்கலான விஷயம். ஆனால் இதோ எளிதாக ஒற்றை வரியை உருவாக்கியாகி விட்டது. ஆகவே சங்கரரைப் படிக்க வேண்டிய அவசியமே இல்லை. புதைத்துக் கையைக் கட்டிக் கொள்ள வேண்டியதுதான் மீதி. ஆனால் அம்பேத்கார் அத்வைதத்தைப் படித்தார். ஈ.எம். எஸ் படித்தார். அயோத்தி தாசர் படித்தார். இது தான் ஈ.வே.ரா உருவாக்கிய மனோ பாவத்தின் சரியான உதாரணம்.*

*சங்கரரில் இந்தியப் பௌதிக வாத மரபின் மிகச் சாரமான பகுதி உள்ளடங்கியுள்ளது. அத்வைதத்தின் எதிர்முனை பிற்கால பௌத்த சிந்தனை. பௌத்த சிந்தனை நியாய மரபின் அடிப்படையிலானது. அவ்விவாதத்தினூடாக அத்வைதம் நியாய மரபின் தருக்கக் கட்டுமானத்தை அப்படியே தானும் சுவீகரித்து கொண்டிருக்கிறது. அதே போலத் தூய தருக்கத்தை முன்னிறுத்தும் பௌதிகவாத சிந்தனையான நியாயத்தில் முதல் கட்ட வேதாந்த மரபின் அடிப்படைகள் சில உள்ளடங்கியுள்ளன. சிந்தனையை அதன் விவாத வடிவில் மட்டுமே பயில, மீட்க, தக்க வைக்க முடியும். மார்க்ஸையும் -ஹெகலையும், கிராம்ஷியையும் -குரோச்சேவையும் சேர்த்தே பயில முடியும். மிக எளிமையாக சொல்லப் போனால் பக்தி, சடங்கு ஆகியவற்றுக்கு எதிராக தூய அறிவை முன் வைக்கிறது அத்வைதம். அதனாலேயே அது இந்திய மறு மலர்ச்சிக் கால சீர்திருத்தவாதிகளுக்கு முக்கியமான கருவியாகியது. அத்வைதத்தின் வழியாக, நியாய மரபே அப்பங்களிப்பை நடத்தியது என்றும் சொல்லலாம் .*

*அத்வைதத்தின் எதிர் முனையாகவே இங்கு மார்க்ஸியம் செயல் பட முடியும் என்றே ஈ.எம்.எஸ் சொல்கிறார். அத்வைதத்தை வசதியாக புறக்கணித்து விடலாம். ஆனால் நம் சமூகத்தின் அடிப்படை சிந்தனையில் [மொழியில்] அது வலுவாக உட்கார்ந்திருக்கும் வரை அதை விவாதித்து வென்றடக்கியே ஆகவேண்டும். நமது பழமொழிகளில் கணிசமானவை அத்வைதச் சார்பு கொண்டவை. நமது பக்திப் பாடல்கள் அத்வைத உள்ளடக்கம் உடையவை. ஒரு சிந்தனை காலப் போக்கில் மொழியில் கலந்து விடுகிறது. பிறகு அதன் பாதிப்பு பெரிதும் நனவிலி சார்ந்தது. ஆக அத்வைதம் அல்லது சங்கரர் போன்ற ஒரு வரலாற்று நிகழ்வை அணுகுவதற்கு மிக நுட்பமான பகுப்பாய்வு நோக்கு தேவை. மிக விரிவான வரலாற்று அணுகுமுறை தேவை. ஆனால் ஈ.வே.ரா செய்வது*

அவருக்குத் தெரிந்த சில்லறைத் தகவல்களை வைத்துக் கொண்டு ஆங்காரத்துடன், வன்மத்துடன் மண்டையில் ஓங்கிப் போடுவது மட்டுமே. அது சிந்தனைத் தளத்தில் மிக, மிக ஆபத்தான போக்குகளையே உருவாக்கும். அதன் விளைவே இன்றைய தமிழ்ச் சூழலின் தேக்க நிலை.

அம்பேத்கார் போன்றவர்கள் உருவாக்கியது ஒரு விவாதக்களத்தை. அடிப்படை தருக்கக் கட்டுமானமும் சுயமான ஆய்வுகளும் கொண்டது அது. முரண்படவும் விரிவு படுத்திக் கொள்ளவும் அதில் இடமுண்டு. ஈ.வே.ரா உருவாக்கியது மூர்க்கமான ஒரு வசைப் பாடல் பாணியை மட்டுமே. என்ன தான் சிறப்பான நோக்கங்கள் இருப்பினும் அது நேர் எதிரான விளைவுகளையே தான் உருவாக்கும். ஈ.வே.ராவின் பங்களிப்பு அற்பமானதல்ல என்றே நான் கருதுகிறேன். இறந்த காலத்தின் கைதிகளாக வாழும் பெரும் மக்கள் திரள் உடைய பகுதி தமிழகம். நவீன விஞ்ஞானத் தொழில் நுட்ப, நுகர்வோர் கால கட்டத்துக்கு [முதலாளித்துவ கால கட்டத்துக்கு என கலைச் சொல்லாகக் கூறலாம்] நகர்வதற்கான கருத்தியல் ஆயுதங்கள் சிலவற்றை அவர்களுக்கு உருவாக்கித் தந்த சக்தி மிக்க சமூக சீர்திருத்தவாதி அவர். அவரை நவீனத்துவத்தின் பிரச்சாரகர் என்று சொல்லலாம் . அவரது நோக்கங்களோ,அவரது தனிப் பட்ட மனிதாபிமான நோக்கோ ஐயத்துக்கு உரியவை அல்ல. அவர் ஒரு முக்கியமான வரலாற்று நாயகர் என்றே நான் கருதுகிறேன். ஈ.வே.ரா மூலம் ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மாற்றம் கண்டிப்பாக உருவாகியுமுள்ளது. ஆனால் எது மூட நம்பிக்கை, எது மரபான குறியீட்டுச் செயல்பாடு என்றெல்லாம் தெரியாத ஒட்டு மொத்த மட்டையடி பகுத்தறிவையும், கலாச்சாரம் சார்ந்த ஒரு வகை மூடநம்பிக்கையாகவே மாற்றிவிட்டது.

பெரியாரியர்களின் மனம் எப்படி செயல் படும் என்பதை இக்கட்டுரையில் நான் எழுதியதை என்னை ஒரு பிராமணிய வெறியனாக முத்திரை குத்திய பிறகே அவர்களால் மேற் கொண்டு விவாதிக்க முடியும் என்ற யதார்த்ததை வைத்தே புரிந்து கொள்ளலாம். விவாதங்களை மறுக்கும்,முத்திரை குத்தி வசைபாடும், வெறுப்பை உமிழ்வதையே கருத்துப்போராக எண்ணும் இந்த மூர்க்கம் ஈ.வே.ரா உருவாக்கியது தான்.

நான் என் குரு மரபாகக் கொண்டுள்ள நாராயண குருவின் குருகுலம் என்பது இந்திய ஞான மரபை வேதங்களையும், வேத விரோத ஞான நூல்களையும் எல்லாம் ஒருங்கிணைத்து ஒரு மாபெரும் விவாதக் களனாகக் காணும் போக்கு கொண்டது. அடிப்படையிலேயே பிராமண எதிர்ப்புக் கொண்ட ஓர் அறிவியக்கம் அது. அடிப்படையில் எனக்கு அவைதீக மரபுகள் மீது, குறிப்பாக பௌத்தம் மீது மட்டுமே

*ஓரளவாவது சார்பு நிலை உள்ளது. தமிழில் கடந்த 15 வருடங்களில் என்னளவுக்கு வைதிக மரபை ஆக்க பூர்வமாக விமரிசித்த, அவைதீக மரபைத் தீவிரமாக முன் வைத்த இன்னொரு படைப்பாளி இல்லை. தமிழ் நாட்டில் மட்டுமல்ல இந்தியா முழுக்கவே சனாதன, புரோகித மரபிற்கு மாற்றான அசலான சிந்தனைப் போக்குகள் உருவாக்கப்பட, மறு கண்டுபிடிப்பு செய்யப்பட வேண்டுமென நான் எண்ணுகிறேன்.*

*அத்தகைய அவைதீக மரபு வெகு காலம் இந்தியாவில் வலுவாக இருந்துள்ளது. இந்தியாவின் தத்துவ வெற்றிகளுக்கு முக்கியமான காரணமாக அமைந்தது ,அது உருவாக்கிய விவாத சாத்தியம்தான். [நான் வேத விரோதி என்று என்னை சொல்லிக் கொள்வேன். ஆகவே இங்கு வேத மரபும் இருந்தாகவேண்டும் — டி ஆர் நாகராஜ்] நான் அதைக் கற்று ஆராய்ந்து முன் செல்லவே விரும்புவேன். மாறாக நான் பெரியாரை ஏற்றால் சங்க இலக்கியத்தை, பதஞ்சலி யோக சூத்திரத்தை, திருக்குறளை, நியாய சூத்திரங்களை எல்லாம் முழுமையாக நிராகரிக்க வேண்டியிருக்கும். வேதங்களை கீதையை, கம்பராமாயணத்தை, பாரதியை, அரவிந்தரை, கொளுத்த வேண்டியிருக்கும். பிறகு எனக்கு மிஞ்சுவது ஐரோப்பிய அறிவொளிக் காலத்தின் தூறல்களான சில அரைத் தத்துவவாதிகள் மட்டுமே. மூளை சூம்பிப் போன ஆசாமிகள் அதை மட்டும் ஏற்றுக் கொண்டு வாழ்வதில் எனக்கு பிரச்சினை இல்லை. அது எனக்கு ஒவ்வாது. என் சவாலே வேறு என்று தான் சொல்கிறேன். அந்த முரட்டு மட்டையடி தமிழ்க்கலாச்சாரத்தில் செல்லாக் காசு என நிரூபணமாகி விட்டது என்று தான் சொல்கிறேன்.*

*தமிழகத்தைப் பொறுத்த வரை இங்குள்ள மதம், மொழி அனைத்திலும் சனாதன மரபின் பாதிப்பு அதிகம். தமிழகத்தின் மூல மரபுகள் பல ஒடுக்கப் பட்டுள்ளன. அவற்றை மீட்டெடுப்பதும் நிலை நாட்டுவதும் ஒரு பெரும் கலாச்சாரப் பணி. அது ஒருபோதும் எதிர்மறையான செயல்பாடுகள் மூலம் உருவாகாது. தஞ்சை ஆபிரகாம் பண்டிதரும், அயோத்தி தாச பண்டிதரும் [நாராயணகுருவும், நடராஜ குருவும்] ஆற்றிய ஆக்க பூர்வமான பணிகளே, எனக்கு உத்வேகம் ஊட்டுபவைகளாக உள்ளன. கலை இலக்கியங்களைப் புறக்கணிக்கும், கொச்சையாக மதிப்பிட்டு இழிவுபடுத்தும் மனநிலை அப்பணிக்கு நேர் எதிரான ஒன்று. ஏனெனில் கலை இலக்கிய மரபுகளில் இருந்தே நம் சாராம்சமான கலாச்சார அம்சங்கள், குறிப்பாக தமிழ் கலாச்சாரக் கூறுகள் கண்டடையப் பட முடியும்.*

*ஓர் உதாரணம் சொல்லலாம். இப்போது என் முன் கணிப்பொறி அருகே நான் படித்துக் கொண்டிருக்கும் இரு முக்கிய ஆய்வாளர்களின் ஆய்வுகள் உள்ளன. தஞ்சை ஆபிரகாம்*

*பண்டிதரின் இசை ஆய்வு [வட்டப்பாலை குறித்தது] குமரிமைந்தன் பண்டைத்தமிழ் கால, நில அமைப்பு குறித்து எழுதிய ஆய்வு . இரண்டுமே சோதிடத்தை, குறிப்பாக ராசி சக்கரத்தை முக்கியமான கருவியாகப் பயன்படுத்துபவை. பழந்தமிழரின் அறிதல் முறையை ஆய்வு செய்ய மிக முக்கியமான ஒரு தளம் சோதிடம். அது குறித்து இன்னும் நமக்கு முழுக்கத் தெரியாத நிலையில் உடனடி முன் முடிவுகளுக்கு வருவதை பொறுப்பான ஆய்வாளர் தவிர்க்கிறார்கள் .*

*இன்று சோதிடத்துக்குப் பயன்படுத்தப்படும் ராசி சக்கரம் என்ற அமைப்பு முன்பு தமிழரின் கணித முறையாக இருந்தது என்கிறார் குமரி மைந்தனும், அவரது நண்பரும் ஆய்வாளருமான வெள்ளுவனும். குமரிமைந்தன் ஈ.வே.ரா மீது பிடிப்புள்ளவர் என்றபோதிலும் தமிழ்நாட்டு சோதிட ஆய்வு முறைகளை மூட நம்பிக்கை என எள்ளி நிராகரிக்கக் கூடாது என்கிறார். தமிழக ஆலயங்களின் சடங்குகளை மாற்றக் கூடாது என்கிறார். பண்டைத் தமிழரின் காலக் கணிதமும், வானியலும் அவற்றில் உறைகின்றன என்பது அவரது கூற்று. ஈ.வே.ரா உருவாக்கும் மனோபாவம் இந்த மரபான அறிவுகளை முழுக்கத் துடைப்பத்தால் அள்ளி குப்பையில் போடத் தானே நமக்கு கற்பிக்கிறது?*

*இன்று நாம் சிந்தனைக்கும், கலாச்சாரத்துக்கும் எதிரான ஈ.வே.ராவின் மூர்க்கமான எதிர்மறைப் போக்குகளை தவிர்த்து விட்டு படைப்பூக்கத்துடன் முன்னகர வேண்டிய அவசியம் தான் உள்ளது.*

## *2) பெரியார்-ஒருகடிதம்*

*அன்புள்ள நண்பர், ஜெயமோகன் அவர்களுக்கு, அறிவழகன் அன்புடன் எழுதுவது, தங்கள் மேலான கருத்து என்று ஒன்றை, ஒரு வார இதில் பார்த்தேன், '' தந்தை பெரியாரை நீங்கள் ஒரு தமிழினத் தலைவராக எற்றுகொள்வதில்லை என்று''.*

*அய்யா,நீங்கள் ஏற்றுக்கொண்டாலும், இல்லையென்றாலும் அவர் தமிழினத்தின் இணையற்ற தலைவர் தான், அவர் நேரடியாக தமிழுக்கும், தமிழர்க்கும் செய்த பணிகள் உங்கள் கண்களுக்கு தெரியவில்லை என்றால், அவர் மறைமுகமாக தமிழுக்கும், தமிழர்க்கும், செய்த பணிகளை நான் பட்டியல் இடுகிறேன்.*

*அய்யா, கல்வியும், சமூக நிலைப்பாடும், பொருளாதார வாய்ப்பும் இன்றி தவித்த ஒரு சமூகத்திற்கு அவர் தான் கலங்கரை விளக்கம், அவர் வந்து சொன்ன பிறகு தான் உரிமை என்றால் என்ன, வாய்ப்புகளை பற்றிக்கொண்டு எப்படி நாமும் பொருளாதார, சமூக முழுமை பெற்ற வாழக்கை வாழ முடியும் என்ற உண்மை உணரப்பட்டது,*

*வீதிகளில் நடக்க கூட உனக்கு உரிமை இல்லை என்று காலம் காலமாய் சொல்லப்பட்டு, அதையே உண்மை என்று நம்பிய ஒரு கூட்டம், இல்லை நாமும், நமது குடும்பமும் தலை நிமிர்ந்து இந்த சமூகத்தில் வாழ முடியும் என்ற நம்பிக்கையை அவரது இருப்பு தான் உறுதி செய்தது,*

*கடவுளரின் பெயரால், சந்தியில் நிறுத்தப்பட்டு, சாதியின் பெயரால் சங்கு நெரிபட்டு கிடந்த ஒரு கூட்டம், இல்லை இல்லை எனக்கும் உரிமை இருக்கிறது என்று உணர முற்பட்டதே அய்யாவின் வரவுக்கு பின்னர் தான்.*

*நீங்கள் எல்லாம் அறிந்தவராய் இருக்கலாம், நூல்கள் பல படித்து ஆய்வுகள் பல செய்து அய்யாவை பற்றி அறிந்தவராக இருக்கலாம், ஆனால் எங்களை போன்ற அடிமை குடும்பங்களில் பிறந்து, இன்று நாங்களும் பொருளாதார விடுதலை பெற்று, சமூக விடுதலைக்காக நீண்ட போராட்டத்தில் இருக்கும் போது, எங்களுக்கும் எங்களை*

*போன்ற லட்சோப லட்சம் ஏழை தமிழர்களுக்கும் அவர் தாம் அய்யா தலைவர், எங்களுக்கு மட்டுமில்லை, இன்று தமிழகத்தில் இருக்கும் எந்தவொரு அரசியல் அமைப்புக்கும், தலைவருக்கும் அவர் தான் அய்யா ஈடு இணையற்ற, ஒப்பற்ற தலைவர்...*

*இன்று மட்டுமல்ல, என்றென்றும் அய்யா பெரியார் தான் எங்கள் தமிழினத்தின் ஒரே தலைவர்.*

*வாழ்க பெரியார் புகழ்....*

*அன்புள்ள நண்பருக்கு*

*உங்கள் கோபத்தை நீங்கள் நேரடியாக ஆனால் மரியாதையாகக் காட்டியிருக்கும் விதம் மகிழ்ச்சி அளித்தது.*

*இன்று உங்கள் கடும்சினத்துடன் என்னால் விவாதிக்க முடியாது. ஆனால் நான் சொல்லும் சில விஷயங்களை மட்டும் உங்கள் மனதுக்குள் இப்போது குறித்துக் கொள்ளுங்கள். இன்னும் சற்று நாள் கழித்து, இன்னும் சற்று ஏற்புள்ள மனநிலையில் இவற்றை நீங்கள் யோசித்துப்பார்க்கலாம்.*

*நீங்கள் ஒரு தலித் என நான் ஊகிக்கிறேன் – உங்கள் வரிகளில் இருந்து. ஆகவே அந்தக்கோணத்திலேயே பேசுகிறேன்.*

*இந்திய தலித்துக்களின் நெடிய விடுதலைப்போராட்டத்தை நீங்கள் ஒரே ஒரு மனிதரில் கொண்டுவந்து நிறுத்துகிறீர்கள். உண்மையில் இந்த வரிகளை பல தலித் இளைஞர்கள் சொல்லிக் கேட்டிருக்கிறேன். அவர்கள் அப்படிச் சொல்லும்படிக் கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள்.மீண்டும், மீண்டும் உரக்கச் சொல்வதன்மூலம் அப்படியொரு வரலாறு தமிழகத்தில் கற்பிதம் செய்யபப்ட்டிருக்கிறது. தலித்துக்களின் போராட்ட வரலாற்றைக் கூட பிறரே உருவாக்கி அளிக்கும் தமிழக நிலை பற்றி மட்டும் சற்று சிந்தியுங்கள். அப்படி அளிப்பவர்கள் எவருமே தலித்துக்கள் அல்ல.*

*

நணபரே, மனச்சார்புகள் இல்லாமல் உண்மைதேடும் நோக்குடன் வரலாற்றை எடுத்துப் பார்த்தால் இந்திய நிலமானிய முறையின் [Feudalism] பலியாடுகள் தலித்துக்கள் என்பது தெரியவரும். உலகில் எங்கெல்லாம் நிலமானியமுறை இருந்ததோ அங்கெல்லாம் இதேபோல நிலஅடிமைகள் இருந்திருக்கிறார்கள். நிலஅடிமைகள் இல்லாமல் நிலமானிய முறை இல்லை. ஆகவே நிலஅடிமைகள் இல்லாத நாடோ சமூகமோ உலகில் இல்லை. ஒவ்வொரு அடிமைமுறையும் ஒவ்வொரு வகை. ஒவ்வொரு அமைப்புக்கும் அதற்கான தத்துவங்களும் நம்பிக்கைகளும் உண்டு. இந்திய அடிமை முறை சாதியடிப்படையினால் ஆனது.

நிலமானிய முறை உலகநாகரீகத்தின் வளர்ச்சிப்பாதையில் ஒரு கட்டம். மானுட வரலாற்றின் ஒவ்வொரு கட்டத்திலும் ஒரு சிறப்பும் அதேயளவுக்கு இழிவும் சரிசமமாகக் கலந்திருக்கும். உலகநாகரீகத்தின் தொட்டில்களான எகிப்தும் கிரேக்கமும் குரூரமான அடிமைமுறை மூலம் உருவாக்கப்பட்டவை. ஒவ்வொரு காலகட்டத்துக்கும் அதற்கான இழிவும் அநீதியும் உண்டு. அக்காலகட்டத்தில் அது கண்ணுக்குப் படுவதில்லை. ஒரு அன்றாட யதார்த்தமாகவே தோன்றும்.

உதாரணமாக இன்று இந்தியாவில் நாம் பொருளாதார வளர்ச்சிப்பாதையில் செல்பேசியும் கணிப்பொறியுமாக வாழ்கிறோம். ஆப்ரிக்காவில் காங்கோ, உகாண்டா, எதியோப்பியா போன்ற நாடுகளில் லட்சக்கணக்கானவர்கள் பட்டினியால் மாதக்கணக்கில் வதைபட்டு உடல் உருகி சாகிறார்கள்.நீங்களோ நானோ அதற்காக என்ன செய்தோம்? நாளைய தலைமுறையில் அன்றைய இளைஞன் ஒருவன் நம்மையெல்லாம் மனிதாபிமானமே இல்லாத மிருகங்களாகக் கருதக்கூடும்.

இந்திய நில அடிமைகளான தலித்துக்கள் எப்படி அப்படி ஆனார்கள் என்பதைப்பற்றி விரிவான ஆய்வுகள் இன்று வருகின்றன. பொதுவாக அதிகாரப்போட்டியில் தோற்று நிலம் பிடுங்கப்பட்ட சமூகங்களே அடிமைகள் ஆகின்றன. உதாரணமாக பறையர்கள் ஏதோ ஒரு காலத்தில் தமிழ்நாட்டில் நிலமுள்ள, செல்வாக்கான சாதிகளாக இருந்திருக்கிறார்கள். புலையர்கள் அவ்வாறு கேரளத்தில் இருந்திருக்கிறார்கள்.பின்னர் அவர்கள் நிலம் பறிக்கப்பட்டு அடிமைகளாக ஆனார்கள்.

அயோத்திதாச பண்டிதரைப் பற்றி கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள். தமிழக தலித்துக்களின் எழுச்சியின் முதல் கோட்பாட்டாளர் அவர். தமிழின் முக்கியமான முன்னோடிச் சிந்தனையாளர். அவர் பறையர்கள் பௌத்தர்களாக இருந்தவர்கள் என்றும் பௌத்த மதம் மறைந்தபோது மன்னர்களால் நிலம்பிடுங்கப்பட்டு அடிமைகளாக ஆனார்கள் என்றும் சொல்கிறார். இதேபோன்ற சித்திரமே கேரளத்தில் புலையர்களைப்பற்றியும் உள்ளது.

இரு ஆதாரங்களைச் சொல்கிறேன். ஒன்று, திருவாரூர் ஆலயத்தில் பறையர்களுக்கு உள்ள சிறப்பு உரிமைகளை எடுத்துச் சொல்லும் 'அபிதான சிந்தாமணி' ஆசிரியர் சிங்காரவேலு முதலியார் ஒருகாலத்தில் பறையர்கள் ஆலய உரிமைகளுடன் இருந்தார்கள் என்கிறார். கேரளத்தில் முன்பு பௌத்த ஆலயமாக இருந்த கொடுங்கோளூர் ஆலயத்தில் இன்றும் புலையர்கள்தான் முதல் திருவிழாவை நெல் கொடுத்து நடத்த வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

ஒரு அடிமைமுறை வன்முறையாலும், அதை நியாயப்படுத்தும் கருத்துக்களாலும் உருவாக்கப்படுகிறது. இரண்டுமே இங்கே இருந்தன. தலித்துக்களை தீண்டத்தகாதவர்களாகவும் அடிமைகளாகவும் நிலைநிறுத்தும் கருத்துக்கள் இவ்வாறு உருவாக்கப்பட்டவையே. இக்கருத்துக்கள் நம்பிக்கைகளாக ஆகி , அவற்றில் உள்ள அநீதியே கண்ணில் படாமலாகிவிடுகிறது.மாபெரும் சிந்தனையாளர்கள் கூட இதற்கு விதிவிலக்கல்ல. ஆதிசங்கரர் சாதியமைப்பை ஆதரித்து விவேகசூடாமணியில் எழுதியிருக்கிறார். பிளேட்டோ அடிமைமுறையை ஆதரித்து எழுதினார். அவர்களின் சிந்தனைகள் அடிப்படையானவை. ஆனால் அதில் அன்றைய அநீதியும் கலந்தே உள்ளது. அப்படி தன் காலகட்ட அழுக்குகள் கலக்காத சிந்தனையே உலகில் இல்லை.

ஆகவே ஐரோப்பியர் வரும்வரை இம்முறையில் இருந்த அநீதி இந்தியர்களின் கண்களுக்குப் படவில்லை. ஐரோப்பியர் நிலமானியமுறையும் பண்ணையடிமை முறையும் உச்சபட்சக் கொடூரத்துடன் இருந்த ஒரு காலகட்டத்தைத் தாண்டி வந்துவிட்டிருந்தார்கள். அதற்கு அங்கே பலவகையான சிந்தனைக் கொந்தளிப்புகள் தேவைப்பட்டன. நமது சாதிமுறையின் குரூரத்தை நமக்கு உணர்த்தியவர்கள் மதம் மாற்ற வந்த ஐரோப்பியரே. அவர்களே தலித் விடுதலையின் முதல் விதைகளை பரப்பியவர்கள். அவர்களை – குறிப்பாக கால்டுவெல்லை- அதற்காக நாம் நினைவுகூரவேண்டும்.

ஐரோப்பியர் நம்மை நமக்குக் காட்டிய பின்னர்தான் சமூக சீர்திருத்த அலைகள், மதச் சீர்திருத்த அலைகள் உருவாயின. இந்தியாமுழுக்க தலித் விடுதலைக்கான செய்தி ஓர் அலைபோல பரவியதற்கு இந்தச் சீர்திருத்தவாதிகள் முக்கியமான காரணம். நாராயண குருவை கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள். நமது அண்டை மாநிலமான கேரளத்தில் ஒரு தீண்டத்தகாத சாதியில் பிறந்தவர். அவர் தொடங்கிய பேரியக்கம் அடித்தள மக்களை கல்வி- அரசியல் உரிமை ஆகியவற்றில் முன்னேற்றியது.

நாராயண குருவால் ஊக்கம்பெற்ற சகோதரன் அய்யப்பன், அய்யன் காளி முதலியோர் என் சொந்த மண்ணில் தலித் இயக்கத்தை உருவாக்கினார்கள். இக்காலகட்டத்தில் தமிழகத்தில் தங்கள் வாழ்நாளையே தலித் விடுதலைக்காக செலவிட்ட பல முக்கியமான முன்னோடிகளை நீங்கள் அறிந்திருக்க நியாயமில்லை. சுவாமி சகஜானந்தரை உதாரணமாகச் சொல்கிறேன். இக்காலக்ட்டத்தில் அடிப்படை சிவில் உரிமைகளான கல்வி, பொது இடங்களில் நடமாடுவது ஆகியவையே முக்கியமான இலக்குகளாக இருந்தன.

இதற்கு அடுத்த காலகட்டத்தில்தான் தலித்துக்களுக்கு அரசியல் அதிகாரத்துக்கான குரல் எழுந்தது. அதன் நாயகன் அம்பேத்கர். அவரது பங்களிப்பு முதன்மையானது. இந்தியாவை முழுக்க உள்ளடக்கியது. அணுகி வாசிக்கும்தோறும் என் மனதில் மாபெரும் அறிஞனாகவும் அதைவிட மேலாக ஆன்மீக வழிகாட்டியாகவும் அம்பேத்கர் வளர்கிறார். அதற்கு தனிப்பட்ட முறையில் எழுத்தாளர் பிரேமுக்கு கடன்பட்டிருக்கிறேன்.

ஆனால் அதற்கிணையான பங்களிப்பு காந்திக்கும் உண்டு என்பதே என் எண்ணம். அம்பேத்கர் காந்தியை எதிர்த்து அரசியல் செய்ய நேர்ந்தது. ஆகவே அவர் காந்திமேல் கடுமையான தாக்குதல்களை தொடுத்திருக்கிறார். அவற்றின் அடிப்படையில் காந்திமேல் கடுமையான வெறுப்பை இன்றைய தலித் தலைவர்கள் உருவாக்கியிருக்கிறார்கள். அதற்கான அரசியல் காரணங்கள் பல. காங்கிரஸே பெரும்பாலான தலித் ஓட்டுக்களைப் பெற்று வந்த சூழலில் அதிலிருந்து தலித்துக்களைப் பிரிக்க காங்கிரஸின் அடையாளமான காந்தியை தாக்க வேண்டிய தேவை அவர்களுக்கு இருந்தது.

காந்தியின் பாங்களிப்பு என்பது தலித் அல்லாத உயர்சாதியினரின் மனசாட்சியுடன் தலித்துக்களின் பொருட்டு அவரால் பேச முடிந்தது என்பதே. தலித்துக்கள் இந்த அறுபது வருடத்தில் அடைந்துள்ள விடுதலைக்கான முக்கியமான அரசியல் காரணம் அது.

குறிப்பாகச் சொல்லவேண்டுமானால் இட ஒதுக்கீடு. காங்கிரஸ் அப்போது உயர்சாதியரால்தான் நிறைந்திருந்தது என்பதை நினைவுகூருங்கள். அந்தக் கட்சிதான் தலித்துக்களுக்கான இட ஒதுக்கீட்டை நிறைவேற்றியது. அதற்குக் காரணம் அவர்கள் மேல் காந்தி செலுத்திய அழுத்தமான தார்மீகக் கட்டாயம்தான்.

இந்தியச்சூழலில் தலித் எழுச்சியின் அடுத்த அத்தியாயம் கம்யூனிஸ்டுகளால் எழுதப்பட்டது. தமிழகத்தில் தலித்துக்களின் நில உரிமை, கூலி உரிமை மற்றும் மனித உரிமைக்கான பெரும் போராட்டங்கள் அனைத்துமே கம்யூனிஸ்டுக்கட்சிகளால் நேரடியாக முன்னின்று நடத்தப்பட்டவை. அந்த தீரம் செறிந்த வரலாற்றை நீங்கள் சற்று முயற்சிசெய்தால் கூட அறிந்துகொள்ள முடியும். அதன் தியாகத்தலைவர்களைப்பற்றியும்.

இக்காலகட்டத்தில் தமிழகத்தில் தலித் உரிமைகளுக்காக போராடிய எம்.சி.ராஜா, இரட்டைமலை சீனிவாசன் போன்ற தலைவர்கள் உருவாகி வந்தார்கள். ஆனாலும் கம்யூனிஸ்டுகளே இக்கால தலித்துக்களின் வெகுஜன இயக்கமாக இருந்தார்கள். இன்றைய தலித் ஒருவன் அவர்களின் சேவையை மறுப்பானாகில் அதைவிடக் குரூரமான வரலாற்றுத் துரோகமும் வேறு இல்லை.

இக்காலகட்டத்தில் ஈ.வே.ராவின் திராவிட இயக்கம் தலித் விடுதலைக்கான குரலாக ஒலிக்கவில்லை. அது பிற்படுத்தப்பட்டவர்களின் குரலாகவே ஒலித்தது. சில தருணங்களில் தலித்துக்களுக்கு எதிராகவும் இருந்தது. பல தருணங்களில் மௌனமாக இருந்தது. இந்த வரலாற்று உண்மையை மழுப்பவே இன்று தலையணை தலையணையாக வரலாற்று நூல்கள் எழுதப்படுகின்றன.

தமிழக ஒடுக்கப்பட்ட மக்களின் விடுதலை வரலாற்றை ஈ.வே.ராவில் தொடங்கி ஈ.வே.ராவிலேயே முடிக்கும் ஒற்றைப்படையான கூற்றுக்கள் இப்போது தொடர்ந்து மேடைகளில் முன்வைக்கப்படுகின்றன. அதற்குக் காரணம் இன்று உருவாகிவரும் தலித் அரசியல் எழுச்சியே. இவ்வரலாறுகள் முழுக்கமுழுக்க உள்நோக்கம் கொண்ட திரிபுகள். அவை ஒரு நெடிய தியாக வரலாற்றை மறைப்பவை. ஆகவே முற்றிலும் அநீதியானவை.

*

ஈவேராவின் மீது எந்தவிதமான வெறுப்பும் எனக்கு இல்லை. சொல்லப்போனால் மதிப்பும் மரியாதையும் உண்டு. நான் என் குருவாக எண்ணும் 'நித்ய சைதன்ய யதி' நாராயணகுருவின் வழி வந்தவர். நித்யா துறவு பூண்டபோது அன்று திருச்சியில் இருந்த ஈவேராவைச் சென்றுகண்டு ஆசிபெற்றுத்தான் துறவை மேற்கொண்டார். ஆகவே ஈவேரா என் குருவுக்கு குரு

இந்துமதத்தின் நசிவுப்போக்குகளுக்கு எதிரான போராட்டக்காரராகவே நான் ஈவேராவை கருதுகிறேன். மூடநம்பிக்கைகள், புரோகித ஆதிக்கம் ஆகியவற்றுக்கு எதிரான அவரது போராட்டம் எனக்கு முற்றிலும் உடன்பாடானதே. நான் கடவுள் நம்பிக்கை கொண்டவனல்ல. மதச்சடங்குகள் எதையுமே செய்பவனுமல்ல. முற்றிலும் புரோகித ஆதிக்கத்துக்கு எதிரானவன். என் நாவல்கள் எதை வேண்டுமானாலும் நீங்கள் படித்துப்பார்க்கலாம். ஒரு தொடக்கமாக 'ஏழாம் உலகம்' மட்டும் படியுங்கள். தமிழ்பண்பாட்டின் ஆழத்தையும் வரலாற்றையும் என் 'கொற்றவை' போன்ற நாவல்கள் மூலம் முன்வைத்துவருபவன்.

ஆனால் ஈவேரா மீது எனக்கு சில விமரிசனங்கள் உண்டு. அவர் இருந்திருந்தால் 'நான் நித்யாவின் மாணவன்' என்றுசொல்லி அவரை நேரில் சந்தித்து அவற்றைச் சொல்லியிருப்பேன்.''வாங்க தம்பி '' என எனக்கு ஒரு இருக்கை கொடுத்து அவற்றை அவர் கேட்டிருப்பார். இன்று ஈவேரா பற்றி கூச்சலிடுபவர்களை விடவே நான் அவரை அறிந்தவன், ஒருவகையில் நெருக்கமானவன்.

என் குற்றச்சாட்டு இதுதான். ஈவேரா சமூகத்தின் இயக்கத்தை மிகவும் எளிமைப்படுத்திக் கொண்டார். ஒரு சமூகத்தில் உள்ள கொடியமரபுகளுக்கு பற்பல பொருளியல் காரணங்கள் இருக்கும். வரலாற்றுக் காரணங்கள் இருக்கும். ஏற்கனவே தலித் அடிமையான வரலாற்றைப்பார்த்தோம். அவற்றை வரலாற்றையும் சமூக அமைப்பையும் எல்லாம் கணக்கில் கொண்டு விருப்பு வெருப்பில்லாமல் ஆராய வேண்டும்.

அத்தகைய ஆராய்ச்சிக்குரிய படிப்பும், சுயமான கண்ணோட்டமும் ஈவேராவுக்கு இல்லை. அவர் சங்க இலக்கியம் பற்றி, காப்பியங்கள் பற்றி ஏன் தமிழ் மொழி பற்றிச் சொல்லி இன்று அச்சில் கிடைக்கும் விஷயங்களையே பாருங்கள். அவற்றை இன்று ஈவேராவை ஆதரிப்பவர்கள் எவராவது ஏற்றுக் கொள்வார்களா? தமிழரின் தொன்மை, நாகரீக வெற்றி எதுவுமே அவர் கண்ணுக்குப் படவில்லை. பெரும்பாலும் ஐரோப்பியப் பகுத்தறிவு நோக்கில் அவற்றையெல்லாம் தூக்கி வீசுபவராகவே அவர் இருந்திருக்கிறார்.

ஈவேரா இங்குள்ள எல்லா தீமைகளும் ஒருசில சமூகங்களின் சதிவேலை மட்டுமே என்று எளிதாகச் சொல்லிவிட்டார். அதற்குக் காரணம் அவரது தனிப்பட்ட வெறுப்பு. ஆகவே வெறுப்புதான் வளர்ந்தது. நோயின் காரணம் தப்பாகக் கண்டுபிடிக்கப்பட்டமையால் நோய் நித்தம் வளர்ந்தது.

இன்று தமிழகத்தின் பல பகுதிகளில் தலித்துக்களுக்கு எதிராக கொடிய சாதிக்கலவரம் நடந்த பல ஊர்களுக்கு நான் சென்றிருக்கிறேன். அவையெல்லாம் பிற்படுத்தப்பட்ட சாதிகள் வாழும் ஊர்கள். அங்கே ஒரு பிராமணன்கூட இல்லை. பிராமணியம் சார்ந்த மதமும்கூட இல்லை. பல ஊர்கள் முழுக்க முழுகக் திராவிட இயக்கத்தின் கோட்டைகள்! ஆனால் அம்மக்களுக்கு இருக்கும் தலித் வெறுப்பு என்னை அஞ்ச வைத்தது. அதில் அவர்கள் சமரசத்துக்கே தயாராக இல்லை. ஆனால் அதேயளவுக்கு தீவிரமாக பிராமணர்களையும் வெறுக்கிறார்கள். ஏன் தெரியுமா? பிராமணன் சாதியை தமிழகத்தில் பரப்பி தமிழர்களை பிரித்தானாம்.

உண்மையான எதிரி நிலமானிய முறையின் சமூக அமைப்பும், அதன் நம்பிக்கைகளும்தான். அதனுடன் மட்டுமே போராட வேண்டும். அதையே ஒழிக்க வேண்டும். நாராயணகுரு செய்தது அதையே. அவர் எந்தத் தனிமனிதர்களுடனும் எந்தச் சாதியுடனும் போராடவில்லை. அதன் மூலம் இங்கே தமிழ்நாட்டில் இன்றுகூட நிகழாத மாற்றத்தை அங்கே ஐம்பது வருடம் முன்பே கொண்டுவந்தார். உண்மையான காரணத்தை திசை திருப்பி தன் எதிரியை தலித்துக்களின் எதிரியாக காட்டியதே ஈவேரா செய்த பிழை. இந்த உண்மையை தலித் இயக்கங்கள் கண்டுகொள்ளாத வரை அவர்கள் உண்மையான எதிரியுடன் போரிட முடியாது. ஆம், எதிரி மனிதர்கள் அல்ல. சென்ற காலகட்டம்தான்.

இன்னொன்று ஈவேராவின் இயக்கத்தில் உள்ள எதிர்மறைத்தன்மை. ஒரு சமூக இயக்கம் அப்படி கசப்பையும் வெறுப்பையும் கொட்டியபடி இயங்கினால் தீய விளைவுகளே உருவாகும் என நான் உறுதியாக நம்புகிறேன். ஒரு சமூக சீர்திருத்த இயக்கம் ஒரு மாபெரும் கல்வி இயக்கமாக இருக்கும். நாராயணகுருவின் இயக்கம் அத்தகையது. ஆகவே தான் அங்கே அவ்வியக்கம் சார்ந்து மாப்ரும் அறிஞர்கள், கலைஞர்கள், படைப்பாளிகள் உருவானார்கள்.

மாறாக இன்று 'பெரியாரியர்கள்' என்று சொல்லி பேசிக்கொண்டிருப்பவர்களைப் பாருங்கள். வெறும் வெறுப்பை மட்டுமே எங்கும் எவ்விடத்திலும் கொட்டுகிறார்கள்.

*தங்களுக்கு பிடிக்காதவர்களை எல்லாம் தலித் எதிரிகளாகச் சித்தரித்துவிடுகிறார்கள். ஆக்கபூர்வமாக எதுவுமே இல்லை.*

*யோசித்துப் பாருங்கள். ஒருவன் பெரியார் என்று சொல்லாமல் ஈவேரா என்று சொன்னாலே கோபம் கொள்கிறார்கள்– தனிநபர் வழிபாட்டை கண்டித்த ஈவேராவின் பெயரால்! ஈவேராவின் மாணவர்கள் எவருடைய பெயரையுமே நாம் இன்று சொல்ல முடியாது. கடும் சினம் கொள்கிறார்கள்.இதுதான் சுயமரியாதையா? காந்தி என்றும், இ.எம்.எஸ் என்றும் சொல்லலாம் என்றால் ஏன் ஈவேரா என்று சொல்லக் கூடாது? இந்தப் பகுத்தறிவுகூடவா நமக்கு இல்லை?*

*ஈவேராவின் கருத்தை ஒருவன் விமரிசித்தால் ஈவேராவின் சீடர்களுக்கு கோபம் வருகிறது. வசைபாடுகிறார்கள், தாக்க வருகிறார்கள். ஈவேராவின் கருத்துக்களுடன் எனக்கு உடன்பாடு இல்லை, அவருக்கு தமிழ்ப்பண்பாடு புரியவில்லை என்று சொல்லும் உரிமைகூட தமிழகத்தில் எவருக்கும் இல்லை என்று உண்மையில் ஈவேராவின் நாலைந்து பக்கங்களையாவது படித்தவன் சொல்ல துணிவானா? ஈவேரா தன் மீதான விமரிசனங்களுக்கு என்றுமே இடம் கொடுத்தவர் அல்லவா?*

*நான் மலையாளத்தில் எழுதிய முதல் கட்டுரையே மார்க்ஸிய அறிஞரும் அரசியல்தலைவருமான இ.எம்.எஸ் நம்பூதிரிபாட் பற்றிய கடுமையான மறுப்பும் விமரிசனமும்தான். நான் இ.எம்.எஸ்ஸை சந்திக்க நேர்ந்த சில நிமிடங்களில் என் கட்டுரையை நினைவுகூர்ந்து ஒரு கட்டுரையை எப்படி தீவிரமாக எழுதுவது என எனக்குச் சொல்லித்தந்தார் அந்தப் பேராசான். [கட்டுரையின் மையக்கருத்தே முதல் வரியாக இருக்க வேண்டும்]*

*'தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தால் காணப்படும்' என்றார் வள்ளுவர். இன்றைய பெரியாரியர்களிடம் தெரிவது ஈவேராவின் முக்கியமான குறைபாடுதான். அவர் தனிபப்ட்ட முறையில் ஜனநாயக உணர்வும், மனிதாபிமானமும், அன்பும் கொண்ட மாமனிதராக இருந்தும் எதிர்மறை நோக்கை முன்வைத்தார். அந்நோக்கே இன்று ஒரு சிறு விவாதத்துக்குக் கூட தயாராக இல்லாமல் மேடையில் கூச்சலிட்டு வசைபாடும் பெரியாரியர்களை உருவாக்கியுள்ளது.*

*ஈவேராவை நிராகரிகக் வேண்டுமென நான் சொல்ல மாட்டேன். நாராயண குருவின் மரபினனான எனனல் அதை ஒருபோதும் சொல்ல முடியாது. அவரது இயக்கத்தில்*

இருந்த எளிமைப்படுத்தல்களையும், வெறுப்பையும் களைந்து அதை மேலும் ஆக்கபூர்வமாக ஆக்கவேண்டுமென்றே சொல்கிறேன். அதற்கு அவரை விரிவான விமரிசனத்துக்கு உள்ளாக்க வேண்டும். அப்படிச்செய்ய நாம் அவரை வழிபடும் மனநிலையை துறந்தே ஆகவேண்டும்.

நான் சொன்னவற்றை நீங்கள் மறுக்கலாம். அதற்கு முன் நான் சொல்லியிருக்கும் தகவல்களை மட்டும் சரி பாருங்கள். இன்னும் கொஞ்சம் விரிவாக தெரிந்துகொள்ளுங்கள். பொதுவாக இத்தகைய விவாதத்துக்குப் பதிலாக இங்கே வசைகள் மட்டுமே வருகின்றன. அவதூறுகளும் மிரட்டல்களும் உள்நோக்கம் கற்பித்தல்களுமே கிடைக்கின்றன. ஆகவே இனி இதைப்பற்றி பேசவே வேண்டியதில்லை என்ற முடிவில் இருந்தேன். ஆனாலும் நீங்கள் எழுதியமையால் இக்கடிதம்.

அன்புடன்

ஜெயமோகன்

## *3) திராவிட இயக்கத்தை நிராகரிப்பது ஏன்?-1*

*தி. பொ. கமலநாதன் எழுதிய 'தலித் விடுதலையும் திராவிடர் இயக்கமும்' என்ற நூலை வாசித்துக் கொண்டிருந்தேன் (தமிழில் ஆ. சுந்தரம் எழுத்து பிரசுரம்) அதன் துணைத்தலைப்பு வித்தியாசமாக இருந்தது 'மறைக்கப்படும் உண்மைகளும் கறை படிந்த அத்தியாயங்களும்'.*

*இந்நூலின் வரலாறு ஆர்வத்திற்குரியது 1980 களின் தொடக்கத்தில் பெங்களூரில் இருந்து வெளிவரும் 'தலித் வாய்ஸ்' என்ற ஆங்கில இதழ் திராவிட இயக்கம் தற்போது தலித்துக்களுக்கு எதிராக இருப்பதாகக் கூறி தலையங்கம் ஒன்றை எழுதியது. திராவிட இயக்கம்இன்று தமிழ் நாட்டில் நடக்கும் தீண்டாமை முதலிய சாதிக் கொடுமைகளுக்கு எதிராக எதுவுமே செய்யாமலிருக்கிறது என்று குற்றம் சுமத்தியது.*

*அதற்குப் பதிலாக திராவிட இயக்கத்தின் தலைவர் கி. வீரமணி அவர்கள் ஒரு நீண்ட மறுப்புரை எழுதி அதற்கு அனுப்ப அது வெளியிடப்பட்டது. அதில் திராவிட இயக்கத்தின் வழக்கமான கருத்து வடிவம் முன்வைக்கப்பட்டது. ஒன்று, சாதி வேற்றுமை தீண்டாமை முதலியவை பிராமணர்களால் உருவாக்கப்பட்டு நிலைநிறுத்தப்படுபவை. ஆகவே அதில் பாதிக்கப்படும் அனைவருமே சேர்ந்து பிராமணர்களை எதிர்க்க வேண்டும். பிற்பட்ட சாதியினரும் தலித்துக்களும் சேர்ந்து பிராமண எதிர்ப்பில் ஈடுபட வேண்டும். பிற்படுத்தப்பட்டோர் செய்யும் சாதிகொடுமைகளை பிராமணர்களின் பிரித்தாளும் சதியாக மட்டுமே பார்க்க வேண்டும்.*

*இரண்டாவதாக தலித்துக்களின் விடுதலைக்கான குரல் தமிழ்நாட்டில் திராவிட இயக்கத்தால் தான் உருவாக்கப்பட்டது. ஈ. வே. ரா அவர்கள் நடத்திய வைக்கம் சத்தியாக்கிரகத்திற்குப் பிறகே அத்தகைய விழிப்புணர்ச்சி தமிழ்நாட்டில் ஏற்பட்டது. தலித் விடுதலைக்கான போராட்டங்களை நடத்தியதும், அவர்கள் இன்று அடைந்துள்ள எல்லா நன்மைகளைப் பெற்றதும் திராவிட இயக்கத்தின் வழியாகவே.*

*இவ்விரு கருத்துக்களையும் விரிவாக மறுத்து கமலநாதன் அவர்கள் தலித் வாய்ஸ் இதழுக்கு நீண்ட கடிதம் எழுதினார். நீளம் கருதி அது பிரசுரிக்கப்படவில்லை. ஆகவே அதை அடிக்குறிப்புகள் சேர்த்து நூலாக பிரசுரித்தார். அந்நூலின் தமிழாக்கமே இந்த நூல்.*

*தலித்துக்களை அடிமைப்படுத்தியதிலும் இழிவு படுத்தியதிலும் பிராமணியத்திற்கு உள்ள பங்களிப்பைப் பற்றி கமலநாதன் அவர்களுக்கும் மாற்றுக் கருத்து ஏதும் இல்லை. ஆனால் பிராமணியம் என்ற பொது எதிரியை முன்வைத்து தலித்துக்கள் மீது நேரடியான ஒடுக்குமுறையைச் செலுத்தும் பிற்பட்ட மக்களின் சாதிவெறியை மழுப்ப நினைப்பது தலித் உரிமைப் போராட்டத்திற்கு எதிரானது என்று கமலநாதன் வாதிடுகிறார். தலித் அடையாளத்தை திராவிடம் என்ற அடையாளத்தில் அடக்கி விடமுடியாது என்று கூறுகிறார்.*

*அவரது கூற்றின்படி தலித்துக்கள் அவர்கள் தலித்துக்கள் என்பதனால்தான் பிற்பட்டோர் உட்பட அனைத்து சாதியினராலும் ஒடுக்கப்படுகிறார்கள். ஆகவே அந்த அடையாளத்துடன் அவர்கள் ஒருங்கிணைவதே சிறந்த போராட்ட முறையாக அமையமுடியும். அதற்கு திராவிட இயக்கத்தின் பொதுமைப்படுத்தல்கள் தடையாக ஆகக்கூடும் என்கிறார்.*

*தலித்துகளின் உரிமைக்கான போராட்டத்தை 1920ல் ஜஸ்டிஸ் கட்சி ஆட்சிக்கு வந்தபோதிருந்து ஆரம்பிப்பது என்பது தலித்துகளின் உரிமைக்காகப் போராடிய தலித் தலைவர்களின் பங்களிப்பை குறைத்து மதிப்பிடுவதும் அவமதிப்பதுமாகும் என்று வாதிடுகிறார் கமலநாதன். மிகவிரிவான ஒரு வரலாற்றுச் சித்திரத்தை உருவாக்கிக் காட்டுகிறார். இந்தியாவுக்கு வந்த மிஷினரிகளிடமிருந்து தலித் விடுதலைக்கான கருத்துக்கள் ஆரம்பிக்கின்றன. அயோத்திதாச பண்டிதர், இரட்டைமலை சீனிவாசன், எம். சி. ராஜா ஆகிய தலித் தலைவர்களின் அயராத உழைப்பால் தலித் விடுதலைக்கான கருத்தியல் சட்டகம் உருவாகிறது.*

*உண்மையில் தலித் விடுதலைப் போர் தனித்த இயக்கமாக வளராமல் செய்தது திராவிட இயக்கம். இதை பிற்பட்ட சாதியினரின் நலனுக்கான இயக்கமாக இருந்த திராவிட அரசியலுடன் இணைத்தல் வழியாக அதன் தனித்தன்மையையும் போர்க்குணத்தையும் இல்லாமலாக்கியது. திராவிட இயக்கத்தின் பிடியில் இருந்து விடுபட்ட பின்னரே தமிழ்நாட்டில் மீண்டும் தலித் இயக்கம் உருவாகி முக்கால் நூற்றாண்டு தாண்டிய பிறகும் தலித்துக்கள் மீதான ஒடுக்குதல்கள் அப்படியே இருந்தன. அவர்களின் கோரிக்கைகள் 1930 களில் எப்படி இருந்தனவோ அப்படியே நீடித்தன. அவற்றை 1980 களில் மீண்டும் புதிதாக கிளப்பி, போராட்டங்களை நிகழ்த்த வேண்டிய தேவை இருந்தது. அதன் விளைவாகவே இன்று தமிழகம் முழுக்க பலவகையான தலித் போராட்டங்கள் வேகம் கொண்டிருக்கின்றன.*

*அதாவது தங்களுடைய வரலாற்று ரீதியான போராட்டங்களையும் அதற்காக உருவாக்கிய கருத்துச் சட்டகத்தையும் திராவிட இயக்கம் எடுத்து வெறும் கோஷமாக மாற்றி பொருளிழக்கச்செய்தது என்றும் தங்கள் பிரச்சினைகளுக்காக அது எதையுமே செய்யவில்லை என்றும் தலித்தியக்கம் கூறுகிறது.*

*ஏறத்தாழ இதே வரலாற்றுச் சித்திரத்தை தமிழியர்களும் கூறுவார்கள். தமிழ் மொழி மற்றும் தமிழ்ப்பண்பாட்டின் தனித்தன்மை மறுக்கப்பட்ட ஒரு காலகட்டத்தில் வரலாற்றின் தேவையால் உருவானது தமிழியக்கம். தமிழ்நாடு ஏறத்தாழ 300 ஆண்டுகளாக தமிழரல்லாதவர்களால் ஆளப்பட்டது. தமிழகத்தை ஆண்ட நாயக்கர்களின் ஆட்சியும், மராட்டியர் ஆட்சியும் தமிழ்நாட்டின் பொருளியலுக்கும் மதத்திற்கும் பெரும் பங்களிப்புகளை ஆற்றியிருக்கின்றன. தமிழகத்தில் இன்றுள்ள சாலைகள், சந்தைகள், ஏரிகள் பெரும்பாலானவை இவர்களின் ஆட்சிக்காலத்தில் உருவானவை. இன்று நாம் காணும் தமிழக ஆலயங்கள் பெரும்பாலும் இவர்கள் காலகட்டத்தில் புதுப்பிக்கப்பட்டு எழுந்தவை.*

*ஆனால் இந்த அன்னிய ஆட்சிக்காலத்தில் தமிழ்ப்பண்பாடு புரவலர்களை இழந்து மெல்ல மெல்ல அழிய ஆரம்பித்தது. தமிழிசை கைவிடப்பட்டு மருவி கர்நாடக சங்கீதமாக ஆகியது. தமிழ் இலக்கியங்களை பேணிவந்த தமிழறிஞர் குடும்பங்கள் பேணுநரின்றி அழியவே தமிழ்நூல்கள் மறைந்தன. சம்ஸ்கிருதம் தெலுங்கு முதலியவை முன்னிறுத்தப்பட்டமையால் தமிழ் மொழிக்கலப்பு அடைந்து அதன் அழகை இழந்தது. இக்காலகட்டத்தில் தமிழின் மாபெரும் செவ்வியல் மரபு அனேகமாக மறக்கப்பட்டது. மதத்துடன் இணைந்திருந்த காரணத்தினால் பக்தி மரபு மட்டுமே உயிருடன் எஞ்சியது.*

*இந்திய மறுமலர்ச்சியின் காலகட்டத்தில் இந்தியா முழுக்க கிட்டத்தட்ட ஒரே சமயம் வட்டார மொழிகளைப் பற்றிய விழிப்புணர்வு உருவாகியது. அதே காலகட்டத்தில்தான் தமிழ்குறித்த விழிப்புணர்வு உருவாகியது. ஆங்கிலக்கல்வி மூலம் பண்பாட்டுப் பிரக்ஞை பெற்ற ஒரு புதிய தலைமுறை உருவாகி வந்ததே இதற்கு முதற்காரணம். அவர்கள் தங்கள் பண்பாடு குறித்த இழிவுணர்ச்சியை உதறி பெருமிதத்தைப் பெற ஆரம்பித்தார்கள். விளைவாக தமிழ்ப் பண்பாட்டுச் சின்னங்கள் மீட்கப்பட்டன. அதற்கு அன்று உருவாகி வந்த அச்சு, பதிப்பு முதலிய துறைகளும் உதவி புரிந்தன.*

*தமிழியக்கத்தை மூன்று தளங்களில் நிகழ்ந்த செயல்பாடுகளாகப் பிரிக்கலாம். 1) தமிழ் நூல்களை பதிப்பித்தல் 2) தமிழிசை இயக்கம் 3) தனித்தமிழ் இயக்கம்.*

ஏட்டுச்சுவடிகளில் பேணப்படாது அழியும் நிலையில் இருந்த தமிழ் நூல்களை தேடிக் கண்டுபிடித்து பிழைதிருத்தம் செய்து பொருள் குறிப்பு உருவாக்கி சீராக நூலாக கொண்டு வந்ததே தமிழை மீண்டும் உருவாகிய பெரும்பணி என்று கூறலாம். உ. வே. சாமிநாதய்யரே இப்பணியின் முன்னோடியாவார். சி. வை. தாமோதரம் பிள்ளை, ந. மு. வேங்கடசாமி நாட்டார், வ. உ. சிதம்பரம் பிள்ளை, வெள்ளக்கால் சுப்ரமனிய முதலியார், கெ.என்.சிவராஜ பிள்ளை, மனோன்மணியம் சுந்தரம் பிள்ளை, எஸ். வையாபுரிப் பிள்ளை போன்றவர்களை இத்துறையில் பெரும்பணியாற்றிய முன்னோடிகள் என்று கூறலாம்.

தமிழிசையே கர்நாடக இசையாக மருவியது என்று இலக்கணப்படியும் வரலாற்றின்படியும் நிலைநாட்டுவதும், வழக்கொழிந்து போன தமிழ்ப்பண்ணிசையினை மீண்டும் புத்துருவாக்கம் செய்வதும், தமிழ்ப் பாடல்களை மீண்டும் புழக்கத்திற்குக் கொண்டுவருவதும், தமிழ் பாடல்களை புதிதாக உருவாக்குவதும் தமிழிசை இயக்கத்தின் பணிகள். இதில் முன்னோடி என்று தஞ்சை ஆபிரகாம் பண்டிதரைச் சொல்ல வேண்டும். அண்ணாமலை அரசர், பரிதிமாற் கலைஞர் , விபுலானந்த அடிகள், தண்டபானி தேசிகர், குடந்தை சுந்தரேசனார், கல்கி, டி.கெ.சிதம்பரநாத முதலியார் போல பல முக்கியமான அறிஞர்கள் இத்துறையில் பெரும்பணி ஆற்றியிருக்கிறார்கள்.

தமிழில் மறந்து விட்ட பிறசொற்களை விலக்குவது, தமிழின் தூய சொற்களை புழக்கத்திற்குக் கொண்டு வருவது, தமிழில் புதிய கலைச் சொற்களை உருவாக்குவது ஆகியவை இவ்வியக்கத்தின் பணிகள். மறைமலை அடிகளை இந்த இயக்கத்தின் முன்னோடி, வழிகாட்டி என்று கூறலாம். பரிதிமாற் கலைஞர், ரா. பி. சேதுப்பிள்ளை, திரு. வி. கலியாணசுந்தரனார் போன்றவர்கள் இவ்வியக்கத்தின் முதல்வர்கள்.

தமிழியக்கம் என்பது திராவிட இயக்கத்துடன் எவ்வகையிலும் சம்பந்தம் உடையதாக இருக்கவில்லை என்பதே வரலாறு. தமிழியக்கம் பெரும்பாலும் சைவச் சார்பு உடையது. அதன் முன்னோடிகளில் பலர் காங்கிரஸ் அனுதாபிகளும் கூட. அரசியலில் ஜஸ்டிஸ் கட்சியின் குழந்தையாக உருவாகி வந்ததே திராவிட இயக்கம். ஜஸ்டிஸ் கட்சிக்கு தமிழியக்கத்தில் பெரிய ஆர்வம் இருந்ததில்லை. காரணம் அதில் பெரும்பாலானவர்கள் தமிழர்களல்ல. சொல்லப் போனால் அதற்கு தமிழ் அடையாளமே இருக்கவில்லை. தமிழர், தெலுங்கர், மலையாளிகள் கூடி உருவாக்கிய இயக்கம் அது. அதன் தலைவர்கள் ஆங்கில மோகம் கொண்ட அன்றைய உயர்குடிகள். பிரிட்டிஷ் அரசுடன் ஒத்துழைத்து தங்களுக்கான நலன்களைப் பேணிக்கொள்ள முயன்றவர்கள்.

ஜஸ்டிஸ் கட்சியில் இருந்து திராவிட இயக்கம் உருவான காலத்தில் கூட அதற்கு தமிழியக்கத்தில் ஆர்வம் இருந்ததில்லை. அக்காலத்தல் ஈ. வே. ரா அவர்கள் தீவிரமாக ஆங்கிலத்தை ஆதரிப்பவராகவும் தமிழை காட்டு மிராண்டி பாஷை என்று கூறுபவராகவும் தான் இருந்தார். இது தமிழ் நீசபாஷை என்று கூறிய சனாதனிகளிடமிருந்து எவ்வகையிலும் வேறுபட்ட தரப்பு அல்ல. அந்த தரப்பில் இருந்து தமிழ்ப்பற்றை நோக்கி திடீரென்று ஒரு தாவலை நிகழ்த்தியது திராவிட இயக்கம். அதற்கு சி.என்.அண்ணாத்துரை ஒரு காரணம்.

தமிழியக்கத்தின் ஆரம்பகால அறிஞர்களில் பலர் பிராமணர்கள். ஆனால் விரைவிலேயே பிராமணரல்லாத உயர்சாதியினரின் இயக்கமாக அது மாறியது. குறிப்பாக வேளாளர், முதலியார். இவர்களின் பிராமண எதிர்ப்புப் போக்கு காரணமாக திராவிட இயக்கத்திற்கும் இவர்களில் சிலருக்கும் இடையே ஒரு புரிந்துணர்வு உருவாகியது. ஆனால் அக்காலகட்டத்தில் திராவிட இயக்கத்திற்கும் தமிழியக்கத்திற்கும் நடுவேதான் கடுமையான மோதல்கள் உருவாகி நீடித்தன. தமிழியக்க முன்னோடிகளில் பலர் ஈவேராவை தமிழில் ஈடுபாடற்றவர், தமிழை அழிக்கவந்த கன்னடர் என்றே எண்ணினார்கள், இன்றும் அக்கால கட்டுரைகளில் அந்த விமரிசனங்கள் குவிந்துகிடக்கின்றன.

ஆனால் தமிழியக்கத்தின் ஆயுதங்களை சிறப்பாக பயன்படுத்த ஆரம்பித்த சி. என். அண்ணாதுரை அவர்கள் விரைவிலேயே தமிழியக்கத்திற்கும் திராவிட இயக்கத்திற்குமான முரண்பாடுகளை இல்லாமலாக்கினார். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' போன்ற வரிகள் இந்தச் சமரசத்தின் வழிகளே. திருமூலர் வரியை கூறுவதன் மூலம் பகுத்தறிவையும் இழக்காமல் சைவத்தையும் இழக்காமல் ஒரு சமரசத்தை அண்ணாதுரை மேற்கொண்டார். பின்னர் தமிழியக்கத்தின் எல்லா கோஷங்களையும் திராவிடஇயக்கம் எடுத்தாள ஆரம்பித்தது.

இன்று திராவிட இயக்கம் தமிழியக்கத்தின் எல்லா கடந்த காலச் சாதனைகளுக்கும் உரிமை கொண்டாடுகிறது. தமிழ் நூல்களை மீட்டது, தமிழிசையை வளர்த்தது, தனித்தமிழைப் பரப்பியது எல்லாமே ஈவேரா வில் தொடங்கும் திராவிட இயக்கத்தின் சாதனைகள் என்று இன்று சாதாரணமாக மேடைகளில் பேசுகிறார்கள். தமிழியக்க முன்னோடிகளான உ. வே. சாமிநாதய்யர், ஆபிரகாம் பண்டிதர், மறைமலை அடிகள் போன்றவர்கள் மறக்கப்பட்டு விட்டார்கள்.

ஆனால் உண்மையில் திராவிட இயக்கம் தமிழுக்கு என்ன செய்தது? நிலையாக எதுவுமே செய்யவில்லை என்பதே உண்மை. மேடைகளில் ஆர்ப்பாட்டமாகப் பேசுவதற்கு தனித்தமிழியக்கத்தின் சொல்லாட்சிகளை கடன்பெற்று பயன்படுத்தி வெற்றிக் கண்டது அது. சி. என். அண்ணாதுரை அவர்களின் மேடைமொழி ரா. பி. சேதுப்பிள்ளை, நாவலர் சோமசுந்தர பாரதியார் போன்றவர்களின் அடுக்குமொழிப் பாணியில் இருந்து கடன்பெற்றது என்பதை நாம் காணலாம். அவரை ஒட்டி தமிழை அலங்காரமாகப் பயன்படுத்தும் பேச்சாளர்களின் பெரும் படை ஒன்று கிளம்பியது. அவர்களின் வாரிசுகள் இன்றும் உள்ளனர். இவர்களை வைத்தே தமிழை திராவிட இயக்கம் வளர்த்தது என்ற பாமர நம்பிக்கை உருவாகி நீடிக்கிறது.

தமிழியக்கத்தின் பணியை திராவிட இயக்கம் பரவலாக்கியது, மக்கள்மயமாக்கியது, அதனூடாக தமிழகத்தின் அரசியலில் ஒரு மாற்றத்தை உருவாக்கியது என்பதை மறுக்கமுடியாது. மக்களுக்கு செம்மைமொழியை கொடுப்பதன் வழியாக அவர்களின் ஜனநாயகமயமாதலில் பெரும்பங்கை அது ஆற்றியது என்பதும் அதற்காக தமிழகம் திராவிட இயக்கத்திற்குக் கடன்பட்டுள்ளது என்பதும் உண்மையே

ஆனால் சி.என்.அண்ணாத்துரை, மு.கருணாநிதி போன்றவர்களின் மொழிநடையில் தனித்தமிழ் மிகக்குறைவே என்பதை பலர் கவனிப்பதில்லை. குறிப்பாக சி.என்.அண்ணாத்துரை அவர்களின் ஆரம்பகால பேச்சுகளில் கடினமான சம்ஸ்கிருதச் சொற்கள் புழங்கும். துவஜாரோகணம் போன்ற சொற்களைக்கூட அவரது உரைகளின் அக்கால பதிப்புகளில் காணமுடியும். அன்றும் தனித்தமிழியக்கவாதிகளே நல்ல தமிழ் பேசினார்கள்.

ஒரு மொழி வளரவும் வேர்விடவும் தேவையான அடிப்படைப் பணிகள் எதுவுமே தமிழில் திராவிட இயக்கத்தால் செய்யப்படவில்லை. திராவிட இயக்கம் போல மொழியரசியல் பேசியவர்கள் பதவியில் இல்லாத கேரளத்திலும் கர்நாடகத்திலும் செய்யப்பட்ட பெரும்பணியுடன் ஒப்பிடும்போது இது பரிதாபகரமான யதார்த்தம் என்பது புரியும்.

இந்தியாவுக்குச் சுதந்தரம் கிடைத்ததும் எல்லா இந்திய மாநிலங்களும் மாநில மொழிகளின் வளர்ச்சிக்காக திட்டங்கள் தீட்டி செயல்பட ஆரம்பித்தன. தமிழின் வளர்ச்சிக்காக அன்றைய காங்கிரஸ் அரசு மூன்று அடிப்படையான செயற்திட்டங்களை வகுத்தது. ஒன்று, தமிழை ஆட்சிமொழி ஆக்குவதற்கான கலைச்சொல்லாக்கம் இரண்டு,

பேரகராதி தயாரிப்பு .மூன்று, தமிழில் கலைக்களஞ்சியம் கொண்டுவருதல், இம்மூன்று பணிகளையும் காங்கிரஸ் ஆட்சிக்காலத்தில் செய்து முடித்தார்கள். இன்றும் தமிழில் செய்யப்பட்ட மாபெரும் மொழிவளர்ச்சிப் பணிகளாக அவை நீடிக்கின்றன.

தமிழின் வளர்ச்சிக்கு பணியாற்றியவர்களில் தி. சு. அவினாசிலிங்கம் அவர்களின் பங்களிப்பு மகத்தானது. கல்வியமைச்சராக பணியாற்றிய அவர் அக்காலத்தைய திறன்மிக்க பேரறிஞர்களை எல்லாம் இப்பணிக்கு தன்னுடன் இணைத்துக் கொண்டார். ஏறத்தாழ இக்காலகட்டத்தில் தான் தமிழகத்தின் மாபெரும் ஆரம்பக்கல்வி இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. தமிழகத்தை இன்றும் பிற மாநிலங்களில் இருந்து ஒருபடி முன்னால் நிற்கச் செய்த இயக்கம் அது. தமிழ் ஆரம்பக்கல்வி முதல் உயர்தளம் வரை புத்தெழுச்சி கண்ட காலகட்டம் இதுவேயாகும்.

ஆனால் இன்று இந்தச் சாதனைகளை வரலாற்றில் இருந்து தோண்டி எடுத்து திரும்பத்திரும்பச் சொல்லி நிறுவ வேண்டியிருக்கிறது. திராவிட இயக்கத்தின் ஆர்ப்பாட்டமான மேடையுரைகளிலும் கூசாமல் செய்யப்படும் வரலாற்றுத் திரிப்புகளும் இந்த உண்மைகளை முற்றாகவே மழுங்கச் செய்து விட்டிருக்கின்றன. இன்றும் பெரிய அநீதி என்னவென்றால் காங்கிரஸின் பணி உட்பட இந்த தொடக்ககாலத்து தமிழ் மறுமலர்ச்சியின் சாதனைகளை எல்லாம் திராவிட இயக்கம் தன்னுடையது என்று சொந்தம் கொண்டாடுகிறது என்பதே.

காங்கிரஸ் ஆட்சிக்காலத்தில் உருவாக்கப்பட்ட பேரகராதிக்கு இன்றுவரை ஒரு நல்ல மறுபதிப்பு கொண்டு வர பின்னர் வந்த திராவிட ஆட்சிகளால் இயலவில்லை. தமிழ்ப் பேரகராதிக்கு ஒரு மறு அச்சு கொண்டுவரக்கூட அவற்றால் முடியவில்லை. தமிழ்மொழிக்கு கடந்த ஐம்பதாண்டுக்கால திராவிட ஆட்சியில் செய்யப்பட்டது என எந்த பெரும்பணியும் கிடையாது. இதுவே நம் கண்முன் உள்ள உண்மையாகும்.

அதற்கு மாறாக நிகழ்ந்தது என்ன? எப்போதும் கவற்சியான மேடை உரைகள், விழாக்கள், கொண்டாட்டங்கள், ஆர்பாட்ட அறிவிப்புகள் மட்டுமே நிகழ்ந்தன. பெரும் திட்டங்கள் முன்வைக்கப்படும், ஆனால் அவை ஒரு போதும் எளிய முறையில் கூட நிறைவேற்றப்படாது. திராவிட ஆட்சியில் தமிழுக்கு என்று உருவாக்கப்பட்ட மிகப்பெரிய அமைப்பு என்றால் அது தஞ்சைத் தமிழ் பல்கலைக்கழகம்தான். அது கடந்த கால்நூற்றாண்டில் செய்த சாதனை என்ன என்று கேட்டால் சங்கடமான மௌனமே

பதிலாக அமையும். அறிவிக்கப்பட்ட எல்லா திட்டங்களும் அரைகுறை முயற்சியாக முடிய இன்று செயலற்று பெறும் கட்டிடக்குவியலாக கிடக்கிறது அது.

இதே போன்றுதான் சென்ற காலங்களில் திராவிட இயக்கத்தால் நடத்தப்பட்ட உலகத்தமிழ் மாநாடுகளையும் கூறவேண்டும். பாமரர்கள் தவிர பிறர் எவரும் இந்த மாநாடுகளால் தமிழுக்கு ஏதேனும் நன்மை விளைந்தது என்று கூறமாட்டார்கள். திராவிட இயக்கத்தின் அடிபப்டை இயல்பே பெரும் திருவிழாக்களை நடத்துவதில்தான் இருக்கிறது. கூட்டம் ஆர்பபட்டம் அலங்காரம் என்றே அதன் மனம் செல்கிறது. அழுத்தமான ஆக்கப்பணிகளை அதனால் நீடித்தகால உழைப்புடன் ஆற்ற இயலாது.

பொதுத்தளத்தில் திராவிட இயக்கம் தமிழுக்குச் செய்த பணிகள் அனேகமாக ஏதும் இல்லை. இன்றும் தமிழில் தமிழ்வழிக்கல்வி சாத்தியப்படவில்லை. நேர்மாறாக எங்கும் எதிலும் ஆங்கிலம் மேலோங்கியது திராவிட இயக்க ஆட்சிக்காலத்திலேயே என தமிழியர்களே சொல்கிறார்கள். தமிழகத்தில் மெல்ல மெல்ல தமிழ் அழியும் நிலையிலேயே உள்ளது. தனிப்பட்ட முயற்சிகளினாலேயே தமிழை நிலைநிறுத்தும் பணிகள் நடக்கின்றன. இத்தனை பெரிய இயக்கமும் அரசும் இருந்த போதிலும் கூட அம்முயற்சிகளுக்கு மிக எளிய ஆதரவு கூட அளிக்கப்படவில்லை என்பது அனைவருக்கும் தெரிந்ததே.

திராவிட இயக்கம் செல்வாக்கு பெறுவதற்கு முன்னர் தமிழாராய்ச்சியின் ஒரு பொற்காலம் இருந்தது. உ. வே. சாமிநாதய்யர் முதல் தொடர்ச்சியாக இரண்டு தலைமுறைக்காலம் பிரமிக்கத்தக்க தமிழாராய்ச்சி நூல்கள் வெளிவந்தபடியே இருந்தன. இன்றும் கூட ஒரு தமிழ் வாசகன் அந்த ஆய்வுகளை பார்க்கும்போது அவற்றுக்கு அளிக்கப்பட்டுள்ள ஈடிணையற்ற உழைப்பு அயரச் செய்கிறது. ஆனால் திராவிட இயக்கம் வலுப்பெறும் தோறும் தமிழாய்வு வலுவிழந்தது. தமிழறிஞர்கள் அரசியல்வாதிகளாயினர். அரசியல் வாதிகள் தமிழறிஞர்கள் என்று அறியப்படலாயினர்.

திராவிட இயக்கத்தின் கல்வித்தளச் சாதனை என்றால் நமது கல்விப் புலத்தை முழுமையாகக் கைப்பற்றி அங்கே தமிழாய்வே நிகழாமல் செய்ததுதான். இன்று எந்த ஒரு இந்திய மொழியிலாவது ஒரு வருடத்தில் குறிப்பிடத்தக்க ஒரு ஆய்வுகூட வராத தேக்க நிலை உள்ளது என்றால் அது தமிழில்தான். எப்போதுமே தமிழாய்வுப் புலத்தைக் கூர்ந்து கவனிப்பவன் என்ற முறையில் இந்த வெறுமை எனக்கு பெரும் திகைப்பையே

ஊட்டுகிறது. பழைய ஆய்வுகளை நகல் எடுப்பதே இன்று ஆய்வு என்று ஆகிவிட்டிருக்கிறது.

இன்று தமிழாய்வு நிகழ்வது கல்விப் புலத்திற்கு வெளியே தனிநபர்களின் அந்தரங்கமான ஈடுபாட்டின் விளைவாகத்தான். அவ்வப்போது குறிப்பிடத்தக்க நூல்கள் அவர்களிடமிருந்தே வெளிவருகின்றன. அவர்களில் சிலருக்கு திராவிட இயக்கம் குறித்து நல்லெண்ணம் இருக்கலாம். ஆனால் திராவிட இயக்கத்தில் இருந்து உருவாகி வரும் தமிழாய்வு என்று அனேகமாக ஏதுமில்லை.

மிகச் சாதாரணமான தலைமைத்துதிகள், கொள்கை விளக்கத்துண்டுப் பிரசுரங்களைத்தவிர இன்றுள்ள இருபெரும் திராவிட இயக்க அமைப்புகள் உருவாக்கும் இலக்கியமோ, ஆய்வோ என்ன என்று யோசித்துப் பாருங்கள். ஒரு வாசகனாக இத்தனை பெரிய திராவிட இயக்கம் அதன் பல லட்சம் தொண்டர்கள் பலகோடி ஆதரவாளர்கள் கோடானு கோடி பணம், அரசு அதிகாரம் ஆகியவற்றின் மூலம் உங்களுக்கு வாசிப்பதற்காக உருவாக்கியளித்த நூல்கள் எவை? எத்தனை தத்துவநூல்கள், எத்தனை இலக்கியபப்டைப்புகள்?

எந்த ஒரு மொழியும் அறிவுத்துறைகளின் புதிய போக்குகளை உள்வாங்கிக் கொள்ளும் போதும் இலக்கியம் மூலம் நவீன காலகட்டத்தை எதிர் கொள்ளும்போதும் மட்டுமே வாழும் மொழியாக இருக்க முடியும். திராவிட இயக்கம் அதன் தொடக்கம் முதல் இன்று வரை நவீன இலக்கியத்திற்கு எதிரான சக்தியாகவே இருந்துள்ளது. தமிழில் உருவாகி வந்த நவீன இலக்கியத்தை அது ஒருபோதும் பொருட்படுத்தியதில்லை. இன்றுவரை புதுமைபித்தனின் பெயரை எந்த திராவிட இயக்க அறிவுஜீவியும் கூறியதில்லை.

மாறாக திராவிட இயக்கத்தின் ஆர்வம் தமிழின் வணிக இலக்கியத்தின் உத்திகளை கட்சிப்பிரச்சாரத்திற்குப் பயன்படுத்துவதாகவே இருந்தது. திராவிட இயக்கம் தமிழ்ச் சூழலை முழுக்க மூடியிருந்த சூழலில் அதை மீறி ஒரு சிறிய வட்டத்திற்குள் இலக்கியத்தில் ஈடுபட்டவர்களின் பிடிவாதம் மற்றும் அர்ப்பணம் மூலமே தமிழில் நவீன இலக்கியம் உருவாகி வந்தது. தமிழ் நவீன இலக்கியத்தின் மரபை சிற்றிதழ்கள்தான் உருவாக்கி பேணி முன்னெடுத்தன. மொத்தச் சிற்றிதழ் இயக்கமே திராவிட இயக்கத்தின் பரவலான பெரும் பண்பாட்டுக்கு எதிரான குறுங்குழுச் செயல்பாடுதான்.

*இந்தக் குறுங்குழுவுக்குள் தான் தமிழில் உலக சிந்தனைகள் பேசப்பட்டன. கோட்பாடுகள் இறக்குமதியாயின. அறிவார்ந்த விவாதங்கள் நடந்தன. நீங்கள் இன்று பேசும் தமிழ்க் கலைச்சொற்களில் பெரும்பகுதி உருவாகி வந்தது. நீங்கள் இன்று தமிழின் இலக்கியச் செல்வங்கள் என எவற்றையெல்லாம் முன்வைக்கிறீர்களோ, எவற்றையெல்லாம் ரசிக்கிறீர்களோ அவையெல்லாம் இந்தச் சிறிய வட்டத்தால் உருவாக்கப்பட்டவை மட்டுமே. அவற்றை உருவாக்கியவர்கள் பணமோ அங்கீகாரமோ இல்லாமல் தங்கள் உள்வேகம் காரணமாகவே அவற்றை உருவாக்கினார்கள். எந்தவித கவனிப்பும் இன்றி மறைந்தார்கள். அவர்களின் வட்டத்திற்கு வெளியே தமிழ் தமிழ் என்று வெற்று ஓசையை எழுப்பியபடி ஊடகங்களை, மேடைகளை, கல்விப்புலத்தை நிறைத்து செயல்பட்டுக் கொண்டிருந்தது திராவிட இயக்கம்.*

*இந்த சிறிய அறிவியக்கத்தின் தொடர்ச்சியாக தன்னை உணரும் ஒருவர், இதன் விளைவுகளை அனுபவிக்கும் ஒருவர் ஒருபோதும் திராவிட இயக்கத்தின் மீது நம்பிக்கை கொள்ள இயலாது. பல வருடங்களுக்கு முன்னர் சிற்றிதழ்ச் சூழலுக்குள் திராவிட இயக்கத்தின் பெருமை பேசும் ஒரு சில குரல்கள் ஒலித்தன. உதாரணம் அ. இரா. வெங்கடசலபதி. ஆனால் அவருடைய ஆய்வுகளை நிகழ்த்துவதற்கும் விவாதிப்பதற்குமான களத்தை சிற்றிதழ்ச் சூழல்தான் தன் சிறிய வட்டத்திற்குள் உருவாக்கி அளித்தது. அவர் அந்த வாசகர்களை நம்பித்தான் பேசவேண்டியிருந்தது.*

*மாபெரும் பண்பாட்டு சக்தி என்று அவர் வருணித்த திராவிட இயக்கம் அவருக்கு எளிய ஒரு மேடையைக்கூட உருவாக்க வில்லை. இன்றும் அந்த தளத்தில் அவரைப்போன்ற ஓர் அறிஞருக்கு எந்த இடமும் இல்லை. திராவிட இயக்கமேடை அர்த்தமற்ற வெட்டிப்பேச்சுக்கானதாக மட்டுமே இருந்தது. திராவிட இயக்கம் காங்கிரஸ் ஆட்சியில் தொடங்கப்பட்ட திட்டங்களை முழுமைசெய்யக் கூட முயலவில்லை, தூரனின் கலைக்களஞ்சியம், வையாபுரிப்பிள்ளையின் பேரகராதி முதலிய பெருமுயற்சிகள் மதிக்கப்படவில்லை என்று அவரே கூறினார் பிறகு.*

*திராவிட இயக்கம் மேடைக்குத் தமிழை கொண்டுவந்தது என்று ஒரு பரவலான நம்பிக்கை உள்ளது. உண்மையில் இதுவும் ஒரு மூடநம்பிக்கையே. தமிழில் மேடையுரை என்ற வடிவம் திராவிட இயக்கம் உருவாவதற்கு முன்னரே உருவாகிவிட்டிருந்தது. அதற்கு நாம் பத்தொண்பதாம் நூற்றாண்டு சைவமறுமலர்ச்சி இயக்கத்திற்கே நன்றிக்கடன் பட்டிருக்கிறோம். சைவத்தை வெகுஜன இயக்கமாக ஆக்கும் நோக்குடன் ஏறத்தாழ*

ஐம்பதாண்டுக்காலம் தமிழில் பரவலாக நடைபெற்ற அவ்வியக்கம்தான் தமிழ் மரபின் மாபெரும் பேச்சாளர்களை உருவாக்கியது

தமிழின் மேடையுரையின் முன்னோடி என்று சைவப்பேச்சாளரான ஞானியார் சுவாமிகளையே சொல்லவேண்டும். பின்னர் பெரும்பேச்சாளர்களாக ஆன திரு. வி. கல்யாணசுந்தரனார், மறைமலை அடிகள் போன்றவர்கள் அவரது பாணியை பின்பற்றியவர்களே. வாழ்நாளெல்லாம் ஒருநாள் கூட தவறாமல் மேடையில் பேசியவர் ஞானியார் சுவாமிகள். அடுத்த தலைமுறையில் ரா. பி. சேதுப்பிள்ளை, நாவலர் சோமசுந்தர பாரதியார் முதலியவர்கள். அந்த மரபின் நீட்சியே குன்றக்குடி அடிகளார், புலவர் கீரன் முதலியவர்கள்.

தூயதமிழை அழகிய முறையில் மேடையில் பேசுவதற்கும் பெருவாரியான மக்கள் விரும்பும்படி சொற்பொழிவை எளிமையாகக் கொண்டு செல்வதற்கும் முயன்று பெருவெற்றி பெற்றவர்கள் இவர்கள். திரு. வி. க, மறைமலையடிகள் போன்றவர்களின் சுயசரிதைகளில் இவர்களின் கூட்டங்கள் எத்தனை பெரிய மக்கள் பங்கேற்புடன் நடந்தன என்று பதிவாகியிருக்கிறது. இவர்களின் உரை முறையை தானும் பின்பற்றியவர்தான் திராவிட இயக்கத்தின் ஆகப்பெரிய பேச்சாளரான சி.என்.அண்ணாதுரை அவர்கள்.

மேடைப்பேச்சில் திராவிட இயக்கத்தின் பங்களிப்பு அது செம்மைமொழியை மக்களிடம் கொண்டுசென்றது, அரசியல் கருவியாகப் பயனப்டுத்தியது என்பது மட்டுமே. அதன் சீரிய விளைவுகளுக்கான இடத்தை திராவிட இயக்கத்திற்கு அளிக்கலாம். ஆனால் தமிழின் மேடைப்பேச்சு, செம்மைமொழிப் பயன்பாடு ஆகியவற்றுக்கான முழுப்பொறுப்பையும் திராவிட இயக்கம் எடுத்துக்கொள்வது பிழை.

மரபிலக்கியத்தை ரசிப்பதற்கும் மதிப்பதற்கும் திராவிட இயக்கம் கற்றுத்தந்தது என்பது கூட எந்தவகையில் சரி என்று பார்க்க வேண்டும். தமிழின் பிரம்மாண்டமான இலக்கியமரபில் ஒரு சிறுபகுதியை மட்டுமே திராவிட இயக்கம் கருத்தில் கொண்டது. சங்க இலக்கியம், சிலப்பதிகாரம், குறள் அவ்வளவுதான். தமிழிலக்கிய மரபின் ஆகப்பெரிய இலக்கிய சாதனையும் தமிழ்ப்பண்பாட்டின் மகத்தான பதிவுமான கம்பராமாயணம் திராவிட இயக்கத்தால் இகழ்ந்து ஒதுக்கப்பட்டது. ஈவேரா அவர்களும் அவரது வழிவந்த சி. என். அண்ணாதுரை அவர்களும் கம்பராமாயணத்தை ஆபாச இலக்கியம் என்று வசைபாடினர்.

அவர்களுடைய இலக்கிய நோக்கு மிக எளிய விக்டோரிய ஒழுக்கவியலால் ஆனதாக இருந்தது. அத்தகைய ஒழுக்கவியலை வைத்துக்கொண்டு எந்தப் பேரிலக்கியத்தையும் மதிப்பிட முடியாது, பைபிளைக்கூட புரிந்துகொள்ள முடியாது என்று அவர்கள் உணர்ந்திருக்கவில்லை. அந்த அளவுகோலை வைத்து சங்க இலக்கியத்தையும் நிராகரித்துவிட முடியும் என்றுகூட புரிந்துகொள்ள வில்லை. ஈவேரா அவர்கள் அந்த அளவுகோலை அப்படியே பயன்படுத்தி குறள், சிலப்பதிகாரம் அனைத்தையும் ஒட்டுமொத்தமாக நிராகரித்தபோது சி. என். அண்ணாதுரை அவற்றை மட்டுமாவது தக்கவைத்துக் கொள்வதற்காக தன் அளவுகோல்களை மழுப்பினார்.

தமிழின் பெரும் இலக்கியச் செல்வங்களான சீவகசிந்தாமணி, மணிமேகலை போன்றவை திராவிட இயக்கத்தின் எளிய இலக்கிய அணுகுமுறையால் மூடநம்பிக்கையை வளர்ப்பவை என புறக்கணிக்கப்பட்டன. தமிழின் பிரம்மாண்டமான பக்தி இலக்கிய மரபு முழுமையாக நிராகரிக்கப்பட்டது. சிற்றிலக்கிய காலகட்டம் ஒதுக்கப்பட்டது. காரைக்குடி சா. கணேசன் அமைத்த கம்பன்கழகம் போன்ற அமைப்புகளாலும் டி. கெ. சிதம்பரநாத முதலியார், நீதிபதி மு. மு. இஸ்மாயீல் போன்றவர்களாலும் கம்பராமாயணம் திராவிட இயக்கத்தின் எதிர்பிரச்சார அலையில் இருந்து மீட்கப்பட்டு தமிழர்களின் ரசனையில் அழுத்தமாக நிலைநாட்டப்பட்டது. அவ்வியக்கம் இல்லாமலிருந்திருந்தால் ஒருவேளை கம்பனை ஒரு தலைமுறை தொலைப்பதற்கு திராவிட இயக்கம் காரணமாக அமைந்திருக்கும்.

அதேபோல வைணவ இயக்கத்தாரால் பிரபந்தங்கள் பேணப்பட்டன. சைவத்திருமுறைகள் சைவர்களால் நிலைநிறுத்தப்பட்டன. சேக்கிழாரின் பெரியபுராணத்தை திராவிட இயக்கத்தின் தாக்குதல்களிலிருந்து மீட்கவும் பாரதியை திராவிட இயக்கத்தின் திரிப்புகளில் இருந்து மீட்கவும் தொடர்ச்சியான அறிவியக்கங்கள் தேவைப்பட்டன. இன்று கூட தலைமுறை தலைமுறையாக உருவாகிவரும் ஆய்வாளர்கள் பாரதி குறித்த அவதூறுகளுக்கு ஆய்வுகள் மூலம் பதில் கூறியபடியே உள்ளனர்.

கடைசியாக திராவிட இயக்கம் கடந்த அரைநூற்றாண்டுக்கும் மேலாக வலிந்து முன்னிறுத்திய நூல்களான திருக்குறள், சிலப்பதிகாரம், சங்க இலக்கியம் ஆகியவற்றுக்கு அவ்வியக்கம் இதுவரை உருவாக்கிய ஆய்வுகள் என்ன என்று பார்க்கும் எவரும் ஆழமான அயர்ச்சியை மட்டுமே உணர்வார்கள். குறள் மீது இதுவரை நடந்துள்ள ஆய்வுகளில் முக்கியமான அனைத்துமே திராவிட இயக்கத்திற்கு முன்னரே உருவாகிவிட்டவை.

*குறளுக்கு இன்று கிடைக்கும் தரமான ஒரே ஆய்வுப் பதிப்பு கி. வா. ஜகன்னாதன் அவர்களால் செய்யப்பட்டது.*

*உண்மையில் அவற்றையும் கருத்தில் கொண்டு பார்த்தால் கூட தமிழில் குறள் குறித்து இதுவரை செய்யப்பட்டுள்ள ஆய்வுகள் முற்றிலும் போதாதவை என்பது ஓரளவு ஆய்வு நோக்குடன் அணுகக் கூடிய எவருக்குமே தெரியவரும். குறளுக்கும் இந்திய இலக்கிய மரபுக்கும் இடையேயான தொடர்புகள், குறளுக்கும் சமண மரபுகளுக்கும் இடையேயான தொடர்புகள், குறளுக்கும் இந்திய தர்மசாஸ்திரங்களுக்கும் இடையேயான தொடர்புகள், குறளுக்கும் இந்தியாவின் நாட்டார் நீதி மரபுகளுக்கும் இடையேயான தொடர்புகள் என ஆய்வு செய்யப் படாத பகுதிகள் விரிந்து பரந்து கிடக்கின்றன. ஏன், குறளுக்கும் சீவகசிந்தாமணிக்கும் இடையே உள்ள உறவுகளை இன்றும் ஆராயப்படாத ஒரு களம் தான்.*

*சிலப்பதிகாரம் குறித்து கூறவே வேண்டியதில்லை. இன்றுவரை ஒரு நல்ல ஆய்வுப்பதிப்புகூட சிலப்பதிகாரத்திற்கு இல்லை. ஔவை துரைசாமிப்பிள்ளைக்குப் பின் சங்க இலக்கியம் குறித்து நேரடியான ஆய்வுகளே நிகழவில்லை. முந்தைய ஆய்வுகளை பிரதிசெய்யும் ஆய்வுகளே உள்ளன. சங்க இலக்கியங்களுக்கும் இந்திய தொல் இலக்கியங்களுக்குமான ஒப்பீடு, இந்திய நாட்டாரியல் இலக்கியத்துடன் சங்க இலக்கியத்தை ஒப்பிட்டு ஆராய்தல் போன்ற பெரும்பணிகள் அப்படியே விடப்பட்டிருக்கின்றன. திராவிட இயக்கம் உருவாக்கியதெல்லாம் சில மேலோட்டமான விளக்கஉரைகளை மட்டுமே.*

*பிற ஆய்வுத்தளங்களில் தமிழ்ப் பண்பாடு மற்றும் வரலாற்று ஆராய்ச்சிக்கான முயற்சிகள் எவையும் நிகழவில்லை. இத்தகைய முழுமையான செயலிழப்பு எப்படி ஏன் நிகழ்ந்தது என்பதே கேட்கக் கேட்க ஆற்றாமை எழும் ஒன்றாக உள்ளது. தமிழகத்தின் வரலாற்றாய்வு நீலகண்டசாஸ்திரி, சதாசிவப் பண்டாரத்தார் காலகட்டத்திற்குப் பிறகு எதுவுமே நிகழாமல் உறைந்து விட்டது. அவர்கள் தமிழக வரலாற்றின் ஒரு கோட்டுச்சித்திரத்தை உருவாக்கி கால அட்டவணை போட்டுக் கொடுத்தார்கள். அது ஒரு முன்வரைவு. அதை நுண் வரலாறுகளால் நிரப்பும் பெரும்பணி முற்றிலுமாக கைவிடப்பட்டுவிட்டது.*

*இன்று கல்விப்புலம் சார்ந்து வரலாற்றாய்வே நிகழவில்லை. வரலாற்றாய்வில் அங்கொன்றும் இங்கொன்றுமாக சில தனிநபர் உதிரி முயற்சிகள் மட்டுமே நிகழ்கின்றன.*

ஆனால் உண்மையான வரலாற்றாய்வு என்பது அப்படி தனிமுயற்சிகளால் செய்யபப்ட முடியாது. ஒவ்வொருவரும் ஒரு இடத்தை நிரப்ப ஒரு கூட்ட்டுச்செயல்பாடாக, ஓர் அறிவியக்கமாக வரலாற்றாய்வு நிகழ்த்தப்படவேண்டும். அகழ்வாய்வு,நாணய ஆய்வு, கல்வெட்டாய்வு போன்றவற்றுக்கு மேலாக நாட்டாரியல், மானுடவியல்,சமூகவியல், மொழியியல், குறியியல் போன்ற பலதுறைகளை இணைத்து அந்த ஆய்வுகள் செய்யப்படவேண்டும். அது கல்வித்துறையாலேயே செய்யப்பட முடியும். தமிழில் அதற்கான வாய்ப்புகள் ஏதும் இப்போது தெரியவில்லை.

கடந்த ஐம்பதாண்டுக்காலத்தில் பிரம்மாண்டமான திராவிட இயக்கத்தின் தரப்பில் இருந்து தமிழக வரலாற்றாய்வில் நிகழ்ந்த பங்களிப்பு என்று எதுவுமே கிடையாது. திராவிட இயக்கத்தின் பணி என்று உலக அரங்கில் எடுத்து வைக்கத்தக்க ஒரே ஒரு ஆய்வுநூல்கூட எழுதப்பட்டதில்லை, முன்வைக்கப்பட்டதுமில்லை. சுட்டிக்காட்டும்படியான ஒரே ஒரு திராவிட இயக்க வரலாற்றாசிரியர்கூட கிடையாது என்பதே உண்மை. திராவிடவியல் சார்ந்த ஆய்வுகளை குறிப்பிடும்படிச் செய்த அமைப்பு என்றால் வி.ஐ.சுப்ரமணியம் அவர்களின் முயற்சியால் சந்திரபாபு நாயிடுவின் ஆதரவில் ஆந்திரத்தில் அமைந்த குப்பம் திராவிடப் பல்கலையைதான் சொல்லவேண்டும்.

தமிழகத்தில்தான் இந்தியாவிலேயே அதிகமான அளவுக்கு கல்வெட்டுகள் கண்டடையப்பட்டுள்ளன. இந்தக் கல்வெட்டுகளில் முக்கால்பங்கு இன்னமும் பரிசோதிக்கப்பட்டு நூல்வடிவம் பெறவில்லை. ஆய்வாளர்களும் நிதியும் இல்லை என்கிறார்கள். இக்கல்வெட்டுகளை ஆராய்ந்து வரலாற்று தகவல்களை உறுதிசெய்யும் பெரும்பணி அதற்குப் பின்னர்தான் தொடங்கப்பட முடியும். தமிழக வரலாற்றுடன் சம்பந்தப்பட்ட ஜேசுசபை குறிப்புகள், இலத்தீன், போர்ச்சுகல், ஜெர்மானிய மொழிகளில் ஏராளமாக இன்று பொதுவாசிப்புக்கு வந்துள்ளன. அவை எதுவும் இன்னமும் தமிழில் மொழியாக்கம் செய்யப்படவில்லை. அவை சார்ந்து ஆய்வுகளும் செய்யப்படவில்லை.

தமிழகம் சார்ந்த காலனியாதிக்க காலகட்டத்து ஆவணங்கள் பிரெஞ்சு, டச்சு, ஆங்கில மொழிகளில் ஏராளமாக உள்ளன அவை எதுவும் இன்றும் தமிழில் மொழியாக்கம் செய்யப்படவில்லை. பதினெட்டாம் நூற்றாண்டு முதல் தமிழக ஆலயங்கள், ஆலயச்சொத்துக்கள் குறித்த நீதிமன்ற ஆவணங்கள் பல்லாயிரம் உள்ளன. அவை இன்னமும் மொழியாகம்செய்யபப்டவோ ஆய்வுக்குறிப்புகளாக தொகுக்கப்படவோ இல்லை. வள்லலாரின் அருட்பா மருட்பா வழக்கு சம்பந்தமாக மஞ்சக்குப்பம்

நீதிமன்றத்தில் இருந்து மூல ஆவணங்களை எடுத்து ப.சரவணன் செய்துள்ள ஆய்வு அவை எத்தனை பெரிய பொக்கிஷங்கள் என்பதைக் காட்டுகின்றது.

ஏன், தமிழக வரலாறு சார்ந்து ஆங்கிலத்தில் எழுதப்பட்ட பல நூல்கள் இன்னும் தமிழுக்கு மொழிபெயர்ப்பு செய்யப்படவில்லை. மலையாளத்திலும் கன்னடத்திலும் எல்லாம் இந்த மொழியாக்கங்களை அரசாங்கத்தின் பிரசுரத்துறையே செய்து விடுகிறது. கேரள அரசின் பிரசுரத்துறை கேரளம் குறித்த முக்கியமான நூல்களை அனைத்தையுமே மலையாளத்திற்கு கொண்டு வருகிறது. வருடம்தோறும் கிட்டத்தட்ட நூறு நூல்கள்! அவை மிகப்பெரிய ஓர் அறிவுக்குவை. அத்தகைய அமைப்போ முயற்சியோ நமது அரசு சார்பிலும் செய்யப்படவில்லை. பல்கலை கழகங்கள் சார்பிலும் செய்யப்படவில்லை. இத்தனைக்கும் ‘செம்மொழியா’ன தமிழில் மலையாளத்திற்குச் செலவிடப்படுவதைவிட பத்து மடங்கு அதிகமான தொகை வருடம் தோறும் செலவிடப்படுகிறது.

தமிழகத்தில் மாபெரும் ஆவணச் சுரங்கங்கள் இரண்டு உள்ளன. ஒன்று சென்னையில் உள்ள மக்கின்சி கீழ்த்திசை கைப்பிரதி ஆவண மையம். இன்னொன்று தஞ்சை சரஸ்வதி மகால் ஆவண மையம். இங்குள்ள தமிழ் சார்ந்த ஆவணங்களில் மிகச்சிறு பகுதியே ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டு நூல் வடிவம் பெற்றுள்ளது என்று சொல்லப்படுகிறது. மீதிப் பெரும்பகுதி இன்னமும் தீண்டப்படாமல் தூங்குகின்றது.

ஏன் தமிழின் பொக்கிஷங்கள் என்று சொல்லப்படும் பல மகத்தான ஆக்கங்கள் திராவிட இயக்கம் கோலோச்சிய இந்த அரைநூற்றண்டுக்காலத்தில் மறுபதிப்பே வராமல் மறைந்தன என்றால் என்ன சொல்ல? ஆபிரகாம் பண்டிதரின் கர்ணாமிர்த சாகரம் எத்தனை பதிப்பு வந்திருக்கிறது என்று பார்த்தால் வியப்பே ஏற்படும். விபுலானந்தரின் யாழ்நூல் சிவதாசன் என்ற ஒரு புலம்பெயர்ந்த ஈழத்தமிழ் வணிகரால் பல வருடங்களுக்குப் பின்னர் மறு பதிப்புசெய்யப்பட்டது.

இந்தியாவில் வேறெங்கும் இல்லாத அளவுக்கு மாபெரும் நாட்டார் பண்பாடு உள்ள பகுதி தமிழ்நாடு. தமிழக நாட்டார்கலைகளை மூட நம்பிக்கை சார்ந்தவை என்று திராவிட இயக்கம் புறமொதுக்கி அழிக்கத் தலைப்பட்டது. நாட்டார் கலைகள் அழிந்து அங்கே சினிமா சார்ந்த கேளிக்கைகள் இடம்பிடித்தமைக்கு திராவிட இயக்கத்தின் இந்த முதிரா பகுத்தறிவு வாதம் ஒரு முக்கியமான காரணம்.

ஆனால் திராவிட இயக்கத்தைவிட இறைமறுப்பு கொள்கை கொண்டிருந்த போதிலும் இடதுசாரிகள் நாட்டார்கலைகளை மக்கள் கலைகளாகப் பேணி முன்னெடுத்தனர். நாட்டார்கலைகளை புரிந்து கொள்ளவும் பேணவும் வழியமைத்த கருத்துக்களை உருவாக்கிய முன்னோடி என்று இடதுசாரி ஆய்வாளர் நா. வானமாமலை அவர்களையே குறிப்பிடவேண்டும். பி. எல்.சாமியை தமிழக நாட்டுப்புறவியலின் தந்தை என்றே சொல்லலாம். இன்றும் கூட அவர்களின் ஆய்வுகள் மறுபதிப்புகள் வராமல், அரசு அமைப்புகளால் கவனிக்கபடாமல்தான் உள்ளன.

இத்தனை விரிவாக நான் உருவாக்கும் இச்சித்திரத்தில் கூறப்பட்டுள்ள தகவல்கள் எல்லாமே மிக அடிப்படையானவை. எவரும் எளிதாக உறுதிசெய்து கொள்ளக் கூடியவை. தமிழகத்தில் கடந்த ஐம்பதாண்டுக்காலத்தில் பண்பாட்டுக்கும் மொழிக்கும் பெரும் பங்களிப்பாற்றியவர்கள் அத்தனை பேருமே திராவிட இயக்கத்தால் புறக்கணிக்கப்பட்டவர்கள். இவர்கள் திராவிட இயக்கத்தின் பேரலையை மீறி, புகழோ பணமோ பெறாமல் தங்கள் சுய அர்ப்பணிப்பால் மட்டுமே தங்கள் பணியை ஆற்றியவர்கள். இவர்களை எல்லாம் நான் அங்கீகரித்து இவர்களின் நீட்சியாக என்னை நிறுத்திக்கொள்ள விழைகிறேன். ஆகவே தான் திராவிட இயக்கத்தை நிராகரிக்கிறேன்

## *4) திராவிட இயக்கத்தை நிராகரிப்பது ஏன்? 2*

*அப்படியானால் திராவிட இயக்கத்தை ஓர் எதிர்மறைச் சக்தியாக, அழிவு சக்தியாக கருதுகிறேனா? இல்லை. அது ஒரு வரலாற்று நிகழ்வு அதன் காரணத்தையும் விளைவுகளையும் புரிந்து கொள்ள முயல்கிறேன். திராவிட இயக்கம் எனது பார்வையில் ஒரு 'பரப்பிய' இயக்கம் (Populist movement) பரப்பியம் என்ற சொல் ஒரு மார்க்சிய கலைச்சொல். அதற்குப் பொருள் 'ஆழமான கொள்கையும், சமூகத்தைப் புரிந்து கொள்ளும் கோட்பாட்டு முறையும் இல்லாமல் சமூகத்தில் ஏற்கனவே இருந்து கொண்டிருக்கும் உணர்ச்சிகளைப் பயன்படுத்திக் கொண்டு அரசியலதிகாரத்தை பிடிக்க முயலும் இயக்கம்' என்பதாகும். திராவிட இயக்கத்தைப் போல அந்த வரையறை கச்சிதமாகப் பொருந்தும் இன்னொரு இயக்கம் இந்தியாவில் இல்லை.*

*திராவிட இயக்கம் பேசிய எந்த ஒரு கொள்கையையும் கோட்பாட்டையும் அது உருவாக்கவில்லை. அவற்றை தீவிரமாகவும் ஆத்மார்த்தமாகவும் அது முன்வைக்கவும் இல்லை. அது அனைத்தையும் பிற சமூக, அரசியல் இயக்கங்களில் இருந்து எடுத்துக் கொண்டது. அவற்றை வெகுஜன கோஷங்களாக மாற்றி மக்கள் முன் வைத்தது. அதனூடாக அதிகாரத்தை நோக்கி நகர்ந்தது. அதிகாரம்தான் அதன் இலக்காக இருந்ததே ஒழிய அந்தக் கொள்கைகள் அல்ல. ஆகவே அதிகாரத்தின் பாதையில் தேவையான இடங்களில் அதை உதறி உதறி அது முன்னகர்ந்தது. எது அதன் சாரமாக நமக்குத் தோன்றியதோ அதையெல்லாம் அது அதிகாரத்திற்காக உதறியது.*

*திராவிட இயக்கத்தின் ஊற்றுக் கண்கள் பல. ஏற்கனவே குறிப்பிட்டதுபோல தமிழ்நாட்டில் சென்னையை மையமாக்கி 1890 களிலேயே உருவாகிவிட்ட தலித் விழிப்புணர்ச்சி இயக்கத்தின் கோட்பாடுகளை அது எடுத்துக் கொண்டது. திராவிடம் என்ற கருதுகோள் அயோத்திதாச பண்டிதர் போன்றவர்களிடம் இருந்துதான் அதற்கு வந்து சேர்ந்தது. திராவிடக் கோட்பாட்டின் இன்னொரு மூல ஊற்று தென்தமிழகத்தில் நெல்லையை மையமாக்கி உருவான சைவ மறுமலர்ச்சி இயக்கம். அது வெள்ளக்கால் சுப்ரமணிய முதலியார், மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை முதலியோரால் முன்வைக்கப்பட்டது. இவர்கள் இந்து மதத்திலும் சைவத்திற்குள்ளும் இருந்த பிராமண ஆதிகத்திற்கு எதிராக இந்த திராவிட வாதத்தை உருவாக்கினர்.*

அயோத்திதாசரும் மனோன்மணியம் சுந்தரம் பிள்ளையும் ஒருவருக் கொருவர் முற்றிலும் எதிரிகளாகவே இருக்க இயலும். ஆனால் திராவிட இயக்கத்தின் பரப்பிய அரசியல் இரு ஊற்றுக் கண்களையும் பயன்படுத்திக் கொண்டது. அவற்றுக்கிடையே சமரசத்தை உருவாக்கவில்லை. இரண்டையுமே ஏமாற்றியது என்று கூறலாம். ஆனால் திராவிட இயக்கத்தின் சார்புநிலை மனோன்மணியம் சுந்தரனார் பிரதிநிதித்துவம் செய்த சைவ-உயர்சாதி கருத்தியல் நோக்கியே இருந்தது. திராவிட இயக்கத்தின் முகப்பு அடையாளமாக சுந்தரம்பிள்ளை முன்னிறுத்தப்பட்டபோது அயோத்திதாசர் முற்றாகவே புறக்கணிக்கப்பட்டு மறக்கப்பட்டார். தலித் இயக்கம் 1980களில் உருவாகி வந்தபிறகுதான் அயோத்திதாசர் முன்னிலைப்படுத்தப்பட்டார். இல்லையேல் வெறும் பெயராகவே எஞ்சியிருப்பார்.

திராவிட இயக்க அரசியலின் இன்னொரு ஊற்றுக்கண் ஜஸ்டிஸ் கட்சி. பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் பிரிட்டிஷாருடன் ஒத்துழைத்து ஆட்சியதிகாரங்களைப் பெறவிரும்பிய உயர்குடியினரின் கட்சி அது. மன்னர்களும் ஜமீன்தார்களும் நிலப்பிரபுகளும் வழக்கறிஞர்களும் அடங்கியது. காங்கிரஸ¤க்கு எதிராக அதைப் பேணினார்கள் பிரிட்டிஷார். ஜஸ்டிஸ் கட்சியின் அரசியல் என்பது பெரும்பாலும் 'நியமன அரசியலே' பிரிட்டிஷ் அரசு இந்தியர்களுக்கு அரசியல் அதிகாரங்களை பகிர்ந்தளிக்க விரும்பி மாகாண சபைகளையும் மத்திய சட்டமன்றத்தையும் உருவாக்கியபோது அது தேர்தல்களைப் புறக்கணித்த சந்தர்ப்பத்தில் தேர்தல்களில் 'வென்று' ஆட்சி அமைத்தது. ஜஸ்டிஸ் கட்சியின் பங்களிப்பாக இன்று கூறப்படும் இட ஒதுக்கீட்டு கோரிக்கைகள் இக்காலகட்டத்தில் உருவானவையே.

ஜஸ்டிஸ் கட்சி பேசிய இட ஒதுக்கீடுகள் எவையுமே மக்களுக்கான இட ஒதுக்கீடுகள் அல்ல. மக்களுக்கு அன்று அரசியலதிகாரமே இல்லை. வரி கொடுப்பவர்களுக்கு மட்டுமே அன்று வாக்குரிமை. அது பெரும்பாலும் உயர்சாதியினருக்கு மட்டுமே இருந்தது. ஜஸ்டிஸ் கட்சி கோரிய இட ஒதுக்கீடு என்பது அந்த எல்லைக்குள் நின்று கோரப்பட்டதே. ஆகவே தான் பிராமண எதிர்ப்பு அன்று அத்தனை முக்கியமாக தேவைப்பட்டது. காரணம் அன்றைய வாக்கு முறையில் பிராமணர்கள் நில உரிமை, வரி கொடுக்கும் உரிமை காரணமாக அதிகளவில் வாக்களித்தார்கள். அவர்களை எதிர்த்து வெல்ல பிற சாதியினருக்கு இட ஒதுக்கீடு தேவையாக இருந்தது.

காங்கிரஸ் இந்தியாவிற்கு சுதந்திரத்தைப் பெற்றுதந்து இந்தியக் குடியரசை அமைத்த பின்புதான் வயதுவந்த அனைவருக்கும் வாக்குரிமை என்ற உண்மையான ஜனநாயகம்

நடைமுறைக்கு வந்தது. அது எந்தவிதமான இடஒதுக்கீடும் இல்லாமலேயே பிற்படுத்தப்பட்டவர்களின் அதிகாரம் உருவாக வழிவகுத்தது. காரணம் பிற்படுத்தப்பட்டவர்கள்தான் எண்ணிக்கையில் அதிகமானவர்கள். நாம் இன்று காணும் பிற்படுத்தப்பட்டோர் அரசியல் இந்திய விடுதலைக்குப் பின்னரே உருவானது.

பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில் இருந்த ஜனநாயக உரிமை என்பது வெறும் கண்துடைப்பு தான். பிரிட்டிஷ் ஆட்சியாளர்களுக்கு உதவி செய்யக்கூடிய, ஆலோசனை சொல்லக்கூடிய அதிகாரம் மட்டுமே அந்த அரசுகளுக்கு இருந்தது. அந்த அரசியல்மூலம் மக்களுக்கு எந்தவிதமான நன்மையும் இல்லை. உயர்குடியைச் சேர்ந்த அரசியல்வாதிகள் பதவிசுகம் அனுபவிக்க முடியும் அவ்வளவுதான். ஆகவே காந்தி எப்போதும் அந்த அரசதிகாரத்தை நிராகரிப்பவராகவே இருந்தார். ஒரு பயிற்சி என்ற வகைப்பாட்டில்தான் அதை அவர் கடைசியில் தற்காலிகமாக அங்கீகரித்தார்.

இந்தியாவிற்கு சுதந்திரம் கிடைத்த பிறகே இந்திய மக்களுக்கு உண்மையான ஜனநாயகம் கிடைத்தது. அந்த ஜனநாயகத்தின் விளைவே இன்று நாம் அனுபவிக்கும் எல்லா உரிமைகளும்; எல்லா வளர்ச்சிகளும். அந்தச் சுதந்திரத்திற்கு எதிராக பாடுபட்ட மரபுள்ளது ஜஸ்டிஸ் கட்சி. ஜஸ்டிஸ் கட்சியின் மறுவடிவமே திராவிட இயக்கம் .சுதந்திரத்திற்குப்பிறகு பிரிட்டிஷ் ஆட்சியிடம் சலுகை பெறுவதற்காக கேட்டுக் கொண்டிருந்த அதே இடஒதுக்கீடு கோரிக்கையை ஜனநாயக உரிமையாக மாற்றிக் கோரியது திராவிட இயக்கம். இந்திய சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியாவில் உள்ள ஒவ்வொரு சாதியும் அரசியலதிகாரத்திற்காக போராடிக் கொண்டிருந்த காலகட்டம் வந்தது. திராவிட இயக்கம் தமிழகத்தில் பிற்பட்ட சாதியினரின் அரசியல் குரலாக தன்னை மாற்றிக் கொண்டது . அதன்மூலம் அது அரசியலதிகாரம் நோக்கி நகர்ந்தது.

இவ்வாறு பிற்படுத்தப்பட்டவர்களின் அரசியலதிகாரத்தை நோக்கி நகர்வதற்கு ஒரு மூடுதிரையாகவே திராவிட இயக்கம் தமிழியக்கத்தின் கோஷங்களை எடுத்தாண்டது என்பதே வரலாறு. தமிழியக்கத்தின் கோஷங்கள் ஏற்கனவே தமிழ்நாட்டில் செல்வாக்கு பெற்றிருந்தன. அவற்றுக்கு ஒரு இலட்சியவாதச் சார்பு இருந்தது. ஆனால் அதைவிட முக்கியமாக தமிழியக்கம் அதன்வலுவான ஒரு சாராரின் உணர்ச்சியாக பிராமண வெறுப்பை கொண்டிருந்தது. தமிழின் தனித்தன்மையையும், மரபையும் நிராகரித்த பிற்போக்குத்தனமான பிராமண மதத்தலைவர்களும் அறிஞர்களில் சிலரும்தான் அந்த உணர்ச்சி உருவாவதற்குக் காரணமானவர்கள். அந்த பிராமண

வெறுப்பு ஆட்சியதிகாரத்திற்காக பிற சாதியினரை ஒருங்கிணையச் செய்வதற்கு மிக முக்கியமான ஆயுதம் என்று திராவிட இயக்கம் கண்டு கொண்டது. அது பலன் தந்தது.

திராவிட இயக்கம் அரசியலதிகாரம் நோக்கி நகர்ந்த வரலாறு ஒரு முன்னுதாரண பரப்பிய இயக்கம் எப்படி நடந்து கொள்ளும் என்பதற்கான ஆதாரம். மக்களுக்குக் கற்றுக் கொடுப்பதே ஒரு மக்களியக்கம் செய்யும் பெரும் பணியாக இருக்கும். கேரளத்திலும் தமிழ்நாட்டிலும் இடதுசாரி இயக்கங்கள் செய்தது அதையே. அது சற்று கடினமான பாதை. ஆனால் மக்களின் அவ்வப்போதுள்ள ஐயங்களை, உணர்வெழுச்சிகளைப் பயன்படுத்திக் கொள்வதையே பரப்பிய இயக்கங்கள் செய்யும். அவை உடனடியான விளைவுகளையும் உருவாக்கும். ஆனால் ஒரு மக்களியக்கத்தின் உண்மையான வரலாற்றுப் பங்களிப்பு அவற்றுக்கு இருக்காது.

1940 முதல் இந்தியாவில் பஞ்சங்கள் ஆங்காங்கே உருவாகி 1943ல் உச்சம் கொண்டன. அவை சுதந்திர இந்தியாவை வேட்டையாடின. 1780 முதல் பிரிட்டிஷாரின் தவறான நிர்வாக முறை காரணமாகவும், சுரண்டல் காரணமாகவும், போர்கள் காரணமாகவும் இந்தியாவில் மாபெரும் பஞ்சங்கள் நிகழ்ந்து வந்தன என்பது வரலாறு. அப்பஞ்சங்களின் தூவானமே 1940 களின் பஞ்சங்கள். சுதந்திரம் கிடைத்த முதல் பத்து வருடங்கள் இப்பஞ்சங்களை சமாளிக்க காங்கிரஸ் ஆட்சி திணறியது. ஆனால் மாபெரும் பாசனத்திட்டங்கள் மூலம் உணவு உற்பத்தியைப் பெருக்கி அடுத்த பதினைந்து வருடங்களில் இந்தியாவில் உணவுப் பஞ்சங்களே இல்லாத நிலையை உருவாக்கியது.

தமிழ்நாட்டிலேயே இன்றுள்ள மாபெரும் பாசனத் திட்டங்கள் பல காங்கிரஸ் ஆட்சிக்காலத்தில் உருவானவையே. மொத்தக் கொங்குநாடும் நீர்ப்பாசன வசதி பெற்றது சி. சுப்ரமணியம் அவர்களின் முயற்சியினாலேயே. தமிழகத்தின் விவசாய நிலத்தின் பரப்பு 30 சதவீதம் அதிகரிக்கப்பட்டது. ஆனால் ஆரம்பகாலத்தின் பஞ்சங்களும் அதன் விளைவாக உருவாக்கப்பட்ட ரேஷன் முறையும் தமிழக மக்களில் கடுமையான அதிருப்தியை உருவாக்கியது. அவர்கள் சுதந்திரம் கிடைத்ததுமே நாட்டில் பாலும் தேனும் ஓடும் என்று நம்பிய எளிய மக்கள். அந்த அதிருப்தியை திராவிட இயக்கம் பயன்படுத்திக் கொண்டது.

அக்காலத்து பிரச்சாரங்களை இன்று வாசிக்கும்போது பிரமிப்பே உருவாகிறது. ‘தமிழகத்தில் தட்டினால் தங்கம் வெட்டினால் வெற்றி அத்தனையும் எடுத்து மக்களின் வாட்டத்தைப் போக்குவோம்’ என்று பேசினார் சி. என். அண்ணாதுரை அவர்கள். வட

இந்தியா உணவுப் பஞ்சத்தில் அழிந்து கொண்டிருந்த காலம் அது. நேரு உலகநாடுகளிடம் உணவுபிச்சை கேட்டு அலைந்து கொண்டிருந்தார். அமெரிக்க நிதியுதவியால் பிகாரில் அவுன்ஸ் கணக்கில் மக்காச்சோளம் ரேஷனில் அளிக்கப்பட்டது. ஆனால் 'வடக்கு வாழ்கிறது தெற்கு தேய்கிறது' என்று சி. என். அண்ணாதுரை அவர்கள் பிரச்சாரம் செய்தார். அந்த கோஷம் சாதாரண மக்களை விரைவிலேயே கவர்ந்தது

இந்தியா ஒரு அரசியல் தேசமாக ஒருங்கிணைக்கப் பட்டபோது மொழிவாரி மாநிலங்களுக்கான கோரிக்கை உருவாகியது. பண்பாட்டு தனித்தன்மைகள் எங்கும் விவாதத்திற்கு வந்தன. அதுவரை திராவிட வாதம் பேசி வந்த திராவிட இயக்கம் எந்தவிதமான விவாதமும், விளக்கமும் இல்லாமல் மொழிவழி அரசியலுக்கு வந்து தமிழ் வாதம் பேச ஆரம்பித்தது. திராவிடமும் தமிழும் ஒன்றே என்று கூற ஆரம்பித்தார்கள். மொழிப் பிரச்சனையில் மக்களிடையே இருந்த ஐயங்களை பயன்படுத்திக் கொண்டு இந்தி எதிர்ப்புப் போராட்டம் முதலியவற்றின் மூலம் மக்களின் ஆதரவை பெற்றார்கள். இதன் பொருட்டே தமிழியக்கத்தின் தமிழ்முதன்மை வாதத்தை திராவிட இயக்கம் பயன்படுத்திக் கொண்டது.

மிகச்சிறந்த பரப்பிய இயக்கமாக விளங்கிய திராவிட இயக்கம் அன்று உருவாகிவந்த எல்லா வெகுஜன ஊடகங்களையும் திறம்பட பயன்படுத்திக்கொண்டது. ஒலிப்பெருக்கி மேடை, திரைப்படம், பரபரப்பு இதழியல் மூன்றுமே அதன் ஆயுதங்கள் ஆக மாறின. இத்தனைக்கும் அப்பால் இரு முக்கியமான கூறுகளைச் சுட்டிக்காட்டியாக வேண்டும். ஒன்று, சி.என்.அண்ணாத்துரை அவர்களின் ஈர்ப்புள்ள ஆளுமை. தன் லட்சக்கணக்கான ஆதரவாளர்களையும் நெருக்கமான தோழர்களையும் முழுக்க தன்னுடைய பெருந்தன்மையாலும், உண்மையான அன்பாலும், கடைசிவரை ஒரே அணியாகத் திரட்டி வைக்க அவரால் முடிந்தது. அவர்களின் அன்பையும் நம்பிக்கையும் முழுமையாகவே அவர் பெற்றார்

மறுபக்கம் தமிழகத்தின் மாபெரும் மக்கள்தலைவரான கு.காமராஜ் அவர்கள் தமிழகத்தை விட்டுவிட்டு டெல்லி அரசியலில் ஈடுபட்டது பெரும் அரசியல் வெற்றிடத்தை உருவாக்கியது. அவருக்குப் பதில் இங்கே ஆட்சி செய்த பக்தவத்சலம் அவர்கள் ஓர் கறாரான நிர்வாகி. தமிழகத்தின் தொழில் விவசாய வளர்ச்சியில் அவரது திட்டங்கள் பெரும்பங்காற்றியுள்ளன. ஆனால் மக்களிடம் பேசும் வல்லமை இல்லாதவர் அவர். இந்த வாய்ப்பை திராவிட இயக்கம் சரியாகவே பயன்படுத்திக்கொண்டது.

*அப்படியானால் திராவிட இயக்கத்தின் வரலாற்றுப் பங்களிப்பு என்ன? அவற்றை சுருக்கமாக வரையறுத்து இவ்வாறு சொல்லலாம்.*

*1. திராவிட இயக்கம் தமிழகத்தில் உள்ள பிற்படுத்தப்பட்ட – மிகவும் பிற்படுத்தப்பட்ட மக்கள் ஒருங்கிணைந்து அரசியல் அதிகாரத்தை அடைவதற்கு ஒரு ஊடகமாக செயல்பட்டது.பிற்படுத்தப்பட்டமக்கள் அரசியலதிகாரம் நோக்கிச் சென்றது என்பது இந்தியாவில் எங்கும் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி. அந்த பயணத்திற்கு ஒவ்வொரு மாநிலத்திலும் ஒவ்வொரு இயக்கம் பங்காற்றியிருக்கிறது. கேரளத்தில் இடதுசாரி இயக்கம். கர்நாடகத்தில் சோஷலிச இயக்கம். தமிழ்நாட்டில் அது திராவிட இயக்கத்தால் நடந்தது. அந்த அதிகார மாற்றம் என்பது இயல்பான இன்றியமையாத ஒரு ஜனநாயக நிகழ்வே.*

*2. ஒரு பரப்பிய இயக்கம் என்ற முறையில் திராவிட இயக்கம் கோடிக்கணக்கான மக்களை சென்றடைந்தது. ஆகவே அது எடுத்துப்பேசிய சமூக சீர்த்திருத்தக் கருத்துக்களும் தமிழ் முதன்மைக் கருத்துக்களும் தமிழகத்தின் அனைத்து மக்களுக்கும் அறிமுகமாயின. அறிவியக்கங்களின் கொள்கைகள் மக்களுக்கு சென்றுசேர மிகவும் தாமதமாகும். பரப்பிய இயக்கம் சில வருடங்களிலேயே அவற்றை நிகழ்த்தும். பெரும்பாலான தமிழக மக்களின் சிந்தனையில் சாதி எதிர்ப்பு, மூடநம்பிக்கை எதிர்ப்பு, பழைமைவாத எதிர்ப்பு போன்ற முற்போக்குக் கருத்துக்கள் திராவிட இயக்கம் மூலமே சென்று சேர்ந்தன.*

*தமிழகத்தின் சமூக மாற்றத்துக்கு இந்த கருத்துக்கள் மெல்லிய பங்களிப்பையே ஆற்றுகின்றன என்பதே உண்மை. ஏனென்றால் இக்கருத்துக்கள் பரப்பிய இயக்கத்தால் வெறும் கோஷங்களாகவே சென்று சேர்க்கப்படும். அப்போது எல்லாரும் மேடையில் சாதி ஒழிக என்பார்கள், நடைமுறையில் சாதி அப்படியே இருக்கும். சாரமுள்ள அறிவியக்கம் மட்டுமே கருத்துக்களை வரலாற்று புரிந்தலுடன் நடைமுறைத்தீர்வுகளுடன் முன்வைக்க முடியும். இருந்தாலும் இந்த அளவில் திராவிட இயக்கத்தின் பணி முக்கியமானதே.*

*3. ஒரு பரப்பிய இயக்கம் என்ற முறையில் திராவிட இயக்கம் பாமர மக்களுக்குரியதாக இருந்தது. ஆகவே இந்திய சுதந்திரத்திற்குப் பிறகு இந்திய மக்களை அரசியல் மயப்படுத்தும் பணியில் அது பெரும் பங்களிப்பு செலுத்த முடிந்தது. சுதந்திரப் போராட்டம் கூட சென்று தீண்ட முடியாத அடித்தட்டு மக்களுக்கும் அரசியல்*

*பிரக்ஞையை ஊட்ட அதனால் முடிந்தது. அச்சு ஊடகம் போன்றவை சென்று தீண்ட முடியாத அளவுக்கு தனிமைப்பட்டு கிடந்த எளிய மக்களை திராவிட இயக்கத்தின் பரப்பிய ஊடகங்கள் சென்று உசுப்பின. நிலப்பிரபுத்துவ மதிபீடுகளுக்குள் வாழ்ந்த அவர்களை ஜனநாயக அரசியல்கருத்துக்களுக்குள் கொண்டுவந்தன.*

*தமிழகத்தில் கோடிக்கணக்கானவர்கள் இருபதாம் நூற்றாண்டை உலுக்கிய மானுட சமத்துவம், அடிப்படை உரிமைகள், உரிமைக்கான போராட்டம் போன்றவற்றை எம்.ஜி.ஆர் திரைப்படங்கள் வழியாகவே அறிமுகம்செய்துகொண்டிருப்பார்கள். அவர்களின் அரசியல் பிரக்ஞை ஆரம்பிப்பதே அங்கிருந்துதான். ஆகவே தான் இன்றும் எளிய மக்களில் கணிசமானவர்கள் திராவிட இயக்கம் மீது பற்று கொண்டிருக்கிறார்கள். இந்தியா போன்ற ஒரு பரந்து விரிந்தநாட்டில் இந்த ஜனநாயகப்படுத்தல் மிகவும் முக்கியமான ஒன்று.*

*4.தமிழ்மொழி என்னும் அடையாளத்தை தமிழகத்தின் பொது அடையாளமாக ஆக்கியது திராவிட இயக்கம்தான். மக்களுக்கு செம்மைமொழியை அது மேடைவழியாக அளித்தது. அதனூடாக மக்கள் அதிகாரம்பெறுவதற்கான ஒரு பெரிய வாயிலைத் திறந்தளித்தது. முதன்மையாக அதன் சாதனை இதுவே*

*இந்த நான்குமே திராவிட இயக்கத்தின் சாதனைகள் என்றே கூறுவேன். இவற்றுக்காக திராவிட இயக்கத்தை அங்கீகரிக்காமல் நான் எந்த விதமான விமரிசனத்தையும் கூறுவதில்லை. இவற்றின் அடிப்படையில் திராவிட இயக்கம் மீதான மதிப்பை முன்வைக்கும் ஆய்வுகளையும் நான் ஏற்கிறேன். பிற சூழல்களில் காங்கிரஸ¤ம் இடதுசாரி இயக்கங்களும் ஆற்றிய பணி இது. அவை பரப்பிய இயக்கங்கள் அல்லாத காரணத்தால் அப்பணி மெதுவாகவே நடைபெற்றது.*

*அனைத்தையும் விட முக்கியமான பங்களிப்பு ஒன்றுண்டு. ஆதரவு போலவே எதிர்ப்பும் ஜனநாயக இயக்கத்தில் முக்கியமானது என்று காட்டியது திராவிட இயக்கமே. பிரிட்டிஷ் அதிகாரம் காங்கிரஸ¤க்கு வந்தது. அந்த அதிகாரத்தை ஒருவகை மன்னராட்சியாகவே பிற பகுதிகளில் பெருவாரியானவர்கள் புரிந்துகொண்டிருக்கிறார்கள் என்ற எண்ணம் அறுபதுகளில்கூட முன்வைக்கப்பட்டதுண்டு. ஆனால் அரசை விரும்பாதபோது தூக்கி வீச முடியும் என எளிய மக்களுக்கு திராவிட இயக்கம் கற்றுத்தந்தது. எதிர்ப்பு என்பது ஜனநாயக அரசியலின் அடிபப்டை செயல்பாடு என்றது.*

*பிற இடங்களில் அந்தப்பணியை ஆற்றியவை இடதுசாரி இயக்கங்கள். இடதுசாரி இயக்கங்கள் வலுவாக இல்லாத இடங்களில் சாதி இயக்கங்கள் இப்பணியை ஆற்றின. இவை தமிழகத்தில் திராவிட இயக்கங்கள் வலுவிழக்கும் போது அந்த இடத்தை சாதி இயக்கங்கள் நிரப்புகின்றன என்று பார்க்கையில் திராவிட இயக்கங்களின் பங்களிப்பு ஒருவகையில் ஆக்கபூர்வமானதும் முற்போக்கானதும்தான் என்றே எண்ணுகிறேன்.*

*தமிழகம் சாதி அரசியல் வழியாக அரசியல்மயமாக்கப்பட்டிருந்தால் மோதல்களும் வன்முறைகளும் உருவாகியிருக்கும். அது அழிவுப்பாதைக்கே நம்மை கொண்டு சென்றிருக்கும். அதன் அத்தனை குறைகளுடன் திராவிட இயக்கம் ஒரு ஜனநாயக இயக்கமாகவே இருந்தது. ஜனநாயக நடவடிக்கைகளுடன் தான் அது தன் அரசியலை முன்னெடுத்தது. அத்தனை விமரிசனங்களுடன் கூட திரு. மு. கருணாநிதி அவர்களை திராவிட இயக்கத்தின் கடைசி ஜனநாயகவாதி என்றே கூற வேண்டியிருக்கிறது. அவருக்குப் பதிலாக மூர்க்கமான சுயமைய நோக்குள்ள சாதிதலைவர்களே நமக்கு கிடைக்கிறார்கள் இன்று.*

*ஒரு வேளை திராவிட இயக்கத்திற்குப் பதில் இடதுசாரிகள் அந்தப் பணியை ஆற்றியிருந்தால் இன்னும் சிறப்பாக இருந்திருக்கலாம். ஆனால் வரலாற்றில் 'லாம்' களுக்கு இடமில்லை. வரலாறு அதன் ஒரு பணியை நிறைவு செய்ய திராவிட இயக்கத்தை உருவாக்கியது. அவ்வளவுதான்.என் நோக்கில் இவ்வாறே திராவிட இயக்கத்தின் பங்களிப்பின் சாதக பாதகங்களை வகுத்துக்கொள்கிறேன்.*

*எதிர்காலத்தில் திராவிட இயக்கத்தால் மழுங்கடிக்கப்பட்ட தன்னுடைய உரிமைக்குரலை மீட்டு தலித் இயக்கங்கள் முன்னகர கூடும். பிற்பட்டோர் அரசியலுக்கு மாற்றாக எழும் சக்திகள் திராவிட இயக்கத்தை உதறித்தானாக வேண்டும். அவையெல்லாம் வரலாற்று முரணியக்கத்தின் சாத்தியங்கள். அவற்றைப்பற்றி தீவிரமான கருத்துக்களை முன்வைக்க நான் விரும்பவில்லை. அந்த மாற்றம் எந்நிலையிலும் ஜனநாயகபூர்வமானதாக இருக்க வேண்டும் என்று மட்டும் கூற விழைகிறேன்.*

*நான் செயல்படுவது பண்பாட்டுத்தளத்தில். இங்கே திராவிட இயக்கம் என்ற பரப்பிய இயக்கத்தின் விளைவுகள் எதிர்மறையானவை. . அதற்கு எதிர்நிலையில் அல்லாமல் ஆக்கபூர்வமாகச் சிந்திக்கவும் செயல்படவும் வேறு வழியில்லை. அதுவே என் தரப்பாகும் . திராவிட இயக்கத்தின் எதிர்மறைக்கூறுகள் என நான் எண்ணக்கூடிய*

*அனைத்துமே அது ஒரு பரப்பிய இயக்கம் என்பதில் இருந்து ஆரம்பிக்கிறது. என் கருத்துக்களைச் சுருக்கி இவ்வாறு கூறலாம்.*

*1) பரப்பிய இயக்கம் எப்போதுமே சிந்தனைகளை கோஷங்களாக சுருக்கும் தன்மை கொண்டது. சிக்கலான ஊடுபாவுகளும் வரலாற்றுப் பின்புலமும் உடைய சிந்தனைகள் அதற்கு தேவையில்லை. எளிய ஒற்றைப்படையான உண்மைகளையே அது முன்வைக்கும். அதன் மூலம் சிந்தனைகள் மேலும் வளர்வதற்கான வழி அடைபடுகிறது. மூர்க்கமான நிலைபாடுகள் மட்டுமே உருவாகின்றன. இன்றைய சூழலில் நாம் சிந்தனைகளை வளர்க்கவும் முன்னெடுக்கவும் திராவிட இயக்கம் உருவாக்கிய இந்த மனநிலையை வென்றே ஆக வேண்டும்.*

*2) பரப்பிய இயக்கம் எப்போதுமே பாமர மக்களைச் சார்ந்தது. ஆகவே அது எல்லாவற்றையும் அந்த தளம் நோக்கி இழுக்கிறது. கலை இலக்கியங்களில் சீரிய முயற்சிகளை அது வரவேற்காது. கேளிக்கைகளையும் பரபரப்புகளையும் அது நாடும். திராவிட இயக்கம் வணிகக்கலையும் வணிக இலக்கியமுமே முக்கியமானது என்று தமிழ் மனதில் நிறுவி விட்டது. அந்த மனநிலையை உடைத்து ஆழத்தையும் நுண்மையையும் நிறுவியாக வேண்டும்.*

*3) பரப்பிய இயக்கம் எந்த ஒரு விஷயத்தையும் அர்ப்பணிப்புடன் நெடுங்காலம் நெடுந்தூரம் கொண்டு செல்வதில்லை. அதன் உடனடி பயன் முடிந்ததும் அதை அப்படியே விட்டுவிடும். தமிழியக்கத்தின் கனவுகளும் அப்படியே திராவிட இயக்கத்தால் கைவிடப்பட்டன. தலித் இயக்கம், இடதுசாரி இயக்கங்களின் இலட்சியங்களும் அவ்வாறே திராவிட இயக்கத்தால் கொஞ்ச நாள் மேடையில் முழங்கப்பட்டு கைவிடப்பட்டன. திராவிட இயக்க அரசியலில் இருந்து இந்த இலட்சியங்களை மீட்டு மீண்டும் உயிர்த்துடிப்புடன் முன்னெடுத்தாக வேண்டும்.*

*4) பரப்பிய இயக்கம் கவனத்தைக் கவரும் செயல்களை மட்டுமே முன்னிறுத்தும், அவ்வாறு கவனத்தைக் கவரும் மனிதர்களே அதன் நாயகர்கள். அர்ப்பணிப்பும் ஆழமும் கொண்ட அறிவியக்கம் அதற்கு ஒரு பொருட்டே அல்ல. ஆகவேதான் திராவிட இயக்கம் உண்மையான அறிஞர்களை புறக்கணித்தது. மேடைப் பேச்சாளர்களை முன்வைத்தது. விளைவாக காலப்போக்கில் மேடை பேச்சாளர்கள் பெருகினார்கள். ஆய்வாளர்கள் அருகினார்கள். ஆய்வாளரும் அறிஞரும் தேவையற்றவர்களாக உணரப்பட்டார்கள்.*

இன்று திராவிட இயக்கத்தின் மனநிலையை முழுக்க நீக்கி நம் சமூகத்தில் அறிவார்ந்த செயல்பாடுகளுக்கும் ஆய்வுகளுக்கும் உள்ள முக்கியத்துவத்தை நிறுவியாக வேண்டும்.

5) பரப்பிய இயக்கம் வெகுஜன ஊடகங்களை மட்டுமே பொருட்படுத்தும். திராவிட இயக்கத்தின் ஊடகமாக சினிமா, மேடை இரண்டுமே இருந்துள்ளன. அது அடிப்படையில் எழுத்துக்கு எதிரான இயக்கம். இடதுசாரி இயக்கங்களுடன் திராவிட இயக்கத்தை ஒப்பிடும் எவரும் இதை உணரலாம். திராவிட இயக்கம் அதன் உச்சத்தில் இருந்த நாட்களில், சி.என்.அண்ணாத்துரை அவர்களின் ஒரு கூட்டத்துக்கே பல்லாயிரம்பேர் வந்த காலகட்டத்தில் அவரது இதழ்கள் சில ஆயிரம் பிரதிகளுக்குமேல் விற்றதில்லை என்பதே வரலாறு. அவரது நூல்கள் விற்பதில்லை என்பதை அவரே பலமுறை சொல்லியிருக்கிறார்.

இந்தியாவின் எல்லா அறிவியக்கங்களும் பற்பல பெரும் நாளிதழ்களையும் பிரசுர அமைப்புகளையும் உருவாக்கியிருக்கின்றன. திராவிட இயக்கம் அப்படி பெரிய அமைப்புகள் எதையுமே உருவாக்கவில்லை. காரணம் அது எழுத்து வாசிப்பு சார்ந்தது அல்ல என்பதே. அதன் விளைவாகவே இன்றைய தமிழ் மனம் எழுத்து- வாசிப்பு இரண்டிலும் அக்கறையற்றதாக உள்ளது.. திராவிட இயக்கத்தின் பாதிப்பில் இருந்து மீளாத வரை அதை எழுத்து, வாசிப்புக்கு கொண்டு வரஇயலாது.

6) திராவிட இயக்கம் உருவாக்கிய எளிய பகுத்தறிவு வாதம் நம் மரபின் தொன்மையையும் ஆழத்தையும் புரிந்து கொள்ள உதவியானது அல்ல. இன்னும் சொல்லப்போனால் அது பெரிய தடையும் ஆகும். இன்னும் விரிவான வரலாற்று ஆய்வு முறைகள் நமக்குத் தேவைப்படுகின்றன. இந்தியச் சூழலில் இடதுசாரிகளும் அம்பேத்கார் முதலிய தலித்தியர்களும் விரிவான ஆய்வுமுறைகளை உருவாக்கியிருக்கிறார்கள். அவை திராவிட இயக்கத்தின் எளிமைப்பாட்டுக்கு எதிராக முன்னெடுக்கப்படவேண்டும். அவற்றையும் தாண்டிச்செல்லும் புதிய சிந்தனைகள் வந்துசேர வேண்டும்.

7) ஒரு பரப்பிய இயக்கமாக திராவிட இயக்கம் பிரச்சாரத்தையே எல்லாவகையான அறிவுச் செயல்பாட்டுக்கும் ஆதாரமாகக் கொண்டிருக்கிறது. கலைப்படைப்பின் சவால்களும் சாதனைகளும் திராவிட இயக்கக் கருத்தமைவால் உள்வாங்கப்பட முடியாதவை. ஆகவேதான் ஒரே ஒரு கலைப் படைப்பினைக்கூட அது உருவாக்க

*முடியவில்லை. இலக்கியம் திராவிட இயக்கத்தின் பாதிப்பை முற்றாக உதறாதவரை கலையில் வெற்றிகளைச் சாதிக்க இயலாது.*

*ஆகவேதான் பண்பாட்டுச் செயல்பாட்டாளன், இலக்கியவாதி என்ற முறையில் நான் திராவிட இயக்கத்தை நிராகரிக்கிறேன்.*

## *5) கல்வாழை [ நாத்திகவாதம்- தமிழ்நாட்டிலும் கேரளத்திலும்] 1*

*1950களின் இறுதியில் ஆரம்பத்தில் இது நடந்தது. ஒருநாள் காலையில் ஒருவருக்கு தெரிய வருகிறது, அவருக்கு அன்று காலை திருமணம் நிச்சயமாகப் போகிறது. எல்லா ஏற்பாடுகளும் ஏற்கனவே செய்து முடிக்கப் பட்டிருந்தன. மாமா வீட்டில் இருந்து முந்தையநாள் இரவுதான் வந்திருக்கிறார். 'எல்லாம் நிச்சயமாயிட்டது. நல்ல எடம். சொந்தம்தான்' என்றார் அப்பா.*

*அவர் கடும் மனக் கொந்தளிப்பை அடைந்தார். என்ன சொல்வதென்றே தெரியவில்லை. இரண்டு மணி நேரம் அறையை மூடிக்கொண்டு பதற்றமும் பரிதவிப்புமாக நடந்தார். சிறுஅழுகை வந்து நெஞ்சை முட்டியது.தன் மானசீகமான குருநாதரிடம் மீண்டும் மீண்டும் கோரினார் 'நான் என செய்யவேண்டும்? நான் என்ன செய்யவேண்டும்?' கடைசியில் முடிவெடுத்தார். வெளியே வந்து அப்பாவிடம் சொன்னார் 'அப்பா இந்தக் கல்யாணத்திலே எனக்கு இஷ்டமில்லை''*

*அப்பாவுக்கும் சொந்தக்காரர்களுக்கும் அதிர்ச்சி. வீடே விரைத்துப் போய்விட்டது. என்ன ஒரு மீறல்! எத்தனை திமிர்! அம்மா சாபம் போட்டு அழுதபடி அப்படியே உடைந்து அமர்ந்தார். கையோங்கியபடி அப்பா அடிக்கப் பாய்ந்தார். அவரை பலர் பிடித்துக் கொண்டார்கள். 'வெட்டி கண்டம் துண்டமாக போட்டாத்தான் எனக்கு மரியாதை' என்று அப்பா கொந்தளித்தார்*

*அவரைப் பிடித்து அமரச் செய்து விட்டு ஒரு வயது மூத்த மாமா அறிவுரை சொன்னார் 'உன்னிடம் கேட்டு இதையெல்லாம் செய்ய வேண்டியதில்லை. இதெல்லாம் நம்ம குடும்ப வழக்கம். தலைமுறை தலைமுறையா இப்டித்தான். பெரியவங்க பாத்து சொல்றத நீ செய்ய வேண்டியதுதான்'*

*ஆனால் தலைநிமிர்ந்து அவர் சொன்னார். ''இல்லை மாமா ...நான் முடிவு செஞ்சிட்டேன். இது என் வாழ்க்கை. இதிலே என் இஷ்டம்னும் ஒண்ணு இருக்கு...' தன்னைப் போன்ற ஒரு தலைமுறைக்காக அங்கே நின்று பேசுவதாக அவருக்கு அப்போது தோன்றியது...*

*ஊரும் உறவும் கொதித்தது. 'இன்னமுமா வெட்டிப் போடாம இருக்கான் அந்த அப்பன்?' என்றார்கள். 'இதைக் கேட்டு நாளைக்கு நம்மவீட்டு குழந்தைகளும் ஆரம்பிச்சா அப்றம் சாதியும் சமூகமும் உருப்படுமா? இத முளையிலேயே கிள்ளணும்' என்றார்கள். சாதிக்குரிய கோயிலில் ஊர்க்கூட்டம் நடந்தது. அங்கேயும் சென்று குனிந்த தலை நிமிராமல் கண்ணீருடன் அதையே சொன்னார் அவர்.*

*இவ்வளவு பிரச்சினை ஆனபின் எப்படி கல்யாணம் நடக்கும்? நின்று விட்டது. அதன்பின் பலவருடங்கள் ஊரும் உறவும் பெற்ற அம்மாகூட முகம் கொடுத்தே பேசவில்லை. இருபதாண்டுகளுக்குப் பின்னரும் அப்பா அந்த மனக்கசப்பை தக்க வைத்திருந்தார். 'அப்பா கோபம் நியாயம்தானே' என்று அம்மா சொல்லிக் கொண்டிருந்தார்.*

*ஒரு நல்ல தமிழ்ப் படத்தின் காட்சி மாதிரி இருக்கிறதல்லவா? இதில் ஒரு சின்ன வேறுபாடு. இங்கே திருமணம் நிச்சயிக்கப்பட்டது ஒரு ஆணுக்கு. அவனுக்கு வயது பத்தொன்பது. மெட்ரிக் படித்து முடித்து அப்பாவுக்கு உதவியாக கடைவணிகத்தில் இருந்தான். என் வாசகர்களில் ஒருவர் சொன்ன உண்மைக் கதை இதுஅவர் செட்டியார் சாதியைச் சேர்ந்தவர். இப்போது வயது எழுபத்தைந்துக்கும்மேல். அவரது சொந்தக்கதைதான்.*

*அவரது அந்தக் குருநாதர் ஈவே.ரா! ஈவேரா பற்றிய என் விமர்சனக் கட்டுரை ஒன்றுக்கு பதிலாக என்னை தொலைபேசியில் அழைத்த அவர் இந்தச் சம்பவத்தைச் சொன்னார். '...நீங்க சொல்றதெல்லாம் சரிதான் தம்பி. ஆனா நான் ஒரு தனிமனுஷன். ஒரு பெரிய கூட்டத்திலே ஒரு துளி கெடையாது. என் வாழ்க்கையப் பத்தி நானே முடிவெடுக்கலாம்னு எனக்கு சொன்னது பகுத்தறிவு இயக்கம்தான். நான் இன்னிக்கு ஆத்திகன். ஆனா அந்த நாத்திகம் இல்லேன்னா இந்த ஆத்திகத்துக்கே நான் வந்திருக்க மாட்டேன். ஏன்னா சுயமா சிந்திச்சிருக்கவே மாட்டேன்'*

*அவர் சொன்னதை அவரே விளக்கினார். 'தம்பி என்னோடது என் ஆத்மாவோட மீட்புக்கான ஆன்மீகம். நம்ம மதத்திலே முக்தின்னாலே ஆன்மாவோட முக்திதான். அந்த விதத்திலே இங்கே தனிமனுஷன் செல்ஃப் பத்தியெல்லாம் பேசியிருக்காங்க. ஆனா அந்த எடத்துக்கு போறதுக்கான வழியே அப்ப நம்ம மதத்திலே கெடையாது. அது ஒருசிலருக்கு அதிர்ஷ்டவசமா குரு உறவாலே கிடைச்சா உண்டு. மத்தவங்களுக்கு மதம்னா ஞானம் கெடையாது. ஆசாரம் மட்டும்தான். அந்த ஆசாரத்துலே செல்ஃபுக்கே எடமில்லை....*

*... எனக்கு செல்ஃபுன்னு ஒண்ணு இருக்குங்கிறதச் சொன்னவரு பெரியார்தான். அவர் வழியாத்தான் நான் அதை உருவாக்கிக் கிட்டேன். அப்றம் அதோட முழுமை என்னாங்கிற கேள்விவழியா நான் ஆன்மீகத்துக்குள்ள வந்தேன். ஜெ.கிருஷ்ணமூர்த்திய கேட்டேன். இப்ப வள்ளலாரோட வழிவந்தவனா ஆன்ம சாதகம் பண்றேன். என்னோட ஆன்மீகத்துக்கு முதல் குரு பெரியார்தான். எந்த சந்தேகமும் இல்லாம சொல்றேன்''*

*சுவாரசியமான ஒரு விஷயத்தை சொல்லி கதையை முடிக்கவேண்டும். சில வருடங்கள் கழித்து அதே மாமா பெண்ணை 'சுயமாக முடிவெடுத்து' அவர் திருமணம் செய்து கொண்டார்! பாட்டிக்கும் வயது எழுபதை தாண்டிவிட்டது! குடும்பத்தில் நாலாம்தலைமுறை வந்துவிட்டது.*

*என்னுடைய தலைமுறையில் நான் நினைவறிந்த நாள் முதலே எல்லாவற்றையும் என் வாழ்க்கை என் சிந்தனை என்ற 'நான்' இல் இருந்தே ஆரம்பித்திருக்கிறேன். அதை உணராத ஒரு தலைமுறையை கற்பனை செய்யவே கடினமாக இருந்தது. ஆனால் சமீபத்தில் ராமச்சந்திர குகாவின் காந்திக்குப்பின் இந்தியா என்ற நூலை வாசித்தபோது முதல் இந்தியத்தேர்தலைப் பற்றிய அத்தியாயத்தில் ஆச்சரியமான ஒரு தகவலைக் கண்டேன்.*

*1952ல் முதல் லோக்சபா தேர்தலில் இந்தியா முழுக்க தேர்தலின் பொருட்டு முதல் வாக்காளர் பட்டியல் கணக்கிடப் பட்டது. வாக்காளர்களின் பெயரும் தனியடையாளமும் பதிவு செய்யப் பட்டது. அப்போது ஒன்று தெரிந்தது, இந்தியாவில் நூற்றுக்கணக்கான சமூகங்களில் மக்களுக்கு அப்படி தனிப்பெயர் கிடையாது. குலப்பெயர், இனப்பெயர், சாதிப்பெயர்தான் அவர்களுக்கும். கூப்பிடுவதற்காக ஓர் அடையாளம் இருக்கும். பெயரைக் கேட்டால் சாதியை அல்லது குலத்தையே சொன்னார்கள். அவர்களுக்கு உண்மையிலேயே தாங்கள் தனிமனிதர்கள் என்று தெரியாது.*

*இங்கே சுவாரசியமான ஓர் அம்சம் உண்டு. 1872ல் முதல் இந்திய மக்கள் தொகை கணக்கெடுப்பு நடந்தது. 1881ல் முதல் முழுமையான மக்கள் தொகை கணக்கெடுப்பு. அப்போதெல்லாம் எப்படி மக்கள் தொகை கணக்கிட்டார்கள்? தனிநபர்களாக அல்ல, கூட்டங்களாக குலங்களாக சாதிகளாக மக்களை ஒட்டுமொத்தமாக கணக்கிட்டார்கள். இந்த ஊரில் புலையர் இவ்வளவு, குறவர் இவ்வளவு, ஈழவர் இவ்வளவு, நாயர் இவ்வளவு என்று கணக்கிட்டார்கள். ஆம், அப்போது நம் தேசத்தில் தனிமனிதர்கள் அதிகம்பேர் இல்லை.*

**ஐரோப்பாவில் இருந்து…**

*கிட்டத்தட்ட இதேநிலை பதினாறாம்வ்நூற்றாண்டுவ்வரை ஐரோப்பாவில் இருந்தது. தனிமனிதன் என்ற அடையாளமே இல்லாமல் மக்கள் திரளடையாளம் கொண்டவர்களாக மட்டுமே இருந்தார்கள். அதற்கு எதிராக உருவானதே சுதந்திர இச்சை [Free will] இயக்கம். அறவியலில், ஆன்மீகத்தில், தத்துவத்தில், அரசியலில் ஆழ்ந்த பாதிப்பை உருவாக்கியது அது. 'மனிதனின் பிரக்ஞை சுதந்திரமானது' என்று அதை ஒரே வரியில் சுருக்கலாம். அந்த ஒருவரியில் இருந்தே மேலைச்சிந்தனையில் நவீன தத்துவம் தொடங்கியது என்பார்கள்.*

*உடனே பல்வேறு கேள்விகளை அது சந்திக்கிறது. அது அதைப் படைத்த சக்திகளில் இருந்து விடுபட்டு செயலாற்ற வல்லதா? பிரபஞ்ச வெளியின் பிரம்மாண்டமான ஒருங்கிணைப்புக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லையா? மனிதன் எந்த அளவுக்கு பிரபஞ்சத்தை அறிய முடியும்? அவன் அறிதல் எல்லைக்குட்பட்டது என்றால் மனிதன் தான் செய்யும் செயல்களுக்கு எவ்வகையில் பொறுப்பேற்றுக் கொள்வது?*

*இதற்கெல்லாம் சுதந்திர இச்சை இயக்கம் பல்வேறு வகையில் பதில்களை அளித்துள்ளது. பிரபஞ்சத்தை படைத்த ஆற்றல்கள் மனிதனை சுதந்திரமாக தன் தெரிவுகளை நிகழ்த்திக்கொள்ளும்படியே படைத்துள்ளன என்பதே ஆன்மீகதளத்தில் அளிக்கப்பட்ட பதில். மனிதனின் ஆளுமை என்பதே அவனுடைய தெரிவுகள் என்ன என்பதில் இருந்து ஆரம்பிக்கிறது.*

*ஆம், மனிதன் பிரபஞ்சத்தை முழுமையாக அறிய முடியாது, ஆனால் தான் அறியும் எல்லைக்குள் அவன் தன் தெரிவுகளை அமைத்துக் கொள்ள முடியும். மொத்த உலகையும் அவன் அறிய முடியாது. ஆனால் இருளில் செல்பவன் தன் விளக்கு வெளிச்சத்தின் வட்டத்துக்குள் தெரிவனவற்றை மட்டுமே வைத்து முன்னால் செல்வதுபோல அவன் தன் அறிவை பயன் படுத்திக் கொள்ள முடியும். தெரிந்து செய்தாலும் தெரியாமல் செய்தாலும் மனிதன் தன் செயல்களுக்கு முற்றிலும் அவனே பொறுப்பேற்க வேண்டும் என்பவை சுதந்திர இச்சை இயக்கத்தின் அறவியல் பதில்கள்.*

*இந்த விவாதம் மிக, மிக விரிவானது. இதற்கு முடிவான பதில்கள் இல்லை. டிடிடியை கண்டுபிடித்த முல்லர் [Paul Hermann Müller ] தன் அறிதலின் எல்லைக்குள் நின்று மனித குலத்துக்கு நல்லதுதான் செய்தார். அடுத்த அரை நூற்றாண்டில் பூமியின்*

உயிர்ச்சமநிலையை அழித்தமைக்கு அவர் பொறுப்பாக முடியுமா என்ன? இன்னொருபக்கம் மொத்த உலகப் போருக்கும் பொறுப்பை பேசாமல் கடவுளின் அல்லது விதியின் லீலை என்று போட்டு விட முடியுமா? மனிதன் பொறுப்பேற்க வேண்டாமா?

நடைமுறையில் ஐரோப்பாவில் சுதந்திர இச்சை இயக்கம் மிக நேர்நிலையான விளைவுகளை உருவாக்கியது. நிறுவன மதத்தில் இருந்தும் அதன் கருத்தியல் மூளைச்சலவையில் இருந்தும் மனிதர்களை வெளியே கொண்டு வந்தது. தனிமனிதன் தன் செயல்களுக்கும் தன் சமூகத்தின் செயல்களுக்கும் பொறுப்பேற்க வேண்டும் என்ற எண்ணமே ஜனநாயகத்தின் அடிப்படை. ஜனநாயகத்தின் அனைத்து விழுமியங்களும் அங்கிருந்து உருவாயின. எங்கே தனிமனிதன் இருக்கிறானோ அங்குதான் ஜனநாயகம் இருக்கிறது.

இருபதாம் நூற்றாண்டின் ஜனநாயக விழுமியங்கள் அனைத்துக்குமே சுதந்திர இச்சை இயக்கமே தொடக்கப் புள்ளி எனலாம். மனிதர்கள் நடுவே அது சமத்துவத்தை உருவாக்கியது. பொது நீதிக்காக கோரியது. தனிமனித உரிமைகளுக்காக வாதாடியது. அந்தரங்கத் தன்மையை அடிப்படை உரிமை என்றது. 'மனிதன் சுதந்திரமானவனாகவே பிறக்கிறான்' என்ற சொல்லாட்சியில் உள்ள அறைகூவல் சாதாரணமானதல்ல. அது பூமியையே உலுக்கிய ஒரு கருத்து என்றால் மிகையல்ல.

ஐரோப்பாவில் உருவான நவீன நாத்திக சிந்தனை சுதந்திர இச்சை இயக்கத்தின் ஒரு விளைவு. இங்கிலாந்திலும் ஃப்ரான்ஸிலும் அதன் தொடக்கம் அமைந்தது. 'ஐரோப்பிய அறிவொளிக் காலம்' என்று வரலாற்றாசிரியர்களால் அது அழைக்கப் படுகிறது. மத மேலாதிக்கத்துக்கு எதிராக சுதந்திர தனிமனிதனை உருவாக்கும் சிந்தனை அலை என அதை வரையறை செய்யலாம். மனித வாழ்க்கையை கடவுளின் கைகளில் அல்லது விதியின் கைகளில் விட்டு விடுவதற்கு மறுத்தது அது. மனிதன் என்பவன் அவனுடைய சிந்தனைகளாலும் அவனுடைய தெரிவுகளாலும் உருவாகும் ஆளுமை என்று வகுத்தது. டெனிஸ் திதரோ, தாமஸ் ஹோப்ஸ், வால்ட்டேர் ரூஸோ போன்றவர்கள் அதன் முகங்கள்.

அறிவொளிக் காலம் இரு மாபெரும் அரசியல் புரட்சிகளுக்கு களம் அமைத்தது. அமெரிக்கப் புரட்சி, பிரெஞ்சுப் புரட்சி. இரண்டும் ஒன்றுடன் ஒன்று தொடர்புள்ளவை. பிரெஞ்சுப் புரட்சி அறிவொளிக் காலத்தின் மையக் கருத்துக்களை உலகமெங்கும் கொண்டு சேர்த்தது. காலனியாதிக்கம் மூலம் உலகமெங்கும் ஒரேவகையான கல்வியும்

*செய்தித் தொடர்பும் உருவாக்கப் பட்டிருந்தமையால் அந்தக் கருத்துப் பரவல் மிக விரைவாக நிகழ்ந்தது.மதத்தில் இருந்து அறத்தை பிரித்ததே ஒட்டு மொத்தமாக அறிவொளிக் காலத்தின் சாதனை எனலாம்.*

*அந்த புரட்சிகள் உருவாக்கிய விவாதங்கள் மூலம் உருவானது ஐரோப்பிய பகுத்தறிவுக்காலம் [Age of Rationalism] அல்லது கரணியக் காலகட்டம். [Age Of Reason] லுட்விக் ஃபாயர்பாக் [ Ludwig Feuerbach] ஆர்தர் ஷோபனோவர் [ Arthur Schopenhauer ] நீட்ஷே [ Friedrich Nietzsche ] போன்றவர்கள் அதை உருவாக்கினார்கள். அதன் வளர்ச்சிப்*

*போக்கின் மார்க்ஸியம் உருவாகியது. தனிமனிதமைய நோக்கு அதன் எதிர் உச்சநிலையில் இருத்தலியத்தை உருவாக்கியது. அதன் நேர் உச்சநிலையில் அமெரிக்க நடைமுறைவாதத்தை உருவாக்கியது. [Pragmaticism]*

*ஐரோப்பிய அறிவொளிக்காலம், பகுத்தறிவுக்காலம் இரண்டுக்குமே அவர்களின் கிரேக்க தொல்மரபே விதைக்களமாக இருந்தது என்றால் மிகையல்ல. கிரேக்க சிந்தனையின் மாபெரும் தொடக்கப்புள்ளியான சாக்ரட்டீஸ் கடவுள்கள் மனிதனை முழுமையாக கட்டுப்படுத்துகின்றன என்ற கூற்றை எதிர்த்து கொல்லப்பட்டவர். கிரேக்க மரபில் பொருள்முதல்வாதம் அல்லது ஜடவாதம் வலுவான கருத்துநிலையாக இருந்தது. எபிகுரஸின் [Epicurus] அணுவாதம் யூகிமிரஸின் [Euhemerus] பொருள்மையவாதம் போன்றவை செல்வாக்கான சிந்தனைகளாக இருந்தன. ஐரோப்பிய மறுமலர்ச்சி என்பதே கிரேக்கமரபை மறுகண்டுபிடிப்பு செய்வதாகத்தான் இருந்தது*

இந்தியப்பரிணாமம்

*தமிழகத்தின் முக்கியமான சிந்தனையாளர்களில் ஒருவர் திரு வி கல்யாணசுந்தரனார். சைவசித்தாந்தச் சொற்பொழிவாளர். சைவ இலக்கியங்களில் ஆழமான ஈடுபாடும் பயிற்சியும் கொண்டவர். பின்னர் வள்ளலாரின் அருவ இறைவழிபாட்டை ஏற்றுக்கொண்டார். ஆனால் ஐயத்திற்கிடமில்லாமல் ஆத்திகர்*

*1926 ல் சென்னை முத்தியால்பேட்டையில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் திருவிக அன்று காங்கிரஸை விட்டு வெளியேறி சுயமரியாதை இயக்கத்தை உருவாக்கியிருந்த*

ஈ.வெ.ராமசாமி நாயக்கரை பாராட்டி அவரை தான் முழுமையாக ஏற்றுக்கொள்வதாக அறிவித்தார். அன்றைய சூழலில் அந்த உரை பரபரப்பாக விவாதிக்கப்பட்டிருக்கிறது. ஆச்சரியமான ஒரு நிகழ்வு, ஆனால் அத்தகைய நிகழ்வு இந்தியச்சூழலில் தொடர்ந்து பல இடங்களில் நடந்தது. காரணம் இங்கே நிகழ்ந்த ஒரு கருத்தியல்பரிணாமம்தான். நான் முதலில் கூறிய நிகழ்வை , தன் ஆன்மீகத் தொடக்கப்புள்ளி ஈவெராவே என ஒருவர் சொன்னதை, இங்கே இணைத்துப்பார்க்கலாம்.

சமீபத்தில் நான் சில வங்க, தமிழ், கன்னட எழுத்தாளர்களை வாசித்தபோது ஒன்றைக் கவனித்தேன். இவர்களனைவரிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டுப் பிரிட்டிஷ் இலக்கியங்களின் கருக்கள் கையாளப்பட்டிருந்தன. மௌனியின் பலகதைகள், புதுமைப்பித்தனின் பல கதைகள் கூல்ரிட்ஜ் போன்றவர்களின் கவிதைகளை ஒட்டியவை. ஏனென்றால் அன்றைய கவிப்பாடத்திட்டத்தில் அவை இருந்தன. இந்திய நவ இலக்கியத்தில் பிரிட்டிஷ் பாடத்திட்டத்தின் செல்வாக்கு மிக வீச்சுள்ள ஒன்றாகும்

இங்கே பிரிட்டிஷ் கல்வி அதிகமும் பாதிரியார்களால் அளிக்கபப்ட்டமையால் ஐரோப்பிய அறிவொளிக்கால, பகுத்தரிவுக்கால தத்துவங்கள் கற்பிக்கப்படவில்லை. ஆகவே பகுத்தறிவுக்காலகட்டம் இந்தியாபோன்ற கீழைநாடுகளில் மூலச்சிந்தனையாளர்கள் வழியாக வந்து சேரவில்லை. மாறாக அன்று கல்லூரிப்பாடங்களில் இருந்த ஷெல்லி,கீட்ஸ்,வேர்ட்ஸ்வொர்த் போன்ற கவிஞர்கள் மற்றும் பெர்னாட் ஷா போன்ற இலக்கியவாதிகளின் வழியாகவே வந்து சேர்ந்தது. இங்கிருந்த படித்த நடுத்தரவர்க்கம் அதனால் கவரப்பட்டது.

ஐரோப்பியக் கல்வி அதிகம் கிடைத்த வங்காளம் இதில் முன்னணியில் இருந்தது. அதன்பின்னரே அது விசை அரசியலில் செயல்பட ஆரம்பித்தது. பின்னர் இலக்கியத்தில் கலைகளில். இந்தபாதிப்பில் இந்தியா முழுக்க ஒரு தர்க்கம் செயல்படுவதைக் காணலாம். அதாவது மேற்கத்திய அறிவொளிக்காலம் முதலில் மதச்சீர்திருத்தக் கருத்துக்களாகவே இங்கே வெளிப்பாடு கொண்டது .ராஜாராம் மோகன் ராய் ,விவேகானந்தர் என முன்னோடிகளில் ஆரம்பித்து ஒரு நூற்றாண்டுக்காலம் அந்த வேகம் நீடித்தது.

ஐரோப்பாவில் இக்கருத்துக்களில் ஒரு பரிணாம வளர்ச்சிப்பாதையை கண்டோம். முதலில் அறிவொளிக்காலகட்டம். பின்னர் பகுத்தறிவுக்காலகட்டம். அதன் சாராம்சமாக தனிமனிதன் என்ற கருத்து. தனிமனித அகவிடுதலைக்கான அறைகூவல். அதேதான் இங்கும் நிகழ்ந்தது. ஐரோப்பிய அறிவொளிக்கால கருத்துக்கள் இங்குள்ள

மதசிந்தனைகளிலேயே முதலில் எதிரொலித்தன. பிரமம்ஞானசங்கத்தின் பாடல்களை இப்போது பார்க்கையில் அவற்றை ஷெல்லியும் கீட்ஸும் எழுதியிருக்கக் கூடும் என்ற எண்ணம் ஏற்படுகிறது.

அந்த சீர்திருத்த அலை இங்கே ஏற்கனவே இருந்த தனிமனித ஆன்மீகத்தைக் கண்டடைந்தது. மதச்சீர்திருத்தத்துக்காக எழும் மதசிந்தனையாளர்கள் தங்கள் மதத்தில் உள்ள முற்போக்கானதும் சமகாலத்தின் தேவைக்கேற்ப விரித்துக்கொள்ளக்கூடியதுமான சிந்தனைகளை முதலில் கண்டெடுப்பார்கள். அவ்வாறுதான் இந்திய ஞானமரபில் இருந்து அத்வைதமும் பௌத்தமும் கண்டெடுக்கப்பட்டது. விவேகானந்தர் முதல் நாராயணகுரு சகஜானந்தர் வரை உதாரணமாகக் காட்டலாம்.

தமிழிலும் அந்த பாதிப்பு அதே வகையில் நிகழ்ந்தது. ஐரோப்பிய அறிவொளிக்காலச் சிந்தனைகளின் பாதிப்பை நாம் காண்பது வடலூர் ராமலிங்க வள்ளலாரில். அவரது இயக்கத்தை இந்தியாவின் மாபெரும் மதச்சீர்திருத்த இயக்கங்களின் வரிசையில் வைக்கலாம். வள்ளலாரில் இருந்த ஐரோப்பிய அறிவொளிக்கால பாதிப்புகளைப்பற்றி இன்னமும் விரிவாக ஆராயபப்டவில்லை.

மதச்சீர்திருத்ததில் இருந்து சமூகசீர்திருத்த நோக்கம் உருவாகிறது. அங்கிருந்து அரசியல் நோக்கங்கள். தமிழகத்தில் பாரதி, அ.மாதவையா, ராஜம் அய்யர் , வ.வெ.சு.அய்யர் போன்றவர்கள். மதச்சீர்திருத்த நோக்கமும் கொண்டவர்கள். ஆனால் சமூகசீர்திருத்தம் அரசியல் இலக்கியம் போன்றவற்றை முதல்நோக்கமாகக் கொண்டார்கள்.

அதன் அடுத்தகட்டமாக திருவிக, சிங்காரவேலர் போன்ற அரசியல்நோக்குள்ள சிந்தனையாளர்கள் உருவானார்கள். நாத்திகச் சிந்தனையாளர்கள் அதைத்தொடர்ந்து உருவானார்கள். ஆனால் இவர்களில் மிகச்சிலரே அறிவொளிக்கால மூல ஆசிரியர்களை குறிப்பிட்டிருக்கிறார்கள். குறிப்பாகச் சொல்லவேண்டுமென்றால் ப.ராமசாமி மற்றும் சாமிநாத சர்மா. தமிழைப்பொறுத்தவரை ஃபாயர்பாக் அல்லது நீட்சே பெயரைச் சொன்ன முன்னோடிகள் வேறு யாருமிருப்பதாக தெரியவில்லை.

ஐரோப்பிய பகுத்தறிவுவாதத்தின் தத்துவப்பின்புலம் தமிழ்நாட்டில் பொருட்படுத்தப்படவில்லை. அதன் மத எதிர்ப்பு அரசியல் உடனடியாக இங்கே கொண்டுவரப்பட்டது. ஆகவேதான் பிற எந்த சிந்தனையாளரை விடவும் கிறித்தவ எதிர்ப்பாளரான இங்கர்சால் [Robert G. Ingersoll] தமிழ்நாட்டில் அதிகமாகப் பேசப்பட்டார்.

*பெர்நாட் ஷா[ George Bernard Shaw ]அதிகமாக மேற்கோள் காட்டப்பட்டார். இன்றுகூட தமிழ்நாட்டில் ஒர் உயர்நிலைப்பள்ளி மாணவருக்குக் கூட தெரிந்த ஐரோப்பிய சிந்தனையாளர்கள் இவர்களே. சி.என்.அண்ணாத்துரை இந்நாட்டு இங்கர்சால் தென்னாட்டு பெர்நாட் ஷா என அவரது ஆதரவாளர்களால் புகழப்பட்டார்.*

*கிட்டத்தட்ட இதே வரைபடத்தை கேரளத்திற்கும் கொடுக்கலாமென தோன்றுகிறது. ஏறத்தாழ இதே காலகட்டத்தில் கேரளத்தில் மதச்சீர்திருத்த எழுச்சி உருவானது. சட்டம்பி சுவாமிகள், வாக்படானந்த சுவாமிகள் நாராயணகுரு போன்ற பலருடைய கருத்தியல்செல்வாக்கு நிகழ்ந்தது. இவர்கள் அனைவருமே ஆத்திகர்கள். பெரும்பாலும் அத்வைதிகள். இவர்களின் சிந்தனைகள் சீராக நாத்திக-பொருள்முதல்வாத சிந்தனைகளுக்கு வழியமைத்தன என்பது வரலாற்றின் முரணியக்கம் என்றுதான் சொல்லவேண்டும்.*

*மதச்சீர்திருத்த முன்னோடிகள் அவற்றை தத்துவக்கருவியாகக் கொண்டு மதச்சீர்திருத்தத்தை ஆரம்பிப்பார்கள். அது சமூகசீர்திருத்தத்துக்கும் அதன்வழி அரசியல்மாற்றத்துக்கும் வழியமைக்கும். அந்தப்பாதையில் இயல்பாக ஐரோப்பிய நாத்திக சிந்தனைகளும் புரட்சி சிந்தனைகளும் வந்து சேர்கின்றன. இதுவே வழக்கமாக இந்தியச்சூழலில் நிகழும் பரிணாமமாகும். இந்தச்சிந்தனையை ஒரு பாம்பாகக் கொண்டால் அதன் தலை தூய ஆன்மீகநோக்கு. அதனடிபப்டையிலான மதச்சீர்திருத்தம். வால் தூய நாத்திகம், முழுமையான மத எதிர்ப்பு. இந்த விசித்திரமான முரணியக்கத்தை நோக்கியே நான் இங்கே கவனத்தை ஈர்க்கிறேன்*

*ஆகவேதான் சுவாமி விவேகானந்தரை இந்தியாவின் மறுமலர்ச்சியின் முன்னோடி என இடதுசாரிகள் உட்பட அனைவருமே ஏற்றுக்கொள்கிறார்கள். இந்திய நாத்திக சிந்தனைகளையும் புரட்சி சிந்தனைகளையும்கூட அவரிடமிருந்து தொடங்கியவை என்று யோசிக்க முடியும்.*

*நாராயணகுருவின் இயக்கமும் ஐரோப்பிய அறிவொளி இயக்கத்தின் பாதிப்பு கொண்டதுதான். டாக்டர் பல்பு ஐரோப்பியக் கல்வி கற்றவர். அவரிடம் ஐரோப்பிய பகுத்தறிவுவாதம் பெரும்செல்வாக்கைச் செலுத்தியது என்பதை நடராஜகுருவின் சுயசரிதையில் இருந்து அறிகிறோம். டாக்டர் பல்பு நாராயணகுருவிடம் கண்டது ஆன்மீகத்தை அல்ல. நாராயணகுருவின் அத்வைதத்தில் இருந்த புரட்சிகரத்தைத்தான். மானுட சமத்துவத்துக்கான ஒரு அறைகூவல் அதிலிருப்பதை அவர் கண்டார். அதை*

முன்னெடுத்தார். விளைவுதான் நாராயண இயக்கம். ஆகவே கேரள நாத்திகர்களுக்கும் புரட்சியாளர்களுக்கும் நாராயணகுரு ஏற்புடையவர்.

இக்காரணத்தால்தான் தமிழகத்தின் நாத்திகர்களுக்கும் புரட்சியாளர்களுக்கும் ராமலிங்கவள்ளலார் ஏற்புடையவராக இருக்கிறார். ஈவெராவுக்கு வள்ளலார் மீது பெரும் ஈடுபாடு இருந்தது. திராவிட இயக்கம் அதன் உச்சநிலையில்கூட வள்ளலாரை ஏற்கும் பலரை தன்னுள்கொண்டதாகவே இருந்தது.

*6) கல்வாழை [ நாத்திகவாதம் -தமிழகத்திலும் கேரளத்திலும்] 2*

***இருவகை பகுத்தறிவு இயக்கங்கள்***

*நாராயணகுரு மரபில் வந்த சுவாமி சிதம்பர தீர்த்தா அவர்கள் அவரது குருவான நடராஜகுருவைப்பற்றி நினைவுகளை எழுதியிருக்கிறார். நடராஜகுருவின் வகுப்புகள், வேடிக்கைக்கதைகள் என மிகச்சுவாரசியமான ஒரு நூல் அது. அதில் சில இடங்கள் எனக்கு விசேஷமான ஆர்வத்தை உருவாக்கின. நாராயணகுருவுக்கும் நடராஜகுருவின் அப்பாவான டாக்டர் பல்புவுக்குமான கருத்துமோதல்கள்தான் அவை.*

*டாக்டர் பல்புவுக்கு நாராயண குருவின் அத்வைதத்தில் ஈடுபாடில்லை. சில தருணங்களில் அவர் அதை 'அய்யர்களின் சிந்தனை' என்று இகழ்ந்தும் சொல்கிறார். அதைப்பற்றி நாராயணகுரு சிறிது வருத்ததுடனும் கேலியுடனும் நடராஜகுருவிடம் பேசுகிறார். நாராயணகுருவுக்கு அறிவியல் சிந்தனை குறைவு என அடிக்கடிச் சுட்டிக்காட்டுகிறார் டாக்டர் பல்பு.*

*ஒரு சந்தர்ப்பம். குருவும் டாக்டரும் வற்கலை ஆசிரம வளைப்பில் நின்று பேசிக்கொண்டிருக்கிறார்கள். 'இங்கே இத்தனைபேர் வருகிறார்கனே, இந்த கழிப்பிடத்தின் மூத்திரத்தை முழுக்க அப்படியே பக்கத்து வயல்களுக்கு கொண்டுசென்றால் தேவையான நைட்ரஜன் கிடைக்குமே. இதைக்கூட செய்யாமல் இருக்கிறோம். இங்கேயும் ஆசாரம் இருக்கத்தான் செய்கிறது, அறிவியல்நோக்கு இல்லை' என்கிறார் பல்பு.*

*நாராயணகுரு 'அப்படி விடக்கூடாது. அந்த வழக்கம் இல்லை. அதற்கு காரணம் என்ன என்று பார்க்கவேண்டும்' என்கிறார். டாக்டர் பல்பு கடுமையாக வாதிடுகிறார். நாராயணகுரு அருகே நின்றிருந்த நடராஜகுருவை திரும்பி பார்க்கிறார். அப்போது அவர் நிலவியல் கற்ற முனைவர் நடராஜன்தான். நடராஜ குரு மென்மையாக 'சிறுநீரை நேரடியாக விளைநிலத்தில் விடமுடியாது. தெவையில்லாத பாக்டீரியாக்கள் உருவாகலாம். தேவையான பாக்டீரியாக்கள் மற்றும் பூஞ்சைகள் வழியாக நைட்ரஜன்*

வந்தால் மட்டுமே நிலம் ஆரோக்கியமாக இருக்கும்'என்றார். நன்றியுடன் நாராயணகுரு புன்னகை செய்தார்.

நான் இங்கே மூன்று தரப்புகளைக் காண்கிறேன். ஒன்று இந்திய மரபில் வேரூன்றியது, நாராயண குரு. இன்னொன்று மேலைமரபில் வேரூன்றியது , டாக்டர் பல்பு. இரண்டும் இரு முரணாற்றல்களாக முயங்கி ஒரு மத-சமூக சீர்திருத்த இயக்கமாக ஆகின்றன. அதன் விளைவாக உருவாகிறது மூன்றாவது தரப்பு, நடராஜகுரு. அது இந்திய சிந்தனையின் சாராம்சத்தை மேலைச்சிந்தனையின் சாராம்சத்துடன் இணைத்து புதிய ஒன்றை உருவாக்க முனைகிறது. ஆம்,நடராஜகுருவின் வாழ்க்கைச்சாதனையே அதுதான்.

இந்தியப் பகுத்தறிவு இயக்கத்தை இதேபோல இரு கருத்தியல் சரடுகளாக பிரித்துக்கொள்வது உதவிகரமானது. ஐரோப்பாவைப்போலவே இந்திய சிந்தனைமரபிலும் விரிவானதோர் ஆன்மீக மறுப்பு இயக்கம் உண்டு. இவற்றில் சார்வாகத்தை நாத்திகம் என்றும், சாங்கியம் யோகம் நியாயம் வைசேஷிகம் ஆகியவற்றை பொருள்முதல்வாத சிந்தனைகள் என்றும் சொல்லலாம். இவற்றில் சாங்கியத்தின் பல அடிப்படைகளை ஏற்றுக்கொண்ட தேரவாத பௌத்தமும் பொருள்முதல்வாத அடிப்படை கொண்டதே. இந்த இந்திய சிந்தனை மரபில் இருந்து மட்டுமே முளைத்துவந்த ஜடவாதம்/நாத்திகவாதம் எப்போதுமே இங்கே இருந்துவந்தது

தமிழகத்தை எடுத்துக்கொண்டால் தமிழ்ச்சித்தர் மரபில் ஒரு பகுதி ஜடவாத/நாத்திகச்சார்பு கொண்டதாக இருந்தது. அவர்களிடமிருந்து ஜடவாதத்தைப் பெற்றுக்கொண்ட சித்தவைத்தியர்கள், ரசவாதிகள் தமிழகத்தில் இருந்தனர். ஆனால் தமிழகத்தில் எட்டாம் நூற்றாண்டில் உச்சம் கொண்டு ஆயிரம் வருடம் கோலோச்சிய பக்தி இயக்கம் நாத்திகம் மற்றும் ஜடவாதத்தை வெறுத்து ஒதுக்கியதனால் இச்சிந்தனைகளுக்கு சமூக அங்கீகாரம் இருக்கவில்லை. அவை தனிநபர் சிந்தனைகளாக அந்தரங்கமாக புழங்கிவந்தன.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் இந்தியாவில் நாத்திகச்சிந்தனைகள் புதுப்பிறப்பு எடுத்தன. அவற்றுக்கான சமூகத்தேவை ஒன்று உருவானது. உலகமெங்கும் இருந்ததுபோல இங்கும் நிலப்பிரபுத்துவம் மதக்கருத்தியலால் கட்டமைக்கப்பட்டிருந்தது. ஆதிக்கசிந்தனைகள் அனைத்துக்குமே மதம்சார்ந்த விளக்கம் இருந்தது. நிலப்பிரபுத்துவத்தால் ஒடுக்கப்பட்டிருந்த மக்களில் சிலர் உரிமைகளை உணர்ந்தபோது மதக்கருத்துக்களை உடைத்தாகவேண்டுமென்று நினைதார்கள். நாத்திகவாதம் விடுதலைக்கான கருவியாக உருப்பெற்றது இவ்வாறுதான்.

*இவ்வாறு நாத்திகவாதம் எழுந்துவந்தபோது மரபில் இருந்த நாத்திகவாதத்தை மீட்டெடுக்கும் சிந்தனையாளர்கள் உருவானார்கள். தமிழக நாத்திகவாதத்தின் முன்னோடி என்றும் முக்கியமான முதல்சிந்தனையாளர் என்றும் சொல்லத்தக்கவர் பண்டித அயோத்திதாசர். [1845- 1932] காத்தவராயன் என்ற இயற்பெயர் கொண்ட அயோத்திதாசர் தாழ்த்தப்பட்ட சாதியைச் சேர்ந்தவர். பிரம்மஞானசங்கத்துடன் தொடர்புகொண்டிருந்தார். பின்னர் அதில் இருந்து விலகி சுதந்திர சிந்தனையாளராக மாறினார்.*

*தமிழ்பௌத்தம் என்ற கருத்தியலை அயோத்திதாசர் முன்வைத்தார். அவரது கூற்றுப்படி இந்தியாவில் இரு கருத்தியல் இயக்கங்கள் உள்ளன. ஒன்று பிராமண மதம் அல்லது இந்துமதம். அது சுரண்டல் தன்மை கொண்டது. ஆதிக்க மதம். அதுதான் சுரண்டலாதிக்கத்தை உருவாக்கும் நோக்குடன் வழிபாடுகளையும் கடவுள்நம்பிக்கையையும் வேரூன்றச்செய்தது. அதற்கு எதிரானது பௌத்தம். அது நாத்திகச்சிந்தனை. விடுவிக்கும் தன்மை கொண்டது.*

*தமிழகத்தில் பௌத்தம் செல்வாக்குடன் இருந்தது. பின்னர் அதை பிராமணமதம் மன்னர்களை கவர்ந்து அவர்களை பயன்படுத்தி அழித்தது. அதன் விளைவாக பௌத்தர்கள் நிலம் பிடுங்கப்பட்டு தாழ்த்தப்பட்ட சாதியினராக ஆனார்கள். இன்று பௌத்தத்தை மீட்டு அதனைக்கொண்டு பிராமணமதத்தை வென்றால்மட்டுமே சுரண்டலில் இருந்து தாழ்த்தப்பட்ட மக்கள் விடுபட முடியும். அவர்கள் இந்துக்கள் அல்ல, பூர்வ பௌத்தர்கள். அவர்களின் நூலே திருக்குறள். அதன் உண்மையான பெயர் திரிக்குறள். அதையும் பிற பௌத்த நூல்களையும் பிராமணமதம் கைப்பற்றிக்கொண்டது. அவற்றை மீட்க வேண்டும்– இதுவே அயோத்திதாசரின் சிந்தனைகள்.*

*அயோத்திதாசரின் நாத்திகசிந்தனைகளின் நீட்சி என்று ஈவெராவைச்[ 1879 – 1973] சொல்லலாம். ஈவேரா அவர்களை கருத்தியல்ரீதியாக வகுத்துக்கொள்வது இன்று சிக்கலாக உள்ளது. அவர் பேசியவை ஐரோப்பிய நாத்திகவாதக்கருத்துக்களை. ஆனால் அவர் அவற்றைக் கற்றவர் அல்ல. ஐரோப்பிய தத்துவ அறிமுகம் கொண்டவர் அல்ல அவர். அயோத்திதாசரைப்போல இந்திய தத்துவமரபை கற்றவரும் அல்ல. அவரது நாத்திகம் என்பது தமிழ்ச்சூழலில் இருந்து இயல்பாக உருவான ஒரு சிந்தனை. அதை ஒருவகை நாட்டார் சிந்தனை என்றுகூடச் சொல்லலாம். பொதுவிவேகம் சார்ந்தது அது.*

*இந்துமதசிந்தனை என்பது பிராமணிய சிந்தனை என்றும் அது கருத்துமுதல்வாதத் தன்மை கொண்டது என்றும் அதற்கு எதிரான பொருள்முதல்வாதமே விடுதலை சக்தி என்றும் ஈவேரா எண்ணினார். இந்துமதம் என்பது ஒரு சுரண்டல் அமைப்பை கட்டிக்காக்க உருவாக்கப்பட்ட நம்பிக்கைகள் மற்றும் ஆசாரங்களின் தொகை. அதை முழுமையாக நிராகரித்தாகவேண்டும் என்றார். மனிதன் தன்னுடைய நடத்தைக்கு தானே பொறுப்பேற்றுக்கொள்ளவேண்டும் என்றும் அதுவே அறம் என்றும் பலசொற்களில் வலியுறுத்திய இவெரா ஐரோப்பிய சுதந்திர இச்சை கோட்பாட்டாளர்களின் பலவரிகளை தானும் சொல்லியிருக்கிறார்*

*ஈவேராவின் கொள்கை நாத்திம் என வரையறை செய்யப்படத்தக்கது . அடிப்படையில் அது எதிர்மறையானது. விமர்சனத்தன்மையே அதன் உயிராற்றல். பொருள்முதல்வாதக் கோட்பாடுகளையோ, பகுத்தறிவுவாதத்தின் தத்துவதளங்களையோ ஈவெரா முன்வைக்கவில்லை. ஆகவே ஈவேராவை இந்திய நாத்திகத்தை முன்வைத்தவராகவே கொள்ளலாம்.தமிழக நாத்திக இயக்கம் சுயமரியாதை இயக்கமாகவும் [1925] பின்னர் திராவிடர்கழகமாகவும் [1944] மாறி வளர்ந்து திராவிட முன்னேற்ற கழகமாக அரசியல் அமைப்பாக ஆனது.*

*இதேபோல இந்தியவேர் கொண்ட நாத்திகம் கேரளத்திலும் இருந்தது. நாராயணகுருவின் சீடர்களில் பலரிடம் அந்த நோக்கு இருந்தது. குமாரன் ஆசானையே இந்திய வழிவந்த நாத்திகர் எனலாம் என்று எனக்குப் படுகிறது. சி.வி.குஞ்ஞுராமனையும் இந்திய வழிவந்த நாத்திகர் என்பேன். ஆனால் மிகச்சிறந்த உதாரணம் 'சகோதரன்' அய்யப்பன். உறுதியான நாத்திகரான அவர் நாராயணகுருவால் அவரது முதற்சீடராகவும் கருதப்பட்டார் என்பதில் ஆச்சரியமேதும் இல்லை.*

*நாராயணகுருவின் சிந்தனைகளில் இருந்த ஆன்மீக அம்சத்தை உறுதியாக மறுத்து தொடர்ந்து குருவின் எதிர்நிலையாக விவாதித்து வந்தார் அய்யப்பன். இந்திய மரபில் உள்ள நாத்திக தரிசனக்கூறுகளை விரிவாக முன்வைத்து வந்தார். சாதிமறுப்பு இறைமறுப்பு மரபுஎதிர்ப்பு ஆகியவற்றை கேரளத்தில் இயக்கமாக முன்னெடுத்த முதல் சிந்தனையாளர் என அவரை சொல்லலாம்.*

*நாராயணகுருகுலத்தில் கடுமையான சைவப்பழக்கமே நிலவியது. சைவ உணவுக்காக வாதிட்டவர் நாராயணகுரு. ஆனால் சகோதரன் அய்யப்பனுக்காக அசைவம் சமைக்க பக்கத்து ஓட்டலில் சொல்லி ஏற்பாடுசெய்வாராம். 'மீனில்லாமல் அவன் எப்படி*

*சாப்பிடுவான்?' என்றார் என நடராஜகுரு குறிப்பிடுகிறார். ஆனால் வாழ்நாளின் கடைசியில் தன் பேரியக்கங்களை அய்யப்பன் தன் வாரிசாக அமர்ந்து நடத்தவேண்டுமென குரு ஆசைப்பட்டார். அதை நாம் பி.கெ.பாலகிருஷ்ணனின் நாராயணகுரு என்ற நூலில் காணலாம். திருவிக எப்படி ஈவெராவை ஏற்றுக்கொண்டாரோ அதே நோக்குதான். இது இந்தியாமுழுக்க நடந்துள்ளது*

*இந்த இந்தியநாத்திகப் போக்குக்கு இணையாக, இதற்கு ஊக்கமளிப்பதாக, இதனுடன் முரண்பட்டு விவாதிப்பதாக இருந்தது ஐரோப்பிய பாதிப்புள்ள நாத்திகம். தமிழகத்தின் அதற்கு பல முன்னோடிகள். வெ.சாமிநாதசர்மா, ப.ராமசாமி என. ஆனால் முதற்பெருங்குரல் என்று சி.என்.அண்ணாத்துரையையே சொல்லவேண்டும். நெடுங்காலம் ஈவேராவுடன் முரண்பட்டு விவாதித்துக்கொண்டு இணைந்து செயல்பட்டார் அண்ணாத்துரை. ஈவேராவின் இயக்கத்தை ஐரோப்பியநாத்திகவாதக் கொள்கையைக் கொண்டதாக மாற்றியவர் அவரே. ஐரோப்பியச் சொல்லான ரேஷனாலிட்டி என்பதை பகுத்தறிவு என்று தமிழாக்கம் செய்ததும் அவரே. இன்றும் தமிழ் அறிவுலகின் மிகப்பிரபலமான சொல் அதுதான்.*

*அண்ணாத்துரை ஈவெராவின் முழுமையான நாத்திகத்தில் இருந்து விலகி 'ஒன்றேகுலம் ஒருவனே தேவன்' என்ற திருமூலரின் வரியை நோக்கி வந்ததை நாம் வரலாற்றின் கண்டோம். கிட்டத்தட்ட சகோதரன் அய்யப்பனின் நிலைபாட்டில் இருந்து நாராயணகுருவின் நிலைப்பாட்டை நோக்கி வருவதைப்போல! ஆச்சரியம்தான் இல்லையா?*

*ஈவேராவிடமிருந்து விலகி அண்ணாத்துரை தனி இயக்கம் கண்டார். அதற்கான தனிப்பட்ட காரணங்கள் பல இருந்தாலும் அடிப்படைக்காரணம் ஜனநாயகம் என்று சொல்லலாம். அண்ணாத்துரை ஐரோப்பியப் பகுத்தறிவு இயக்கத்தைச் சேர்ந்தவர். அதை ஜனநாயக விழுமியங்களில் இருந்து பிரிக்கவே முடியாது. ஆனால் ஈவெரா பழைய மரபைச்சேர்ந்தவர். அதில் ஜனநாயகத்துக்கு பெரிய இடமில்லை. ஈவெராவின் இயக்கம் வெகுஜன அதரவு கொண்டதாக ஆகமுடியாமைக்கும் அதுவே காரணம். தமிழ்நாட்டு நாத்திக சிந்தனைகள் வெகுஜனத்தன்மை பெற முழுமுதல் காரணம் அண்ணாத்துரைதான்.*

*கேரளத்தில் ஐரோப்பிய பகுத்தறிவுவாதம் எம்.சி.ஜோசப் [1887 – 1981] என்ற நாத்திகரால் தொடங்கப்பட்டது. சகோதரன் அய்யப்பனின் நெருக்கமான சகாவாக இருந்தவர். சகோதரன் அய்யப்பன் நடத்திய யுக்திவாதி என்ற இதழை அவருக்குப்பின் நடத்தினார்.*

*கேரள யுக்திவாதி சங்கம் என்ற அமைப்பை நிறுவி அதன் தலைவராக இருந்தார். பதினைந்து நூல்களை எழுதியிருக்கிறார். அவருக்குப்பின் அவ்வமைப்பை பவனன் நடத்தினார்.*

*இலங்கையைச் சேர்ந்த ஆபிரகாம் கோவூரின் [1898 – 1978] பாதிப்பினால் கேரளத்தில் பகுத்தறிவுவாதம் மேலும் வலுப்பெற்றது. இலங்கையில் வாழ்ந்து அதிகமும் ஆங்கிலத்தில் எழுதினாலும் கோவூர் மலையாளி என்பதனால் அவரது பாதிப்பு அதிகமும் கேரளத்தில்தான். அவரது மாணவர் என்றே கூறத்தக்க ஜோசஃப் இடமறுகு [1934 – 2006] கேரளத்தில் ஐரோப்பியப் பகுத்தறிவுவாதத்தின் குரலாக அரைநூற்றாண்டுக்காலம் ஒலித்துவந்தார். இந்திய யுக்திவாதி சங்கம் என்ற அமைப்பையும் தேராளி என்ற இதழையும் அவர் நடத்தினார்.*

*மேலே சொன்னதுபோல இவ்விரு போக்குகள் நடுவே ஒரு ஒரு முரணியக்கவிளைவு [சமன்வயம்] ஏதாவது நிகழ்ந்திருக்கிறதா? பெரிதாக ஏதும் சொல்லமுடியவில்லை. அது அவ்வளவு எளிதும் அல்ல. ஆனாலும் எம்.கோவிந்தனை [1919-1989] நான் இந்திய-ஐரோப்பிய பகுத்தறிவுவாதங்களின் ஆக்கபூர்வமான உரையாடலின் பிறந்த குழந்தை என்று சொல்வேன்*

***நாத்திகவாதத்தின் கொடை என்ன?***

*ஐம்பதாண்டுகளுக்கு முன் நாகர்கோயிலில் நடந்ததாகச் சொல்வார்கள் இந்நிகழ்ச்சியை. அன்று ஈவேராவின் நாத்திக இயக்கத்தின் பிரச்சாரகராக விளங்கிய சி.பி.இளங்கோ என்ற பேச்சாளர் நாகராஜா கோயில் முன்னால் நின்று கடவுளை கடுமையாக தாக்கிப்பேசிக்கொண்டிருந்தபோது உள்ளூர் பெரியவர் ஒருவர் எழுந்து 'உன் அப்பாவுக்கு நீ பிறந்தாய் என்பதை உன் அம்மா சொல்லித்தானே நீ ஏற்றுக்கொண்டாய்? பெரியவர்கள் சொல்வது பிரமாணம்தான். ஆகவே பெரியவர்கள் கடவுள் உண்டு என்று சொன்னதை ஏற்றுத்தான் ஆகவேண்டும்' என்றார்*

*இளங்கோ 'என் அம்மாவின் கற்பு காரணமாக நான் பிறக்கவில்லை. அவள் பாலுறவுகொண்டாள் என்பதனால்தான் பிறந்தேன். அதற்கு ஆதாரம் நானேதான். நாந்தான் எனக்கு ஆதாரம்' என்று சொன்னாராம். 'அடப்பாவி சொந்த அப்பனையே*

மறுக்கிறாயா?' என்று பெரியவர் குற்றம் சாட்டியபோது 'மளிகைகக்டையையே மறுத்துவிட்டேன். அஞ்சறைப்பெட்டியைப்பற்றி என்ன பேச்சு?' என்றாராம் இளங்கோ.

அந்த வாதம் எப்படியானாலும் அந்த சுயபிரக்ஞையே நாத்திக இயக்கம் சிந்தனைத்தளத்தில் அளித்த கொடை எனலாம். நாத்திக இயக்கம் முதலில் கடவுளை மறுக்கிறது. மறுப்பதற்கான கருவிதான் பகுத்தறிவு. பகுத்தறிவு என்பது புறவயமான தர்க்கங்களால் ஆனது. அந்த புறவயத்தன்மை என்பது அடிப்படையில் புலன்சார்ந்தது. புலன்கள் அதை அறிபவனைச் சார்ந்தவை. ஆகவே நான் என்பதே பகுத்தறிவின் மையம். என் புலன்களால் அவற்றில் இருந்து நான் உருவாக்கிக்கொண்ட தர்க்கத்தால் நான் இந்த பிரபஞ்சத்தை அறிய முடியும். அப்படி அறிவதே என் பிரபஞ்சம் என்பதே பகுத்தறிவு என்பது.

தமிழகத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பொதுவான சிந்தனைத்தளம் எப்படி இருந்திருக்கும்? சாதி மற்றும் பொருளாதாரத்தின் மேல் படிநிலைகளில் இருந்த மக்களிடையே கல்வியும் பாரம்பரியமும் இருந்தன. அதன் விளைவாக சிந்தனையும் இலக்கியமும் கலைகளும் அவர்களிடம் இருந்தன. அங்கே தனிமனிதன் என்ற கருத்து இருந்தது. அது இந்தியஞானமரபின் சிறப்பான கருத்துருவகமான ஆத்மன் என்ற வடிவில் இருந்தது. ஆத்மனின் முழுமை அல்லது மீட்புக்கான யோகமும் தியானமும் பயிலப்பட்டன. அதைப்பற்றிய தத்துவங்களும் இலக்கியங்களும் இருந்தன. இவற்றைப்பற்றிப் பேசும் சைவசித்தாந்தமும் ராமானுஜரை குருவாகக் கொண்ட வைணவ விசிஷ்டாத்வைத சித்தாந்தமும் தமிழகத்தில் செல்வாக்குடன் இருந்தன.

அவற்றின் கீழ்ப்படிகளில் உள்ள மக்களைப்பொறுத்தவரை இரு நிலைகளில் இருந்தார்கள். மிகத்தாழ்ந்த படிகளில் மக்கள் பழங்குடிமனநிலையில் அல்லது அரைப்பழங்குடி மனநிலைகளில் வாழ்ந்தார்கள். குலதெய்வ வழிபாடு அல்லது சிறுதெய்வ வழிபாடு மட்டுமே இருந்தது. அவர்களில் நவீனசிந்தனைகளால் வகுக்கப்படும் தனிமனிதன் என்ற உருவகம் உருவாகியிருக்க வாய்ப்பில்லை.

அதற்குமேல் உள்ள படிநிலைகளில் இருந்தவர்கள் சைவம் வைணவம் ஆகிய பெருமதத்தாலும் சாதியாசாரங்களாலும் தொகுக்கப்பட்டு உறுதியான சமூகக் கட்டமைப்புடன் இருந்தார்கள். தன் தனித்தன்மையை முழுக்கமுழுக்க குடும்பம்,சாதி,மதம் ஆகிய அமைப்புகளுக்கு விட்டுக்கொடுத்து அதன் பகுதியாக வாழ்ந்தனர். அதன் பாதுகாப்பையும் வசதிகளையும் அனுபவித்தனர். நான் முதலில்

*சுட்டிக்காட்டியது இத்தகைய ஒரு குடும்பத்தை. அதிலிருந்த ஒருவருக்கு சுயம் என்பதை இங்கே நாத்திக இயக்கம் உருவாக்கியளித்தது.*

*அந்த அமைப்புக்குள் வாழ்ந்த ஒரு இளைஞனுக்கு அது நான் என்ற உணர்ச்சியை கொடுக்கிறது. பழைய சிந்தனைகளின் சொற்றொடரில் சொல்லப்போனால் அவன் சுயத்தை கண்டடைகிறான். புதிய பின்நவீனத்துவ சிந்தனைகளின் சொற்றொடரில் சொல்லப்போனால் நான் என்ற கருத்துக் கட்டுமானத்தை மொழிவழியாக உருவாக்கி அவனுக்கு அளித்தது பகுத்தறிவு இயக்கம்.*

*அந்த நானை அது கீழ்க்கண்டவாறு வரையறுத்தது. 'நான் என்பது என்னுடைய புலன்வழி அறிதல்களின் தொகை. புலன்வழி அறிதல்களின் ஒட்டுமொத்தத்தால் ஆன தர்க்கம்தான் உலகை அறிவதற்கான வழி. அந்த தர்க்கத்தை முன்வைத்து உலகை அறியும் பிரக்ஞைதான் நான். நான் அங்கீகரிக்கும் ஒன்றே என் சிந்தனையாக இருக்க முடியும். என்னுடைய சிந்தனைகளே நான்' சி.பி. இளங்கோ மேடையில் சொன்னது இதைத்தான்.*

*பகுத்தறிவு இயக்கத்தின் கொடை என்பது இதுவே. அது நிலப்பிரபுத்துவ சமூகத்தில் அதன் மன அமைப்புக்குள் கட்டுண்டு சுயமில்லாதிருந்த பல லட்சம் இளைஞர்களுக்கு அவர்களின் ஆளிமை என்ற தனித்துவத்தை உருவாக்கி அளித்தது. அதன் வழியாக ஜனநாயகப்பண்புகளை நோக்கி அவர்களை கொண்டு சென்றது. அவ்வகையில் தமிழகச் சிந்தனையில் திராவிட இயக்கத்தின் பங்களிப்பு குறிப்பாக ஈவெரா சி.என்.அண்ணாத்துரை ஆகியோரின் கொடை முக்கியமானதேடாகும்.*

## *7) கல்வாழை [நாத்திகம் - தமிழ்நாட்டிலும் கேரளத்திலும்] 3*

***நாத்திக இயக்கங்களின் எல்லை என்ன?***

*ஒரு நம்பூதிரி நாவிதரிடம் பந்தயம் கட்டினார். தலையில் மொட்டை அடிக்கும்போது ஒரு கீறலுக்கு பத்துபைசா கழித்துக்கொள்வார். மொட்டைபோட கூலி ஒரு ரூபாய். ஒவ்வொரு கீறலாக விழுந்துகொண்டிருந்தது. நம்பூதிரிக்கு உற்சாகம். ஒன்பது கீறல். பத்து கீறல். காசே கொடுக்கவேண்டாம் என்று நம்பூதிரி நினைத்தார். ஆனால் சட்டென்று தலையில் வலி. 'ஏன செய்கிறாய்?' என்றார். 'எல்லா கீறல்களையும் சேர்த்து ஒரே கீறலாக ஆக்குகிறேன்' என்றார் நாவிதர்.*

*1988ல் எம் கோவிந்தனை நான் இரண்டாம்முறையாக சந்தித்தபோது நோயுற்றிருந்தார். ஆனாலும் உற்சாகமாக பேசி தமிழகத்தில் திராவிட இயக்கத்தின் நிலைமையைப் பற்றி அறிவதிலேயே அதிக ஆர்வம் காட்டினார். எம்.என்.ராய் தமிழக திராவிட இயக்கத்தை இந்தியாவின் மிக அறிவார்ந்த இயக்கங்களில் ஒன்றாக எண்ணினார். ஈவெரா மீது அவருக்கு பெரும் மதிப்பு இருந்தது. அந்த மதிப்பு எம்.கோவிந்தனுக்கும் இருந்தது.அவருக்கு ஈவெராவை நேரடியாகவே தெரிந்திருந்தது*

*எனக்கு திராவிட இயக்கங்களைப்பற்றி மதிப்பு இல்லை என்று சொன்னேன். அவருக்கு அது கொஞ்சம் ஆச்சரியமாக இருந்தது. என்னுடன் இன்னொரு தமிழ்நண்பரும் இருந்தார். அவருக்கும் மதிப்பில்லை என்றதும் கோவிந்தன் பெருமூச்சுவிட்டார். என்ன காரணம் என்று கேட்டார். 'அது பப்பாளிமரம்போல. வேர் தடி தண்டு இலை காய் பூ எல்லாமே உள்ளீடற்றவை' என்றேன். சிரித்தார்*

*அதன்பின் 'ஈவெராவின் திராவிட இயக்கம் அப்படி அல்ல. அது ஒரு நல்ல தொடக்கம். ஆயிரம் வருட பக்தி இயக்கம் இருந்த மண்ணில் அப்படி ஒரு உக்கிரமான தொடக்கம் நடந்தது சிறந்த விஷயம்தான். ஆனால் அதிலிருந்து சிந்தனைகளும் இலக்கியமும் பெருகி மேலெழவில்லை. அது உடனடியாக பாப்புலிஸ்ட் இயக்கமாக ஆகியது. கருத்துக்களை பாப்புலிசம் வந்து தீண்டும்போது அவை உறைந்து வெறும் கோஷங்களாக*

ஆகிவிடுகின்றன. அதன்பின் அவற்றை விவாதிக்க முடியாது. அவை சிந்தனைகளை தூண்டாது.' என்றார்

திராவிட இயக்கத்தை அரசியலாக ஆக்கிய அண்ணாத்துரையை குறை சொல்கிறீர்களா என்றேன்.'வரலாற்றின் இயக்கத்தை அறிந்தவன் அதை எதற்காகவும் குறைசொல்ல மாட்டான், ஆராயத்தான் முயல்வான்' என்றார் கோவிந்தன். திராவிட இயக்கம் ஒருகட்டத்தில் பிற்படுத்தப்பட்டோர் அரசியலை நோக்கிச் செல்லவேண்டியிருந்தது. அது இயல்பாக உருவான வரலாற்றுத்தேவை. அந்த அரசியலுக்கு மக்கள் ஆதரவு தேவையாக இருந்தது. ஆகவே அது தன்னை பரப்புவாதம் நோக்கி கொண்டுசென்றது என்றார்.

என் ஒட்டுமொத்த விமர்சனத்தை பற்றிச் சொல்லும்போது 'பண்டு நம்பூதிரிதியின் தலையில் நாவிதர் ஒரேகீறலை உருவாக்கியதுபோலத்தான் நாமும் வரலாற்றை புரிந்துகொள்கிறோம். ஒரேவிடை வரவேண்டியதில்லை. பலவிடைகள் இருக்கட்டும்' என்றார். நான் ஒரேவரியை தவிர்த்துக்கொண்டு சிக்கல்களையும் சாதகபாதம அம்சங்களையும் கருத்தில்கொண்டு ஆராய ஆரம்பித்தேன்.

தமிழகத்தில் நான் காண்பது பெரும்பாலும் திராவிட இயக்க துதிகளையே. சென்ற அரைநூற்றாண்டில் தொடர்ந்து திராவிட இயக்கமே பதவியில் இருந்தமையால் தமிழக பாடப்புத்தகங்களில் அது திட்டமிட்டு ஊடுருவியிருக்கிறது. அரை உண்மைகளையும் பொய்களையும் தொடர்ந்து முன்வைத்து இரு தலைமுறைகளின் பொதுப்புத்தியின் அவையே வரலாறாக நிறுவிவிட்டிருக்கிறது. அதற்கு எதிரான குரல்களுக்கு தமிழகத்தில் மேடை இல்லை. அவற்றால் பொதுத்தளத்தில் எதையும் நிறுவ முடியவில்லை

உதாரணமாக ஈவெராவின் வைக்கம்போராட்டம் , மு.கருணாநிதியின் கல்லக்குடி போராட்டம் ஆகியவற்றைப்பற்றி இங்குள்ள மிகையான சித்தரிப்புகள். சி.என்.அண்ணாத்துரை தமிழகத்துக்கு தமிழ்நாடு என்று பெயர் மாற்றம் செய்தது போன்றவற்றை மாபெரும் சாதனைகளாக மிகைப்படுத்துவது. அதேசமயம் ராஜாஜி, காமராஜ் போன்றவர்களின் தியாகவரலாறுகளையும் அவர்களின் மிகபெரிய சாதனைகளையும் முழுமையாக மட்டம்தட்டுவது.

திராவிட இயக்கத்தின் பொய் பற்றிப் பேசும்போது நான் எம்.கோவிந்தனிடம் ஈவெராவின் வைக்கம்போராட்டப் பங்களிப்பு பற்றி தமிழகத்தில் உருவாக்கப்பட்ட பொய்யான வரலாறு பற்றி கேட்டேன். 'அது ஓர் அரசியல் உத்தி. தமிழகத்தில் அவர்கள்

*உருவாக்க என்ணிய பிற்படுத்தப்பட்டோர் எழுச்சிக்காக அந்த வரலாறு தேவைப்பட்டது. அதன் விளைவையே நாம் பார்க்க வேண்டும்' என்றார். 'அதே மாதிரி பொய்களை காந்தியவாதிகள் சொல்லியிருந்தால் நீங்கள் ஏற்றுக்கொள்வீர்களா' என்றேன். 'இல்லை, காந்தியத்தின் அற அடிப்படை வேறு' என்றார்.*

*திராவிட இயக்கத்தை வைத்து நான் நாத்திக இயக்கத்தின் சிக்கல்களை இவ்வாறு வகுத்துக்கொள்கிறேன்.*

*என் நோக்கில் நாத்திக இயக்கங்களின் மிகப்பெரிய போதாமையே அவை எதிர்மறை இயக்கங்கள் என்பதே. மறுப்பின் மொழியில் மட்டுமே அவற்றால் பேசமுடிகிறது. மரபின் பிடியில் இருந்து மீறி எழத்தேவையான விசையை அவை அளிக்கின்றன. எழுந்தபின் நிற்க நிலத்தை அளிப்பதில்லை. எஞ்சிய நாளெல்லாம் அந்த எதிர்ப்பையே தன் நிலமாகக் கொண்டு நிற்கவேண்டியிருக்கிறது. அது பெரும்பாலானவர்களால் முடிவதில்லை.*

*ஏனென்றால் வாழ்க்கை தத்துவவிளக்கங்கள் மீதே நிற்க முடியும். அறம்,ஒழுக்கம், அன்பு, பாசம், தியாகம் ஆகிய அனைத்துக்குமே தத்துவார்த்தமாக விளக்கம் தேவைப்படுகிறது மனிதனுக்கு. சாதாரணமாக மனிதர்களிடம் இருக்கும் விளக்கங்கள் மதத்தால் அளிக்கப்பட்டவை. மதத்தை நிராகரிக்கும்போது அவர்களிடம் இருக்கும் விழுமியங்களும் கேள்விக்குள்ளாக்குகின்றன. அவற்றுக்கு பகுத்தறிவுசார்ந்த விளக்கங்கள் அளிக்கப்படவேண்டும். எளிய நாத்திகவாதம் அவற்ற அளிப்பதில்லை*

*ஈவெரா அவர்கள் எந்த மதவாதிக்கும் நிகராக ஒழுக்கம் குறித்து பேசியவர். மனிதன் ஒழுக்கமாக இருந்தால்போதும், கடவுள் தேவையில்லை என்ற வரியை அவரது உரைகளில் அடிக்கடி காணலாம். அந்த ஒழுக்கத்துக்கான அடிப்படைகள் என்ன என்ற வினாவை அவர் சந்தித்ததில்லை. ஒரு பகுத்தறிவு அறம் நோக்கிச் செல்லும் விவாதங்களையே நிகழ்த்தவில்லை.*

*நாத்திக இயக்கங்கள் இருமையை தங்கள் அறிதல்முறையாக கொண்டிருக்கின்றன. எல்லாவற்றையுமே அவை கறுப்புவெள்ளையாக ஆக்கிக்கொள்கின்றன. இந்த கறுப்புவெள்ளையை மதத்தில் இருந்தே நாத்திகவாதமும் பெற்றுக்கொண்டது. மதத்தின் கறுப்பெல்லாம் இவர்களுக்கு வெள்ளை. நாத்திகவாதி ஒரு எதிர்மதவாதி. அதே பற்று மனநிலை. அதே வெறி*

நான் எடுத்த பேட்டியில் ஈவெராவைப்பற்றி மறைந்த கன்னட தலித்-பண்டாயா சிந்தனையாளரான டி.ஆர்.நாகராஜ் சொன்னார். 'அவருக்கு கடவுள் மீது இருந்த 'அப்ஸெஸன்' அவரது மற்ற சிந்தனைகளை வளராமல் செய்துவிட்டது. அவர் அனைத்தையும் அங்கே கொண்டுசென்று சேர்த்தார்' டி.ஆர்.நாகராஜ் பெரியாரியராக கர்நாடகத்தில் செயலாற்றியவர் என்பதை நினைவில்கொள்ளவேண்டும். இந்த பற்று எதிர்மறையானது. வேகத்தில் ஒரு பெந்தெகொஸ்து பக்தனுக்கு நிகரானதும்கூட.

இந்த வேகம் காரணமாக அவர் அனைத்தையுமே குறுக்கிப்பார்க்கக்கூடியவராக ஆனார். கழுவியநீரில் பிள்ளையையும் அள்ளிக்கொட்டக்கூடியவராக ஆனார். நாத்திகம் ஒரு மனவேகமாக ஆனபோது ஒட்டுமொத்த தமிழ்ப்பண்பாட்டை, தமிழ் இலக்கியத்தை, தமிழ் அறிவியலை முழுமையாக நிராகரிக்கும் இடத்துக்குச் சென்று சேர்ந்தார். அவ்வாறு எந்த சமூகமும் தன் கடந்தகாலத்தை முழுமையாக நிராகரிக்காது. அது சாத்தியமும் இல்லை. இந்த வேகம் கேரளத்திலும் நாத்திகர்களிடம் உள்ளது.

இந்த பற்றுறுதி காரணமாக முழுமையான முடிவுகளுக்கு ஏற்கனவே வந்துவிட்டவர்களாக நாத்திகர்கள் உருவாகிறார்கள். அவர்களுக்கு அதன்பின்னர் அறிவியக்கமே இல்லை. தமிழக நாத்திக இயக்கம் ஏன் ஒரு பெரிய அறிவியக்கமாக உருவாகவில்லை என்ற கோவிந்தனின் கேள்விக்கு இதுவே பதில். அவர்களிடம் எளிமையான எதிர்வாதங்கள் இருந்தன. அவை போதும் என்ற மனநிலையும் இருந்தது.

தமிழில் நாத்திகவாதம் உருவாகி முக்கால்நூற்றாண்டு தாண்டியபின்னரும்கூட அவர்களின் தரப்புக்குரிய மூலநூல்கள் எவையுமே மொழியாக்கம் செய்யப்படவில்லை. இன்றுகூட டார்வினின் உயிர்களின் தோற்றம் தமிழில் கிடைப்பதில்லை. ஐரோப்பிய நாத்திகவாதத்தின் மூலநூல்கள் மொழியாக்கம்செய்யப்படவில்லை. ஏன் எம்.என்.ராய் குறித்து ஓர் அறிமுகம்கூட அங்கே நிகழவில்லை.

இந்நிலையில் தமிழகத்தின் மத சிந்தனைகளின் சாரமாக உள்ள சைவசித்தாந்தம் பற்றியோ விசிஷ்டாத்வைதம் பற்றியோ ஒரு காத்திரமான ஆராய்ச்சிநூலை அவர்களிடம் எதிர்பார்ப்பதில் பொருளே இல்லை. பாமரமக்களிடம் செல்லுபடியாகும் பேச்சுக்களை மட்டுமே அவர்களிடம் எதிர்பார்க்கமுடிகிறது. ஆகவே உண்மையில் தமிழகத்தில் நாத்திகவாதத்தின் நூற்றாண்டு நெருங்கும் இந்த காலகட்டத்தில்கூட தமிழக மதசிந்தனைகள் தங்களுக்கான மறுதரப்பை அறியாமல்தான் செயல்பட்டுக்கொண்டிருக்கின்றன.

*நாத்திகவாதத்தால் ஒரு சமூகத்தின் பண்பாட்டையும் வாழ்க்கைமுறையும் புரிந்துகொள்ள முடிவதில்லை. அது சிந்தனையளவில் ஐரோப்பியத்தனத்தையே பேணுகிறது. தமிழகத்திலும் கேரளத்திலும் உள்ள பகுத்தறிவுவாதிகளிடம் இருக்கும் ஐரோப்பியவழிபாட்டுத்தன்மை ஆச்சரியமளிக்கக்கூடியது. அறிவியல் மெய்யியல் தர்க்கம் கலை அனைத்துக்குமே அவர்கள் ஐரோப்பாவையே ஆதாரமாகக் கொள்கிறார்கள். ஒரு பத்தொன்பதாம் நூற்றாண்டு ஐரோப்பியன் இந்தியாவைப்பற்றி என்ன நினைப்பானோ அதையே நாம் ஈவெராவிடமும் கோவூரிடமும் காண்கிறோம்.*

*ஒருசமூகத்தின் ஒட்டுமொத்த கருத்தியல் கட்டுமானமும் வெறும் சுரண்டலுக்காக உருவாக்கப்பட்ட ஒன்றாக இருக்கமுடியாதென்பதை இன்று எந்த சிந்தனையாளரும் ஏற்றுக்கொள்வார்கள். மரபு என்பது பெரும் குறியீட்டு வெளி. அதை முழுக்க உதறிவிட்டால் சிந்தனைகளே சாத்தியமில்லை. நகலெடுப்பு மட்டுமே சாத்தியம். மரபை முழுமையாக உதறும் ஈவெராவின் தீவிரத்தை அவரது முக்கியமான மாணாக்கரான அண்ணாத்துரையாலேயே ஏற்றுக்கொள்ள முடியவில்லை.*

*சமூக உருவாக்கம், பரிணாமம் பற்றிய விரிவான வரலாற்றுச்சித்திரத்தை உருவாக்கிக்கொள்ள நாத்திக சிந்தனைகள் போதுமானவை அல்ல. ஐரோப்பாவில் நாத்திகசிந்தனைகள் மிக இலகுவாக அடுத்தடுத்த கட்டங்களுக்குச் சென்றன ஐரோப்பிய நாத்திகவாதத்தின் தத்துவ சாரமான பொருள்முதல்வாதம் கருத்துமுதல்வாதத்துடன் நிகழ்த்திக்கொண்ட உரையாடலின் விளைவே மார்க்ஸியம். அதன் முரணியக்க பொருள்முதல்வாதம் தனக்குரிய விரிவான சமூகசித்திரத்தையும் மெய்யியலையும் உருவாக்கிக்கொண்டது.*

*கேரளத்தில் நாத்திகவாதம் இயல்பாக மார்க்ஸியத்துக்கு வழிவிட்டது. மார்க்ஸியமே இன்று கேரளத்தின் உண்மையான நாத்திக மரபாக உள்ளது. ஐரோப்பிய பாணி நாத்திகம் இடமறுகுவின் குடும்பத்தைச் சார்ந்து இயங்கும் ஒரு குறுங்குழுவாக தேங்கிவிட்டிருக்கிறது. தமிழ்நாட்டில் ஐம்பதுகளில் மார்க்ஸிய சிந்தனைகள் தீவிரமடைந்தபோதிலும்கூட திராவிட இயக்கத்தின் வீச்சு அவற்றை நிலைக்கச்செய்துவிட்டது. இருந்தாலும் தத்துவார்த்த தளத்தில் தமிழகத்தில் நாத்திகம் என்பது மார்க்ஸியர்களாலேயே தொடர்ச்சியாக முன்வைக்கப்படுகிறது*

*மார்க்ஸியம் முன்வைக்கும் சமூகப்பரிணாமச் சித்திரம், அதன் வரலாற்றுவாதம் ஆகியவற்றைப்பற்றி விரிவாகவே பேசலாம். சிந்தனைத்தளத்தில் தமிழகத்தில்*

மார்க்ஸியமே இன்று முக்கியமான பொருள்முதல்வாதத் தரப்பு. பொருட்படுத்தவேண்டிய நாத்திக தத்துவமும் அதுவே. மார்க்ஸிய இலட்சியவாதத்துக்கு எதிரான நடைமுறைவாதச் சிந்தனைகள் அதிகமாக தமிழில் வேரூன்றவில்லை. தொண்ணூறுகளில் வரலாற்றுவாதத்தை நிராகரித்து முன்னகரும் பின்நவீனத்துவ சிந்தனைகளும் இங்கே உருவாகியிருக்கின்றன.

இவற்றுடன் தொடர்பின்றி, தன் வரலாற்றுக்கடமையை நிறைவேற்றிவிட்டு, பழங்கால மடங்களைப்போல ஏதோ ஒருகாலகட்டத்தின் தத்துவத்தை செங்ககல்லாகவும் சுவர்களாகவும் மாற்றிக்கொண்டு தமிழகத்தில் நாத்திகவாதம் நின்றிருக்கிறது. சீமைக்கல்வாழை என்று ஒரு செடி உண்டு. சப்பையாக அடுக்கடுக்கான தண்டுகளுடன் சேம்பிலை போன்ற பெரிய இலைகளுடன் இருக்கும். ஏதோ தென்னமேரிக்க நாட்டில் இருந்து வந்தது. அலங்காரத்துக்காக வளர்ப்பார்கள். இங்குள்ள மண்ணில் அது ஆண் பெண் என பிரிவதில்லை. ஆகவே இனப்பெருக்கம் செய்வதில்லை. பூக்காது குலைதள்ளாது என்றும் பசுமையாக இளமையாக நின்றிருக்கும்.

இங்கே ஐரோப்பிய நாத்திகவாதமும் அவ்வாறுதான். அதன் இயக்கத்துக்கு தேவையான மறுதரப்பு அதனுள் உருவாகவில்லை. ஆகவே அது அப்படியே ஒரு நம் சிந்தனையின் மூலையில் நின்றுகொண்டிருக்கிறது.

## *8) ஈவேரா: கடிதம்*

*அன்புள்ள ஜெ*

*கீழ்க்கண்ட கட்டுரையை உங்கள் கருத்துக்குக் கொண்டு வருகிறேன். பெரியார் யாருக்குப் பெரியார்?. இதில் பெரியார் ஈவேரா தலித்துக்களுக்காக போராடவில்லை, பிற்படுத்தப்பட்டோருக்காகவே போராடினார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. உங்கள் எண்ணம் என்ன?*

*அனந்தநாராயணன்*
*சென்னை*

*அன்புள்ள அனந்தநாராயணன்,*

*அந்தக்கட்டுரையின் மையக்கருத்துக்கள் பெரும்பாலும் மார்க்ஸிய ஆய்வாளர் கோ.கேசவனால் முன்வைக்கப்பட்டவை. பின்னர் பல தலித் ஆய்வாளர்களால் விரிவாக கூறப்பட்டவை. இந்த இணையதளத்திலேயே சிலகட்டுரைகள் உள்ளன.*

*ஈவேராவின் இயக்கம் தமிழில் ஏற்கனவே வலுவாக உருவாகிவந்திருந்த தலித்தியக்கத்தை மறைக்கும்தன்மை கொண்டிருந்தது. பிற்படுத்தப்பட்டோரின் குரலை முன்னெடுத்தது. விளைவாக தலித் விடுதலையை பிற்படுத்தப்பட்டோரின் கருணைக்கு விட்டது. இன்றும் தலித்துக்களுக்கு எதிரான கொடுமைகள் திராவிட இயக்கம் மேலோங்கிய பிற்படுத்தப்பட்டோர் கிராமங்களிலேயே நிகழ்கின்றன. தலித்துக்களின் விடுதலை இன்று வேறுவழியில்லாமல் அனைத்து அதிகாரங்களையும் கைப்பற்றி வைத்திருக்கும் பிற்படுத்தப்பட்டோருக்கு எதிரானதாக ஆகிவிட்டிருக்கிறது.*

*ஆனால் ஈவேரா அவர்கள் பிற்படுத்தப்பட்ட சாதியினரின் குரல் மட்டுமே என நான் கூறமாட்டேன். அவரது இலக்கு அது மட்டும் அல்ல என்றே நினைக்கிறேன்.அவர் ஒரு சமூக சீர்திருத்தவாதி. இந்து சமூகத்தில் ஓங்கியிருந்த சாதிய நோக்குக்கு எதிரான எழுச்சியின் பெருங்குரல். அவரது பணி இந்து சமூகத்தை சமத்துவம் என்ற கருதுகோளை நோக்கி தள்ளியது என்றே எனக்கு படுகிறது*

இந்துமதக்கட்டுமானத்திற்குள்ளேயே என்றும் இருந்த நாத்திகவாதத்தின் குரல் ஈவேரா . ஆகவே அவர் மதச்சீர்திருத்தவாதியும்கூட.பக்திமரபால் ஒற்றைப்படையாக்கப்பட்ட இந்துமதநோக்குகள் இன்று தத்துவார்த்தமான தேடல்களை நோக்கிச் செல்ல அவர் ஒரு முக்கியமான காரணம்.

தமிழ்ச்சிந்தனையில் அவரது பங்களிப்பு முக்கியமானது. பொதுவாக எந்தவகையான கலகமும் ஓர் அசைவை உருவாக்கும். முன்னகர்வை சாத்தியமாக்கும்.ஆரம்பகாலத்தில் அவர்மேல் எனக்கிருந்த எதிர்மறை நோக்கு இன்றில்லை. அவரை ஓர் ஆக்கசக்தியாகவே எண்ணுகிறேன்

ஆகவே வெங்கடேசனின் இக்கட்டுரையும் சரி, அவரது நூலும் சரி, வரலாற்று நோக்கைவிட பூசல்நோக்கை மட்டுமே முன்னிறுத்துகின்றன என்று படுகிறது. ஆகவே அதனுடன் எனக்கு உடன்பாடில்லை.

ஈவேரா அவர்களிடம் இன்றும் நான் காணும் குறை தனிப்பட்ட வெறுப்புகளை அவர் சமூகக்காழ்ப்புகளாக முன்வைத்தார் என்பது. ஈவேராவின் நண்பரான கோவை அய்யாமுத்து அவர்களின் சுயசரிதையில் காணும் ஈவேராவின் சித்திரம் அவர் அவ்வாறு சட்டென்று தீவிரமுடிவுகளுக்குச் செல்லும் எளிய ஆளுமை என்றே காட்டுகிறது.

ஈவேரா அறிஞர் அல்ல. ஆய்வாளரும் அல்ல . அவரோ அவரை சூழ்ந்திருந்தவர்களோ சமகால சிந்தனைகளிலும் ஆய்வுமுறைகளிலும் அடிப்படைக்கல்வி கொண்டவர்கள் அல்ல. ஆகவே சமூக இயக்கத்தை எளிமையாக புரிந்துகொண்டு நிறைய ஒற்றைப்படை முடிவுகளுக்கு வந்து சேர்ந்தார். அவரது நோக்கு பலவகையான ஆழமான பிழைகளுக்கு இட்டுச் செல்வது

ஆகவே ஈவேரா அவர்களை புறவயமாக மதிப்பிடாமல் வழிபாட்டுணர்வுடன் அணுகி அவரை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு தமிழ்ச் சமூகத்தையோ இந்தியசிந்தனையையோ புரிந்துகொள்வது ஏற்றுக்கொள்ளத்தக்கதல்ல. காழ்ப்பும் ஒற்றைப்படைநோக்கும் இணைகையில் உருவாகும் எல்லா தவறுகளும் நிகழும்.

ஈவேரா முன்வைத்த பிராமணிய / புரோகித எதிர்ப்பு என்ற நோக்கு இந்து சிந்தனையில் ஆயிரக்கணக்கான வருடங்களாக இருந்து வந்த ஒன்றுதான். அதை அன்று உருவாகி வந்த பிற்படுத்தப்பட்டோர் அரசியலெழுச்சி தன் கருத்தியலாக கண்டுகொண்டது. விளைவாக

ஈவேரா ஓர் ஆதரவுத்தளத்தை அடைந்தார். அதை தன் இருக்கையாகக் கொண்டு அதிலமர்ந்து அவர் பேசினார்

திராவிட இயக்கம் என்பது ஈவேராவை முன்னிறுத்தி சி.என்.அண்ணாத்துரையும் அவரது தம்பிகளும் அரசியலதிகாரம் நோக்கிச் சென்ற பயணம். அந்த மக்கள்செல்வாக்கின் மைய விசை எம்.ஜி.ஆர். அதில் அவர்கள் அன்று மக்கள்செல்வாக்கு பெற்றிருந்த தமிழியக்கத்தை சேர்த்துக்கொண்டனர். அந்த கருத்துக்களுடன் ஈவேராவுக்கு பெரிய உடன்பாடு இருக்கவில்லை.

திராவிட இயக்கம் ஓர் பரப்புவாத இயக்கம். அதற்கு கொள்கைகள் என ஏதுமில்லை. தமிழ்ச்சூழலில் இருந்துவந்த பல்வேறு பண்பாட்டு இயக்கங்களை அது தனக்கான கோஷங்களாக உருமாற்றிக்கொண்டது. அதன் வழியாக அவற்றை மழுங்கடித்தது. ஆகவே அதை நான் ஏற்கவில்லை. ஆனால் வரலாற்றின் போக்கில் அதன் பங்களிப்பு என்றும் சில உள்ளன. அவற்றை அங்கீகரிக்கிறேன்.

ஈவேரா பிற்படுத்தப்பட்டோர் அரசியலின் நாயகர் அல்ல. அவரது அரசியல் என்பது கலகநோக்கும் தனிப்பட்ட கோபங்களும் கலந்த ஓர் எதிர்ப்பு மட்டுமே. அவருக்கு பிற்படுத்தப்பட்டோர் அரசியல் மூலம் உருவான ஆதரவுத்தளம் அடிப்படையாக இருந்தது. அதை அவர் நிராகரிக்கவில்லை. அதன்மேல் அமர்ந்தபடி அவர் தலித்துக்களிடம் பேசுவதையே நாம் சு.வெங்கடேசன் அளித்துள்ள சுட்டிகளிலும் காண்கிறோம். பிற்படுத்தப்பட்டோரின் சாதிவெறியை நியாயப்படுத்தும்கோணத்தில் அவர் பேசியமைக்கும் அவர்கள் மேல் மென்மையான அணுகுமுறை கொண்டமைக்கும் அதுவே காரணம்.

ஆனால் பொதுவாக அரசியலை களமாகக் கொண்டவர்களுக்கு இவ்வாறு ஓர் ஆதரவுத்தளம் வரலாற்றுக்காரணங்களால் உருவாவதும் அவர்கள் அதன் எல்லைக்குள் சிக்கிக்கொள்வதும் எப்போதும் நிகழ்ந்தபடியேதான் இருக்கிறது.

ஒரு முன்னோடிச்சிந்தனையாளராக அவரது வழிமுறைகளை எடுத்துக்கொள்ளலாகாது என நினைக்கிறேன். ஒரு சமூகசீர்திருத்த முன்னோடியாக அவரை மதிப்பிடலாம்.

ஜெ

## *9) கேரளத்திலும் ஆந்திரத்திலும் ஏன் திராவிடவாதம் இல்லை?*

*அன்பின் ஜெ,*

*நலம்தானே. அண்மையில் ம பொ சி அவர்கள் எழுதிய தமிழகத்தில் பிற மொழியினர் என்ற ஒரு சரளமான நடையில் அமைந்த நிதானமான தொனியில் எழுதப்பட்ட ஒரு புத்தகத்தை வாசித்தேன்.அதில் அவர் ஜஸ்டிஸ் கட்சியின் முக்கியமான தலைவர்களான டி.எம். நாயர், பனகல் அரசர், பி டி தியாகராயர் ஆகியோர் மீது வைக்கும் முக்கியமான ஒரு குற்றச்சாட்டு, அவர்களின் சொந்த மாநிலங்களில் திராவிடர் என்ற கருத்தாக்கத்தைப் பரப்ப அவர்கள் எந்த முயற்சியையும் மேற்கொள்ளவில்லை என்பதும், திராவிடர் என்ற கருத்தாக்கம் ஆந்திர கேரள மற்றும் கர்நாடக மாநிலங்களில் ஒருபோதும் எடுபடவில்லை என்பதும். அந்தக் கருத்தாக்கமே தமிழகத்தில் பிற மொழியினரின் ஆதிக்கத்தை மறைப்பதற்கான ஒரு திரை என்றும் வாதிடுகிறார். நீதிக் கட்சி மற்றும் திராவிடர் என்ற கருத்தாக்கம் என்பவை கேரளத்தில் எப்படிப் பார்க்கப்பட்டது? மேலும் டி எம் நாயர் அவர்களின் செயல்பாடுகள் கேரளத்தில் கவனிக்கப்பட்டதா ? அங்கே அவருக்கான அவரது முயற்சிகளுக்கான எதிர்வினை என்ன ? நீதிக்கட்சி மற்றும் திராவிடர்கழகம் கேரளத்தில் உண்டாக்கிய பாதிப்புகள் என்ன?*
*அன்புடன்*

வே. சுரேஷ் கோவை.

*அன்புள்ள சுரேஷ்*

*ஆர்வமூட்டும் ஒரு வினாதான் இது. டி.எம்.நாயர், பனகல் அரசர் போன்றவர்கள் கேரளத்திலும் ஆந்திரத்திலும் திராவிட இனவாதக் கொள்கையைக் கொண்டு செல்லவில்லை என்பது உண்மை. அதற்கான காரணம் இங்கிருந்த தெலுங்கர் மலையாளி நலன்களைப் பாதுகாப்பதே என்ற மபொசியின் வாதம் வெறும் ஐயம். வரலாற்றுப் பின்புலம் அற்றது. இவை பேசப்பட்ட காலகட்டத்தில் சென்னை மாகாணம் என்பது*

மலபாரையும் கடலோர ஆந்திராவையும் உள்ளடக்கியதாக இருந்தது. தமிழ்நிலம் என்ற கருதுகோள் இருக்கவில்லை. நாயரும் பனகல் அரசரும் தங்கள் நிலத்து மக்களைக் கருத்தில் கொண்டே பேசினார்கள்.இங்கே ஊடுருவுவதைப்பற்றி அல்ல.

திராவிட இனவாத சித்தாந்தம் என்பது பல்வேறு மொழி,சாதிபேதங்கள் கொண்ட பிராமணரல்லாதார் அனைவரும் பிராமணர்களுக்கு எதிராக ஒருங்கிணைவதற்கான ஒரு பொது அடையாளமாகவே முன்னெடுக்கப்பட்டது. தமிழகத்தில் பிரிட்டிஷ் அரசு ஊழியத்தில் பிராமணர் வகித்த முன்னிலைப்பங்குக்கு எதிராகத் தங்களுடைய பங்கைக் கோரி எழுந்த இயக்கம்தான் அது. பின்னர் பிரிட்டிஷார் இந்தியர்களுக்கு அரசியலுரிமைகள் அளிக்க ஆரம்பித்தபோது அரசியல் சார்ந்து விரிந்தது.

ஆரம்பத்தில் அதற்கு பிராமணரல்லாதார் என்ற அடையாளமே முன்வைக்கப்பட்டது. அதை விட திராவிட இன அடையாளம் அழுத்தமானது என்பதைக் கண்டுகொண்டதும் அந்த அடையாளத்துக்கு அழுத்தம் அளிக்கப்பட்டது. இவ்வாறுதான் திராவிட அரசியல் உருவாகி வந்தது.

இந்தப் பிரச்சினை ஆந்திரத்திலும் கேரளத்திலும் வேறு வகையில் இருந்தது. கேரளத்தில் பிராமண ஆதிக்கம் இருவகையில் இருந்தது. நிலப்பிரபுக்களான நம்பூதிரிகளின் ஆதிக்கம், அரசுப்பணிகளை ஆக்ரமித்திருந்த தெலுங்கு பிராமணர், தமிழ் பிராமணர்களின் ஆதிக்கம். நம்பூதிரிகளின் நில ஆதிக்கத்தை இரண்டாம்நிலைச் சாதியினரான நாயர்கள் எளிதில் கைப்பற்றினார்கள். ஆனால் ‘பரதேச பிராமணர்கள்’ என நாயர்கள் சொன்ன ஐயர்கள்,ராவ்களின் அரசூழிய மேலாதிக்கத்தை வெல்லமுடியவில்லை. மலபாரிலும் திருவிதாங்கூரிலும் அவர்களுக்கு எதிராக உருவான இயக்கமே சென்னையில் பிராமணரல்லாதார் இயக்கமாக டி.எம்.நாயரால் கொண்டுசெல்லப்பட்டது.

கேரளத்தில் இந்த இயக்கத்துக்கு இனவாதம் தேவைப்படவில்லை. ராவும் அய்யரும் மலையாளிகள் அல்ல, அன்னியர்கள் என்பதே போதுமானதாக இருந்தது. அதாவது இன அடையாளத்துக்குப் பதில் மொழி அடையாளம்.‘பரதேச பிராமணர்’ என்ற சொல்லை அக்காலங்களில் எல்லா நாயர் தலைவர்களும் மீண்டும் மீண்டும் சொன்னார்கள். அது பொது எதிரியாக அந்த சிறுபான்மை பிராமணரை ஆக்கி அவர்களை எளிதில் அதிகாரச்சூழலில் இருந்து விலக்கியது. ஆகவே அங்கே திராவிட இனவாதம் தேவைப்படவில்லை.

மேலும் அதிகாரத்தைப்பெற்றதுமே நாயர்கள் மேலும் மேலும் தங்களை சம்ஸ்கிருதமயமாக்கவும், ஆரிய அடையாளம் நோக்கிச் செல்லவுமே முயன்றார்கள். மலையாளம் முக்கால்வாசி சம்ஸ்கிருதமாக ஆன காலம் இது. தங்களை ஆரியர் என்று சொல்லிக்கொள்வதே நாயர்களுக்குப் பிடித்தமானதாக இருந்தது. இன்றும் கேரளத்தில் நடைமுறையில் அதிகாரம் நாயர்களிடம் இருந்து போகவில்லை. அதை ஈழவர்களிடம் பகிர்ந்துகொள்ள நாயர்கள் முன்வந்ததுமே பிரச்சினை முடிந்துவிட்டது.

இதே நிலைதான் ஆந்திரத்திலும். விஜயநகர ஆட்சியில் நியோகி பிராமணர் நிர்வாக அதிகாரத்தில் இருந்தனர். பிரிட்டிஷ் ஆட்சியில் அவர்களுக்கு ஒரு சின்ன மேலாதிக்கம் வந்தது. ஆனால் மிக எளிதில் அதை அங்கே ரெட்டிகள் உடைத்தார்கள். எண்ணிக்கை பலத்தாலும் செல்வ பலத்தாலும். சென்னையில் மட்டுமே அவர்களுக்கு இங்கிருந்த பிராமணர்களிடம் ஒரு போட்டி இருந்தது. அதை வெல்லவே பிராமணரல்லாதார் இயக்கத்தில் ஆர்வம் காட்டினார்கள். ஆந்திராவில் இன்றும் ரெட்டி ஆதிக்கம் தான். அதன்பின் எதற்கு திராவிட வாதம்?

பிராமணரல்லாத உயர்சாதியினரான நாயர்களும் ரெட்டிகளும் ஜனநாயக அதிகாரத்தைத் தக்கவைத்துக்கொள்ளுமளவுக்கு எண்ணிக்கை பலமும் கொண்டவர்கள் என்பதை கவனிக்கவேண்டும்.தமிழ்நாட்டில் அப்படி அல்ல நிலைமை. பிராமணரல்லாத உயர்சாதியினர் எண்ணிக்கைபலமற்றவர்கள். ஆகவே உருவாகி வந்த பிற்படுத்தப்பட்டவர்களை தங்கள் அணியில் நிறுத்தவேண்டியிருந்தது. அதற்கு திராவிட இனவாதம் போல ஒரு பொது அடையாளம் தேவைப்பட்டது. ஆகவே அது முன்னெடுக்கப்பட்டது.

மேலும் திராவிட இனவாதம் தமிழகத்தில் உருவான ஒன்று. எல்லிஸ், கால்டுவெல் துரைகளால் முன்வைக்கப்பட்டு மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை, ஞானியார் அடிகள் போன்ற உயர்சாதிச் சைவர்களால் வளர்த்தெடுக்கப்பட்டது. அதற்கு அன்று தமிழ்நாட்டு அதிகார அரசியலில் ஒரு தேவை இருந்தது. பின்னர் பிற்படுத்தப்பட்டோர் அரசியலில் பிராமணரல்லா உயர்சாதியினர் ஆதிக்கம் மூழ்கியபோது அதுவும் மூழ்கியது. அவ்வளவுதான்

ஜெ

## *10) சந்திரசேகரரும் ஈவேராவும்*

*அன்புள்ள ஜெ,*

*நீங்கள் ஈவேரா பற்றி எழுதியிருந்த கட்டுரையை வாசித்தேன். என்னுடைய நெடுநாள் ஆதங்கம் இது. நீங்கள் சந்திரசேகரரை அவரது குறைகளுடன் சமநிலைப்பார்வையில் பார்க்கிறீர்கள். அதே சலுகையை ஏன் பெரியாருக்கு அளிக்கமாட்டேன் என்கிறீர்கள்? ஏன் பெரியாரை மட்டும் எப்போதும் எதிர்த்தே எழுதுகிறீர்கள்? இதை விளக்கமுடியுமா?*

*செம்மணி அருணாச்சலம்*

*அன்புள்ள செம்மணி அருணாச்சலம்,*

*நீங்கள் தொடர்ந்து என் கருத்துக்களை வாசிப்பவர், நாம் ஓர் உரையாடலில் இருக்கிறோம். ஈவேரா பற்றி நான் எழுதியவற்றை வாசியுங்கள். நான் எங்காவது ஈவேரா அவர்களைப் பற்றி அவமதிப்பாக எதையாவது சொல்லியிருக்கிறேனா? எங்காவது அவரது வரலாற்றுப்பாத்திரத்தை அல்லது அவர் தமிழ்ச்சமூகத்துக்கு அளித்த சேவையைக் குறைத்து மதிப்பிட்டிருக்கிறேனா? நான் ஒரு முறைகூட அவரைப்பற்றிய மதிப்பையும் அவரது பங்களிப்பையும் பற்றிய ஒரு குறிப்பு இல்லாமல் அவரை விமரிசித்ததில்லை.*

*ஆனாலும் விமர்சனங்களே அதிகம் என்பதை ஒப்புக்கொள்கிறேன். அதற்கான காரணத்தை நம்முடைய பெரியாரியர்களிடம்தான் நீங்கள் பார்க்கவேண்டும். ஸ்மார்த்த பிராமணர்கள் எப்படி சந்திரசேகர சரஸ்வதி அவர்களை முனிவர் என்றும் ஞானி என்றும் மனித தெய்வம் என்றும் அற்புதங்கள் நிகழ்த்தியவர் என்றும் சொல்கிறார்களோ அதே மனநிலைதான் பெரியாரியர்களிடமும் உள்ளது. அவர்கள் ஈவேரா அவர்களை தமிழகத்தின் தலைசிறந்த சிந்தனையாளர் என்றும் தமிழக வரலாற்றின் தலைசிறந்த சீர்திருத்தவாதி என்றும் தமிழக முற்போக்கு அரசியலின் முன்னோடி என்றும் சொல்கிறார்கள்.*

*சந்திரசேகர சரஸ்வதி அவர்களை ஞானி அல்லது மகான் என்று ஒருவர் சொல்வது அவரது சொந்தச் சாதிப்பிடிப்பினால். அதற்குமேல் அந்தக் கூற்றுக்கு மதிப்பேதும் இல்லை.*

இன்னும் சொல்லப்போனால் உண்மையான தீவிரத்துடன் சந்திரசேகர சரஸ்வதி பிராமணர்களின் ஆசாரங்களை வலியுறுத்தியதனால் அந்தக் கட்டுப்பாடுகளை ஏற்கமுடியாத, அதேசமயம் வைதிகர் என்ற இடத்தையும் விரும்பக்கூடிய லௌகீக பிராமணர்களால் ஒரு போர்த்தந்திரமாகவே சந்திரசேகர சரஸ்வதி ஒரு ஞானி என்னும் நிலைக்குத் தள்ளப்படுகிறார்.

வைதிகரல்லாத ஒருவர் உண்மையிலேயே அப்படிச் சொன்னாரென்றால் ராமகிருஷ்ணர், ரமணர், வள்ளலார், நாராயணகுரு போன்றவர்களிடமிருக்கும் அனுபூநிநிலையை சுட்டிக்காட்டி அந்த கடந்த நிலை ஒருபோதும் ஆசாரவாதிகளுக்குக் கைகூடுவதில்லை, அவர்களால் அதைப் புரிந்துகொள்ளவும் முடியாது என்பேன். அவர்களின் நூல்களையும் தனிவாழ்க்கையையும் சுட்டிக்காட்டுவேன்.

ஆனால் பெரியாரியர்கள் ஈவேரா அவர்களைத் தமிழகத்தின் தலைசிறந்த சிந்தனையாளர் என்று சொல்வது மட்டுமல்ல அதை ஒரு அதி உக்கிரமான பிரச்சாரமாகவே சொல்லி சூழலில் நிலைநாட்டி வருகிறார்கள். அவர் இல்லாவிட்டால் தமிழகத்தின் பெரும்பாலான மக்கள் மாடுதான் மேய்த்துக்கொண்டிருப்பார்கள் என்ற ஒற்றைவரியை எந்த வரலாற்றுப்பிரக்ஞையும் இல்லாமல் சொல்லி நிறுத்தி வருகிறார்கள். அதன் விளைவாக தமிழகத்தின் தலித் அரசியல் முன்னோடிகளை,தொழிற்சங்க முன்னோடிகளை,சீர்திருத்த முன்னோடிகளை இருட்டில் தள்ளுகிறார்கள்.

இந்நிலையில் ஈவேரா அவர்களின் உண்மையான மதிப்பைச் சொல்லியாகவேண்டியிருக்கிறது. ஈவேரா அவர்கள் தமிழ்ப்பண்பாட்டின் மிகமுக்கியமான சமூக சீர்திருத்தவாதி என்பதில் ஐயமில்லை. தமிழ்ச்சமூகத்தின் சிந்தனை வளர்ச்சியில் அவருடைய பங்கு மறுக்கமுடியாதது. ஆனால் அவரை அசல்சிந்தனையாளர் என்று சொல்வது சிந்தனை என்றால் என்ன என்றே தெரியாத நிலைக்கே கொண்டுசெல்லும். அவருடைய பேச்சும் எழுத்தும் சிந்தனையாளனுக்குரியதல்ல.

ஈவேரா அவர்களின் அணுகுமுறை எல்லாவற்றையும் செவிவழியாக பொதுவாகப் புரிந்துகொள்ளும் கிராமிய அணுகுமுறையாகவே இருந்தது. அவர் மிகச்சிக்கலான இந்தியப்பண்பாட்டுப் பின்னலை, மதச்சிந்தனைகளை, இந்தியவரலாற்றின் நெடுங்காலப்பரிணாமத்தை அறிய எந்த முயற்சியும் எடுத்துக்கொள்ளவில்லை.

மிகப்பொத்தாம்பொதுவாக முரட்டுத்தனமாக அதை அணுகி அதன்மூலம் பெற்ற முடிவுகளை ஓங்கிச் சொன்னார்.

ஈவேரா அவர்களுக்கு முன்னாலும் அவரது சமகாலத்திலும் இந்தியச் சமூகத்தின் பண்பாட்டையும் வரலாற்றையும் நுட்பமாகவும் விரிவாகவும் ஆராய்ந்த சிந்தனையாளர்கள் பலர் உண்டு. அவர்களை நோக்கிச் செல்லத் தடையாக இருப்பது ஈவேரா அவர்களைப்பற்றி உருவாக்கப்படும் இந்த மிகை மதிப்பீடுதான்.

ஈவேரா அவர்களின் கருத்துவெளிப்பாட்டுமுறை என்பது கருத்துப்பூசல் சார்ந்தது. சொல்லப்போனால் ‘கன்னாபின்னாவென்று’ வசைபாடுவது அது. அது நம்முடைய கிராமத்துப் பெரியவர்களிடம் உள்ளது. வசைபாடுவது என்பதே ஒரு சாதாரணத் தமிழ் மனநிலை. எங்காவது எவரையாவது யாராவது ஒருவர் வசைபாடுவதை நாம் தமிழகத்தில் கேட்டுக்கொண்டே இருக்கலாம். இந்தக் காரணத்தால்தான் ஈவேரா அதிகமாக ரசிக்கப்பட்டார், படுகிறார். ஆனால் அது சிந்தனையாளனின் வழி அல்ல. இக்காரணத்தால்தான் அவரை அவர் காலத்துச் சிந்தனையாளர்கள் எவரும் ஒரு பொருட்டாக நினைக்கவில்லை. ஏனென்றால் அவரிடம் ஒரு விவாதமே சாத்தியமல்ல.

ஈவேரா அவர்களின் இந்த பொத்தாம்பொது பார்வையும் முரட்டு வெளிப்பாடும் தமிழில் ஆழமாக வேரூன்றிவிட்டது. ஏனென்றால் இது பின்பற்ற எளிதானது. எந்த அறிவார்ந்த உழைப்பையும் கோராதது. அதேசமயம் சிந்தனையாளராக செயல்படுகிறோம் என்ற நிறைவையும் அளிப்பது. ஒருவர் அம்பேத்கரையோ இ.எம்.எஸ்ஸையோ பின்பற்றினால் எதை எதிர்க்கிறோமோ அதையே ஆழமாகக் கற்கவேண்டும் என்ற கட்டாயத்தை அடைவார். ஈவேரா அவர்களைப் பின்பற்றினால் தீவிரமாக வசைபாடினால் மட்டும் போதும். தமிழகத்தில் தலித்தியரும் மார்க்ஸியரும்கூட ஈவேராவின் அணுகுமுறையைப் பின்பற்றுகிறார்கள் என்பதற்கான காரணம் இதுவே.

ஆகவேதான் ஈவேரா அவர்களை விமர்சித்தாகவேண்டியிருக்கிறது. அவரது வழிமுறைகள் ஒரு சிந்திக்கும் சமூகத்துக்கு உரியன அல்ல என்று சொல்ல வேண்டியிருக்கிறது. அவருடைய பங்களிப்பை ஏற்றபடியே அதைச் சொல்லியாகவேண்டும். சொல்லப்போனால் ஈவேரா அவர்களிடம் எனக்கிருக்கும் ஒரே விமர்சனம் இது மட்டும்தான். இதையே எப்போதும் சொல்லிவருகிறேன்.

ஈவேரா அவர்களின் வைதிக எதிர்ப்பு எனக்கு ஏற்புடைய கருத்துதான் என்பதை என் எழுத்துக்களைப் பார்க்கும் எவரும் அறிந்துகொள்ளலாம். இந்திய ஞானமரபுக்குள் உள்ள அவைதிகப்போக்குகளை அதிகமாக முக்கியத்துவம் கொடுத்து நான் பல்லாண்டுக்காலமாக எழுதி வருகிறேன். ஈவேரா அவர்களின் சமூக சீர்திருத்தக் கருத்துக்களில் அனேகமாக அனைத்திலுமே எனக்கு உடன்பாடுதான் உள்ளது. நேர்மாறாக சந்திரசேகர சரஸ்வதி அவர்களின் சமூகக் கருத்துக்களில் எவற்றுடனும் உடன்பாடு இல்லை.

ஆனால் நான் ஈவேரா அவர்களை விமர்சிப்பது அவர் சிந்தனையாளராக எனக்கு எதையுமே அளிக்கவில்லை என்பதைக்கொண்டுதான். கிட்டத்தட்ட அவரது அதே தரப்பை எடுத்த அம்பேத்கரின் ஒவ்வொரு பக்கமும் என்னை வளரச்செய்கிறது. இ.எம்.எஸ்ஸும் கெ.தாமோதரனும் தேவிபிரசாத் சட்டோபாத்யாயாவும் ராகுல்ஜியும் எனக்குக் கற்பிக்கிறார்கள். இந்த வேறுபாட்டை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். என் விமர்சனம் அதற்காகவே.

ஈவேரா அவர்களின் தனியாளுமை பற்றி எனக்குப் பெருமதிப்பு உண்டு. அவரது செயல்பாடுகளில் காந்தியவாதிகளுக்கு நிகரான அர்ப்பணிப்பு எப்போதும் இருந்துள்ளது. நான் எப்போதும் அவரை காந்தி அல்லாத இன்னொருவரிடம் ஒப்பிட்டதில்லை. ஈவேரா அவர்களை என்னுடைய குருமரபு தங்கள் குருநாதர்களில் ஒருவராகவே எண்ணி வந்திருக்கிறார்கள். நித்ய சைதன்ய யதி துறவு பூண முடிவெடுத்தபோது நடராஜகுருவின் ஆணைப்படி நேரில்சென்று ஈ.வே.ரா. அவர்களிடம் விபூதி வாங்கி ஆசி பெற்றார் என்பதை நான் பலமுறை குறிப்பிட்டிருக்கிறேன். நான் ஈவேரா அவர்களை வைத்திருப்பதும் அந்த இடத்தில்தான்.

ஏற்கனவே நான் சொல்லியதுதான் இது. இன்று நான் ஈவேராவைச் சந்தித்தால் என் ஆசிரியரின் ஆசிரியராக அவரை எண்ணி முதலில் காலில் விழுந்து வணங்கி ஆசிபெறுவேன். அதன்பின்னர் அவரிடம் அவரைப்பற்றிக் கடுமையாக விமர்சனம் செய்து பேசுவேன். அவரைப்பற்றி நான் அறிந்தவரையில் அவர் என்னை முழுமனதுடன் ஆசியளிக்கவும் நான் சொல்லும் எல்லா விமர்சனங்களையும் கேட்கவும் கொஞ்சமும் தயங்கமாட்டார்.

பெரியாரியர்கள் ஈவேரா அவர்களை நிலைநாட்டும் அரசியல் நோக்குடன் உருவாக்கும் மிகைகளையும் வரலாற்றுத்திரிபுகளையும்தான் நான் சுட்டிக்காட்டியிருக்கிறேன்.

வைக்கம் போராட்டம் ஓர் உதாரணம். இந்தத் திரிபுகள் மூலம் அவர்கள் உண்மையான போராளிகள் பலரை மறைக்கிறார்கள் என்பதே என்னுடைய விமர்சனம். பக்தர்களால் வரலாறு திரிபு செய்யப்படுவதென்பது இங்கே சாதாரணம். சந்திரசேகர சரஸ்வதி அவர்களுக்கும் காந்திக்குமான சந்திப்பின் வரலாறு திரிக்கப்பட்டது போல. இரண்டையுமே மறுத்து நானறிந்த உண்மையைச் சொல்கிறேன்.

சந்திசேகர சரஸ்வதி அவர்கள் ஒரு மடத்தாலும் அதைச்சேர்ந்தவர்களாலும் ஊடகத்தில் நிலைநிறுத்தப்படுகிறார். ஆனால் ஈவேரா அவர்களுக்கு ஐம்பதாண்டுக்கும் மேலாக பிரம்மாண்டமான அரசு ஆதரவு உள்ளது. சந்திரசேகர சரஸ்வதி அவர்களைத் தமிழில் எவரும் விமர்சிக்கலாம். பெரியாரியர்கள் ஈவேரா அவர்களை விமர்சனத்துக்கே அப்பாற்பட்டவராக நினைக்கிறார்கள். ஈவேரா அவர்களின் பெயரைச் சொல்வதே அவமதிப்பு என்னும் கெடுபிடிநிலையை உருவாக்குகிறார்கள். அம்மனநிலையில்தான் ஈவேரா பற்றி நான் சொல்லும் சாதாரணமான விமர்சனங்களும் வரலாற்றுத்தகவல்களும் எல்லாம் பெரும் தாக்குதல்களாகக் கொள்ளப்படுகின்றன.

நடுநிலையாளர்கள் சிலர் தவிர எவரும் என்னுடைய தரப்பைப் புரிந்துகொள்ளப்போவதில்லை என நான் அறிவேன். சந்திரசேகர சரஸ்வதி பற்றிய கட்டுரையை ஆசார பிராமணர்கள் அவர்களின் ‘மகாப்பெரியவா’ பற்றிய கடும் விமர்சனமாகவே பார்ப்பார்கள். பெரியாரியர்களுக்கு அது ‘சங்கராச்சாரி’யைப் பாராட்டும் கட்டுரையாகத் தெரியும். என்னுடைய ஈவேரா விமர்சனங்கள் அவரைப் புகழ்ந்து எழுதப்பட்டவை என ஆசாரபிராமணர்கள் நினைக்கிறார்கள். பெரியாரியர்கள் அவற்றை வசைபாடல்களாக எண்ணுகிறார்கள்.

இரண்டுநாட்களுக்கு முன்னால் ஒருவர் ஈவேரா அவர்கள் மணியம்மையை மணந்துகொண்டதைப்பற்றிக் கடுமையான விமர்சனம் முன்வைத்து அதனடிப்படையில் ஈவேரா அவர்களை மதிப்பிட்டார். நான் சொன்னேன் ‘உங்களுக்கு ஒரு சுயநலமில்லாத உக்கிரமான சீர்திருத்தவாதி ஒருவர் தேவை என்றால் நீங்கள் அவரது மிகைநடத்தைகளையும் சேர்த்துத்தான் வாங்க வேண்டும்.’ அவர் உடனே என்னை ஒரு பெரியாரியர் என வசைபாட ஆரம்பித்தார். கொஞ்ச நேரத்தில் எனக்கே சந்தேகமாகிவிட்டது, நான் யார் என்று. இதை எழுதி அதை நானே தெளிவுபடுத்திக்கொள்கிறேன்.

ஜெ

## *11) ஈவேரா பற்றி சில வினாக்கள்...*

*ஈவேரா பற்றி நான் எழுதிய கட்டுரைகளை ஒட்டி பல கேள்விகள் கடிதங்களாக வந்தன. அவற்றில் முக்கால்வாசிக் கடிதங்கள் வழக்கம்போல என்னை மலையாளியாக, ஆகவே ஓர் அயோக்கியனாக முன்னரே முடிவுசெய்துவிட்டு விவாதத்துக்கு அழைப்பவை. அவற்றை வழக்கம்போல நானும் முழுமையாகவே ஒதுக்கிவிடுகிறேன். என்னை எவர் வேண்டுமென்றாலும் அயோக்கியன் என்று தாராளமாக எண்ணவோ எழுதவோ செய்யலாம்.*

*நான் நம்பும் வாசகன், என் புனைவுகளையும் கட்டுரைகளையும் வாசித்தால் புரிந்துகொள்ளக்கூடியவன், இந்த விவாதங்களை கவனித்துக்கொண்டிருக்கிறான் என்றும் விவாதங்களின் தரப்புகளில் உள்ள தரத்தை மதிப்பிட்டுக்கொண்டிருக்கிறான் என்றும் நம்புகிறேன். அவனிடம் மட்டுமே நான் உரையாட முடியும். விரல் விட்டு எண்ணத்தக்க சிலராக அவர்கள் இருக்கலாம். அவர்கள்போதும் என்பது நான் இருபத்தைந்தாண்டுகளுக்கு முன்னரே எடுத்துவிட்ட முடிவு.*

*என்.கெ.சிவக்குமார், சரவணன் முத்துக்குமரன் ஆகியோர் நான் ஈவேரா என்று எழுதுவது ஏன் என்று கேட்டிருக்கிறார்கள்.*

*அதற்கு ஒரு சிறு பின்னணி உண்டு. பல ஆண்டுகளுக்கு முன்னர் நான் பிழையாகவே ஒரு கட்டுரையில் ஈவேரா என்று எழுதியிருந்தேன். என்ன காரணம் என்றால் தமிழில் திருப்பதியின் பெயர் வேங்கடம்தான். வெங்கடம் அல்ல. அந்த அடிப்படையில்தான் கி.வேங்கடசுப்ரமணியன் என்றும் ஆ.இரா.வேங்கடாசலபதி என்றும் எழுதுகிறார்கள். ஈவேரா அவரது பெயரை அப்படித்தான் எழுதுவார் என்று ஓர் அனிச்சையான நம்பிக்கையால் அப்படி எழுதினேன்.*

*ஆனால் எனக்கு ஆக்ரோஷமான நாலைந்து கடிதங்கள் வந்தன. ஈவேரா அவர்களின் தந்தைபெயர் வெங்கிட்ட நாயக்கர் என்றும் ஆகவே அவரது பெயரை ஈவெரா என்றுதான் எழுதவேண்டும் என்றும் அவர்கள் சொன்னார்கள். ஆனால் என் பெயரை செயமோகன் என்று எழுதியிருந்தனர். அத்தனை பெயரையும் தமிழ்ப்படுத்தி எழுதக்கூடியவர்கள்*

அவர்கள். சுந்தர இராமசாமி என்று எழுதக்கூடியவர்கள். இன்றைக்கும் தமிழ் விக்கிபீடியாவில் இந்தக்கொள்கை உடையவர்கள்தான் நிறைந்திருக்கிறார்கள்.

நான் அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினேன். ஒரு பெயரை அப்பெயருக்குரியவர் எப்படி எழுதுகிறாரோ அப்படி எழுதவேண்டும் என்பதுதான் மரபு. உலகளாவிய ஒரு நாகரீகம் அது. ஆனால் நீங்கள் பிறர் பெயரை உங்கள் கொள்கைப்படி மாற்றி எழுதுகிறீர்கள். அதற்கு மொழிசார்ந்த நியாயங்களைச் சொல்கிறீர்கள். அந்த நியாயம் உங்கள் தலைவருக்குச் செல்லுபடியாகாதா என்ன? அவரது பெயரை ஏன் தமிழ்முறைப்படி எழுதக்கூடாது? ஈ.வே.இராமசாமி என்றுதானே அவரை எழுதவேண்டும்? ஏன் தெலுங்கு உச்சரிப்பைத்தான் எழுதவேண்டும் என்கிறீர்கள்?

’சரி, கொள்கையளவில் ஒரு பொதுமுடிவுக்கு வருவோம். பெயர்களை மாற்ற பிறிதொருவருக்கு உரிமை இல்லை. தன் பெயரை ஒருவர் எப்படி எழுத விரும்பினாரோ அப்படித்தான் அனைவரும் எழுதவேண்டும். ஏனென்றால் அது ஓர் ஆவணம், ஓர் அடையாளம், அவ்வளவுதான். அது உங்களுக்கும் எனக்கும் பொருந்தும் விதி, ஆனால் ஈவேரா அவர்களுக்கு விதிவிலக்கு என்றால் அதை நான் ஏற்கமாட்டேன்’ என அவர்களுக்கு எழுதினேன். அதற்கு 16 பக்க வசைதான் பதிலாக வந்தது. நான் பிடிவாதமாக ஈவேரா என்று –தமிழ் மரபுப்படி – எழுத ஆரம்பித்தேன். அப்படியே கை பழகிவிட்டது.

இப்போதுகூட ஈவெரா என்று தெலுங்கு உச்சரிப்பையே எழுதத்தயார். பிற பெயர்களில் கைவைப்பது பிழை என இதைச் சுட்டிக்காட்டுபவர்கள் கொள்கையடிப்படையில் ஒத்துக்கொள்ளட்டும்.பிற தெலுங்கு, இந்தி பெயர்களையும் அவர்களின் மொழிமரபுப்படியே எழுதட்டும்.

*

ஈவேரா பற்றிய என்னுடைய இருகட்டுரைகளின் ‘முரண்பாடுகளை’ கார்த்திக் குமார், முனைவர் நாகராஜன், பிரபா ஆகியோர் சுட்டிக்காட்டியிருந்தனர்.

சமீபத்தில் சுப.வீரபாண்டியன் அவர்கள் நான் இன்றையகாந்தி நூலில் காந்தியை அவமதித்திருப்பதாக ஒரு கட்டுரை எழுதியிருந்தார். காந்தியை கீழ்த்தரமாக

வசைபாடவே எழுதப்பட்ட நூல் அது என்று அவர் வாதாடியிருந்தார். என்னிடம் பேசிய சிலர்கூட 'காந்திய கிழி கிழின்னு கிழிச்சிருக்கீங்க சார்...' என்று சொன்னார்கள்.

சுபவீயின் கட்டுரைக்கு ''டியர் சுபவீ, ஜெயமோகன் எவரையும் உயர்த்தி பேசியோ, எழுதியோ பார்க்க முடியாது. எதையும் குரை கானும் குருக்கு புத்திகாரர். தர்போது சுன்ட்ர ராமசாமியை உயர்த்திக் கொன்டிருக்கிரார். எப்போது தரையில் வீசி எரிவாரோ? தெரியவில்லை.போகட்டும் விடுங்கல். உலகம் என்பதில் பன்ட்ரிகலும் அடக்கம்தானெ.'' என்று அற்புதமான எதிர்வினையும் இருந்தது

காந்தியின் பாலியல் சோதனைகள், அவரது காமம்சார்ந்த நம்பிக்கைகளை நான் விமர்சனம்செய்திருந்ததைத்தான் சொல்கிறார்கள். அந்நூலில் பல்நூறு பக்கங்களுக்கு காந்தியை ஆதரித்திருந்ததை அவர்கள் கவனிக்கவேயில்லை. இது நம்முடைய ஒரு மனப்பழக்கம். ஒரு கட்டுரை அல்லது நூல் ஆதரித்து எழுதப்பட்டிருக்கிறதா எதிர்த்து எழுதப்பட்டிருக்கிறதா என்பதுதான் அவர்கள் தெரிந்துகொள்ளவேண்டிய ஒரே விஷயம்.

என்னுடைய எல்லா கட்டுரையைப்பற்றியும் இந்தச்சிக்கல் வந்துகொண்டே இருக்கிறது. நான் சுஜாதாவை ஆதரித்து எழுதியிருக்கிறேனா இல்லை எதிர்த்தா என்று வருடக்கணக்காக விவாதிக்கிறார்கள். வணிக எழுத்து தேவை என்று சொல்கிறேனா இல்லையா என்று திரும்பத்திரும்பக் கேட்கிறார்கள். சுந்தர ராமசாமி நல்ல எழுத்தாளர் என்று சொல்கிறேனா இல்லையா என்று குழம்பிக்கொண்டே இருக்கிறார்கள். 'முரண்பாடுகளை' திரும்பத்திரும்ப கண்டுபிடிக்கிறார்கள். திரும்பத்திரும்ப நான் விளக்கிக்கொண்டே இருக்கிறேன்.

என் கட்டுரைகளை நான் என்னுடைய ஆய்வுநோக்கில் அமைக்க முயல்கிறேன். எப்போதுமே நான் சொல்லும் முரணியக்க அணுகுமுறைதான் அது. ஒவ்வொன்றிலும் நேர்நிலை கூறுகளையும் எதிர்மறைக் கூறுகளையும் விரிவாகவே விவாதிக்கிறேன். ஒரு நூல்மதிப்புரையில்கூட அந்தச் சமநிலை வரவேண்டுமென நான் எதிர்பார்க்கிறேன்.

பொதுவாக ஒற்றைப்படையான கட்டுரைகளை, மேடையுரைகளை எதிர்கொண்டு பழகிய பொதுவாசகர்கள் எப்போதுமே குழம்பித்தவிக்கிறார்கள். சுந்தர ராமசாமி ஜே.ஜே.சிலகுறிப்புகளில் இதைச் சொல்லியிருக்கிறார். 'பொதுமக்களுக்கு எப்போதுமே தேவையானவை ஒற்றைப்படையான கருத்துக்கள். பிரச்சினைகள் ஒன்றுடன் ஒன்று சிக்கலாகப் பிணைந்திருப்பதையோ வேர்கள் பலவாறாக

கிளைவிட்டிருப்பதையோ சொன்னால் அவர்கள் பொறுமையிழப்பார்கள். ஒன்றைச்சொல்லு என்று கூச்சலிடுவார்கள்' இதுதான் நிகழ்கிறது இங்கேயும்.

காந்தியைப்பற்றிய என் நூலில் காந்தியும் காமமும் என்ற கட்டுரை முழுக்கமுழுக்க அவரை கடுமையாக விமர்சிக்கிறது. அது ஒருபக்கம். காந்தியின் அகிம்சை அரசியலை, சூழியல்உணர்வை நான் பாராட்டி மதிப்பிடுவது இன்னொரு பக்கம். இரண்டும் சமன்செய்யக்கூடிய ஒரு புள்ளியில் இருந்துதான் என் கருத்தை உருவாக்குகிறேன். இதையே ஈவேராவுக்கும் சொல்வேன்.

அந்தமையப்புள்ளி எந்தப்பக்கமாகச் சாய்ந்திருக்கிறது என்பதே என் மதிப்பீட்டின் இயல்பை தீர்மானிக்கிறது. காந்தியை நான் சாதகமாக மதிப்பிடுகிறேன் என்றால் அது அவரது எதிர்மறை அம்சங்களையும் கருத்தில்கொண்டுதான். ஈவேராவை பெரும்பாலும் எதிர்மறையாக மதிப்பிடுகிறேன் என்றால் அது அவரது பங்களிப்பை பெருமதிப்புடன் கணக்கிட்டபடித்தான்.

நான் எப்படி ஈவேராவை அணுகுகிறேன்?

' நான் என் குருவாக எண்ணும் 'நித்ய சைதன்ய யதி' நாராயணகுருவின் வழி வந்தவர். நித்யா துறவு பூண்டபோது அன்று திருச்சியில் இருந்த ஈவேராவைச் சென்றுகண்டு ஆசிபெற்றுத்தான் துறவை மேற்கொண்டார். ஆகவே ஈவேரா என் குருவுக்கு குரு

இந்துமதத்தின் நசிவுப்போக்குகளுக்கு எதிரான போராட்டக்காரராகவே நான் ஈவேராவை கருதுகிறேன். மூடநம்பிக்கைகள், புரோகித ஆதிக்கம் ஆகியவற்றுக்கு எதிரான அவரது போராட்டம் எனக்கு முற்றிலும் உடன்பாடானதே. நான் கடவுள் நம்பிக்கை கொண்டவனல்ல. மதச்சடங்குகள் எதையுமே செய்பவனுமல்ல. முற்றிலும் புரோகித ஆதிக்கத்துக்கு எதிரானவன். .

....ஆனால் ஈவேரா மீது எனக்கு சில விமரிசனங்கள் உண்டு. அவர் இருந்திருந்தால் 'நான் நித்யாவின் மாணவன்' என்றுசொல்லி அவரை நேரில் சந்தித்து அவற்றைச் சொல்லியிருப்பேன்.''வாங்க தம்பி '' என எனக்கு ஒரு இருக்கை கொடுத்து அவற்றை அவர் கேட்டிருப்பார். இன்று ஈவேரா பற்றி கூச்சலிடுபவர்களை விடவே நான் அவரை அறிந்தவன், ஒருவகையில் நெருக்கமானவன். [பெரியார் ஒரு கடிதம் ]

*ஈவேரா பற்றி நான் எழுதிய முதல் குறிப்பிலேயே இதை தெளிவுற, திட்டவட்டமாகச் சொல்லிவிட்டே என்னுடைய அத்தனை விவாதங்களயும் நான் ஆரம்பித்திருக்கிறேன். திரும்பத்திரும்ப எல்லா விவாதங்களிலும் இதைக் கோடிகாட்டிவிட்டே மேலே பேசியிருக்கிறேன்.*

*ஈவேரா அவர்களின் தனியாளுமை பற்றி எனக்குப் பெருமதிப்பு உண்டு. அவரது செயல்பாடுகளில் காந்தியவாதிகளுக்கு நிகரான அர்ப்பணிப்பு எப்போதும் இருந்துள்ளது. நான் எப்போதும் அவரை காந்தி அல்லாத இன்னொருவரிடம் ஒப்பிட்டதில்லை. [ஈவேராவும் சந்திரசேகரரும் ]*

*ஈவேரா அவர்களின் தனிப்பட்ட ஆளுமையை எப்போதுமே மதிப்புடன் மட்டுமே குறிப்பிட்டிருக்கிறேன். அவரது தனிப்பட்ட நேர்மை, அவரது சீர்திருத்த நோக்கம், அவரது பங்களிப்பு ஆகியவற்றை இந்த தளத்திலேயே மீண்டும் மீண்டும் பதிவுசெய்தபின்னரே மேலே பேசுகிறேன். அனேமாக அத்தனை கட்டுரைகளிலும். இந்தத்தளத்தில் இருபதுக்கும் மேல் கட்டுரைகளில் அக்குறிப்பை நீங்கள் காணலாம்.*

*அதற்குமேல் அவர் மீதான என் விமர்சனங்களை முன்வைக்கிறேன். அவ்விமர்சனங்கள் பொதுவாக ஐந்து அடிப்படைகள் சார்ந்தவை.*

*ஈவேரா அவர்கள் பகுத்தறிவை முன்வைத்தவர். ஆனால் அவரது வரலாற்று அணுகுமுறை மிகமிக தட்டையானது, ஒற்றைப்படையானது. ஆகவே நுட்பமான பகுப்பாய்வுகொண்டு மட்டுமே புரிந்துகொள்ளப்படவேண்டிய பல விஷயங்களை எளிமைப்படுத்தவே அவரால் முடிந்தது. சாதி போன்ற சமூக விஷயங்களிலும் இலக்கியம் போன்ற பண்பாட்டு விஷயங்களிலும் அவரது புரிதல்கள் பாமரத்தனமான நம்பிக்கைளாகவே உள்ளன*

*ஈவேரா அவர்கள் பெரும்பாலான கருத்துக்களை கோபமும் வெறுப்பும் கொண்டு வசைகளாகவே வெளிப்படுத்தியிருக்கிறார். அவர் தன் சாதிய ஆழ்மனத்தை பரிசீலனைசெய்துகொள்வதை அந்த வசைகள் தடுத்துவிட்டன என்றே நினைக்கிறேன்.*

*அவரது ஒட்டுமொத்த இயக்கத்திலும் சில மக்கள்மீது முன்வைத்த காழ்ப்பு ஒரு சிந்தனையாளனுக்குரியதல்ல. அத்தகைய விஷங்கள் நீடித்த அளவில் அழிவையே உருவாக்கும்*

*எல்லா அரசியல்வாதிகளையும் போல அவருக்கும் ஓர் அரசியல் அடித்தளம் இருந்தது. அந்த பிற்படுத்தப்பட்டோர் சாதியரசியலின் எல்லைக்குள்தான் அவர் செயல்பட்டார்*

*அவரது இந்த இயல்புகளை அவருக்குப்பின் வந்தவர்கள் அரசியல் அதிகாரத்திற்காகப் பயன்படுத்திக்கொண்டார்கள். திராவிட இயக்கம் ஒரு பரப்பியம் சார்ந்த இயக்கமாக மாற அவரது அடிப்படைக்கொள்கைகளின் இயல்பே காரணம்.இதை ஏற்கனவே திராவிட இயக்கத்தை நிராகரிப்பது ஏன், கல்வாழைநாத்திகம் ஆகிய கட்டுரைகளில் மிக விரிவாகவே சொல்லியிருக்கிறேன்.*

*பரப்பியம் சார்ந்து செயல்பட்ட திராவிட இயக்கத்தின் சாதனைகளை இவ்வாறு சொல்கிறேன்*

*திராவிட இயக்கத்தின் வரலாற்றுப் பங்களிப்பு என்ன? அவற்றை சுருக்கமாக வரையறுத்து இவ்வாறு சொல்லலாம்.*

*1. திராவிட இயக்கம் தமிழகத்தில் உள்ள பிற்படுத்தப்பட்ட – மிகவும் பிற்படுத்தப்பட்ட மக்கள் ஒருங்கிணைந்து அரசியல் அதிகாரத்தை அடைவதற்கு ஒரு ஊடகமாக செயல்பட்டது.பிற்படுத்தப்பட்டமக்கள் அரசியலதிகாரம் நோக்கிச் சென்றது என்பது இந்தியாவில் எங்கும் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி. அந்த பயணத்திற்கு ஒவ்வொரு மாநிலத்திலும் ஒவ்வொரு இயக்கம் பங்காற்றியிருக்கிறது. கேரளத்தி இடதுசாரி இயக்கம். கர்நாடகத்தில் சோஷலிச இயக்கம். தமிழ்நாட்டில் அது திராவிட இயக்கத்தால் நடந்தது. அந்த அதிகார மாற்றம் என்பது இயல்பான இன்றியமையாத ஒரு ஜனநாயக நிகழ்வே.*

*2. ஒரு பரப்பிய இயக்கம் என்ற முறையில் திராவிட இயக்கம் கோடிக்கணக்கான மக்களை சென்றடைந்தது. ஆகவே அது எடுத்துப்பேசிய சமூக சீர்த்திருத்தக் கருத்துக்களும் தமிழ் முதன்மைக் கருத்துக்களும் தமிழகத்தின் அனைத்து மக்களுக்கும் அறிமுகமாயின. அறிவியக்கங்களின் கொள்கைகள் மக்களுக்கு சென்றுசேர மிகவும் தாமதமாகும். பரப்பிய இயக்கம் சில வருடங்களிலேயே அவற்றை நிகழ்த்தும். பெரும்பாலான தமிழக மக்களின் சிந்தனையில் சாதி எதிர்ப்பு, மூடநம்பிக்கை எதிர்ப்பு, பழைமைவாத எதிர்ப்பு போன்ற முற்போக்குக் கருத்துக்கள் திராவிட இயக்கம் மூலமே சென்று சேர்ந்தன. [திராவிட இயக்கத்தை நிராகரிப்பது ஏன்?]*

திராவிட இயக்கத்தின் சாதனைகளையும் தோல்விகளையும் ஆராயும் கட்டுரை அது. திராவிட இயக்கம் ஒரு பரப்பிய இயக்கம் என்பதனாலேயே அது கொள்கைகளை அதிகாரத்துக்கான கோஷங்களாக மட்டுமே முன்வைத்தது. ஆகவே இங்கே அக்கொள்கைகள் எந்த சமூக மாற்றத்தையும் உருவாக்கவில்லை என்று அக்கட்டுரையில் விளக்குகிறேன்

நீண்ட கட்டுரைகளில் இந்த இரு பக்கங்களையும் மிகத் துல்லியமாக விளக்கி பலமுறை எழுதியிருக்கிறேன். முரண்பாடுகள் அல்ல இவை, உண்மையின் இரு பக்கங்கள் என இக்கட்டுரைகளில் எவற்றையேனும் வாசித்த எவரும் உணரமுடியும். அப்படி உணரமுடியாதவர்களுக்காகவே ஒரு தலைப்பையும் வைத்திருக்கிறேன். 'அறுவைசிகிழ்சைக்கு கடப்பாரை- ஈவேராவின் அணுகுமுறை' நோய் இருப்பது உண்மை, அவர் சிகிழ்சை செய்ய முயன்றது உண்மை, அவரது அக்கறை நேர்மையானது, அவரது கருவி அதற்கானதல்ல. அது அழிவை உருவாக்கியது.

சமீபத்தில் எழுதிய இக்கட்டுரையிலும் அதையே சொல்லியிருக்கிறேன். ஈவேரா அவர்கள் தமிழ்நாட்டில் உருவாக்க எண்ணிய விழிப்புணர்ச்சியைத்தான் அதில் சுட்டிக்காட்டியிருக்கிறேன். அந்த முயற்சி முற்றிலும் தோல்விஅடைந்தது என்ற என் எண்ணத்தையே மீண்டும் பதிவு செய்திருக்கிறேன். அதற்கான காரணங்களை நாம் தேடவேண்டுமென்றே மீண்டும் கோரியிருக்கிறேன்.

அதற்கு வேறெங்கும் ஆதாரம் தேடவேண்டியதில்லை, ஈவேரா ஆதரவாளர்கள் விவாதங்களை எதிர்கொள்ளும் விதத்தையே கவனித்தால்போதும். ஈவேரா எழுதியவற்றை வாசித்ததில்லை. வாழ்நாளெல்லாம் ஈவேரா எதற்கு எதிராகப் போராடினாரோ அந்த மனநிலை, கண்மூடித்தனமான உணர்ச்சிவேகம், மட்டுமே அவர்களில் வெளிப்பட்டது.

நீங்கள் சுட்டிக்காட்டிய கட்டுரைகளிடையே எந்த முரண்பாடுமில்லை என்பதை கூர்ந்து வாசித்துப்பார்த்தால் உணரமுடியும். ஈவேரா அவர்களை மாபெரும் சிந்தனையாளர் என்று அவரது ஆதரவாளர்கள் சொல்லும்போது அக்கூற்றை மறுத்து எழுதப்பட்ட கட்டுரை 'அறுவைசிகிழ்சைக்குக் கடப்பாரை'. அதில் தெளிவாகவே தமிழ்ச்சிந்தனைக்கு ஈவேரா அவர்களின் பங்களிப்பு அடையாளப்படுத்தப்பட்டுள்ளது.

அதேசமயம் ஈவேரா ஆதரவாளர்கள் கண்மூடித்தனமான பக்திக்கொந்தளிப்பை மட்டும் வெளிப்படுத்தியபோது அது ஈவேரா அவர்கள் சொன்னவற்றுக்கு எவ்வளவு எதிரானது என்று சுட்டிக்காட்ட எழுத்துரு விவாதங்கள் எழுதப்பட்டது. அதில் ஈவேராவின் அணுகுமுறையின் குறைபாடும் சுட்டப்பட்டுள்ளது.

முதல் கட்டுரையில் உள்ள விமர்சனத்தையும் இரண்டாம்கட்டுரையில் உள்ள மதிப்பீட்டையும் வெட்டி ஒட்டி அருகருகே வைத்து அலம்புவதெல்லாம் எப்போதுமே இங்கே நடந்துகொண்டிருப்பதுதான். ஈவேரா ஆதரவாளர்களிடம் நாம் காணும் பிரச்சினையே இதுதான். அவர்களால் பகுத்தறிவுடன் முழுமையாகச் சிந்திக்கமுடியாது. இதையே இன்னொரு சான்றாக முன்வைக்கிறேன்

கடைசியாக மீண்டும் ஒன்றைச் சொல்லிக்கொள்கிறேன். ஃபேஸ்புக்கிலும் டிவிட்டர்களிலும் ஒற்றைவரி அசடுகள் சொல்வனவற்றைக்கொண்டு இத்தகைய எழுத்துக்களை மதிப்பிடாதீர்கள். ஒரு சந்தேகத்தை எழுதுவதற்கு முன் குறைந்தபட்சம் கூகிள் செய்தாவது பாருங்கள். உதாரணமாக பெரியார்- கடிதம் என்ற கட்டுரையில் நீங்கள் இப்போது கேட்கும் இந்தவினாவுக்கான துல்லியமான பதில் உள்ளது. இந்துத்துவா தரப்பில் இருந்து ஈவேராவைப்பற்றி எழுதப்பட்டவற்றுக்கு மறுப்பாக எழுதப்பட்ட கட்டுரை அது. இருபக்கத்தையும் சுருக்கமாக ஆணித்தரமாகச் சொல்லக்கூடியது.

உங்கள் வினாவுக்கு புதியதாக நான் ஏதும் சொல்லவேண்டியதில்லை. நான் ஏற்கனவே எழுதியவற்றை வாசிக்கும்படி மட்டுமே கோருகிறேன். நீங்கள் வாசிக்க விரும்பினால் அக்கட்டுரைகளுக்கு மீண்டும் சுட்டி தருகிறேன்.

## *12) கீழ்வெண்மணி – பிறிதொரு போலிவரலாறு*

*ஜெ*

*கீழ்க்கண்ட கட்டுரையை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவருகிறேன்.*

*அரை உண்மைகள் முழு உண்மைகளாகும் தருணம்.*

*நேற்று தமிழ் இந்து நாளேட்டில் (25.12.2017)பண்ணை இட்ட தீ என்ற தலைப்பில் வெண்மணி பற்றி செல்வ புவியரசன் எழுதிய கட்டுரை வெளியாகியிருந்தது. வரலாற்று சான்றுகளை புறந்தள்ளி சுயவிருப்பத்தையே வரலாறாக காட்ட முடியும் என்ற போக்கிற்கு அக்கட்டுரையையே சிறந்த உதாரணமாக கூறலாம். அந்த அளவிற்கு அரை உண்மைகள் , நிறுவப்படாத தகவல்களை வரலாறாக்குவது , ஒன்றை இன்னொன்றாக மாற்றி சாதிப்பது போன்ற அம்சங்களால் நிறைந்திருந்தது அக்கட்டுரை .*

*வெண்மணி போராட்டம், தஞ்சை வட்டார நிலவுடைமை எதிர்ப்புப் போராட்டங்கள் போன்றவற்றோடு திராவிட இயக்கத்திற்கு இருந்த தொடர்பை – பார்வையை எழுத வேண்டுமானால் அவற்றை பற்றி மட்டுமே தனித்தலைப்பில் எழுதலாம். ஆனால் திராவிட இயக்கத்தின் தொடர்பு விவாதத்திற்கு உட்பட்டதாக இருக்கும் நிலையில், அது தொடர்பான முழு தகவல்கள் நிறுவப்படாத நிலையில் இக்கட்டுரை வெண்மணி பற்றிய முழுவரலாற்றையே திராவிட இயக்கத்தின் வரலாற்றினூடாகவே பார்த்திருக்கிறது அதாவது வெண்மணி வரலாற்றையே திராவிட இயக்க வரலாறாக எழுதியிருக்கிறது என்பது தான் பிரச்சினை.*

*தஞ்சை வட்டாரத்தில் நடந்த நிலவுரிமை எதிர்ப்பை கூற வரும்போது முதல் போராட்டமாக திராவிடர் கழகம் சமபந்தி பாகுபாட்டிற்கு எதிராக மேற்கொண்ட நீடாமங்கலம் போராட்டத்தை கூறுகிறது கட்டுரை . (இந்த ‘முதல்’ என்றால் என்ன?இந்த உரிமைகோரல் ஏன் எழுகிறது? என்பது பற்றி தனியே எழுத வேண்டும் ) நீடாமங்கலம் பற்றி அண்மையில் வரலாறு தொகுக்கப்பட்டிருக்கும் பின்னணியில் உடனே அதுதான் முதல் போராட்டம் என்று எடுத்துக்கொண்டு அதற்கு முன்பு எதிர்ப்பு குரல்களே எழுந்திருக்க முடியாது என்ற பொருளில் அவரச வரலாறு இங்கே அரங்கேற்றப்பட்டிருக்கிறது. நாங்கள் வந்த பின்னால் தான் தலித்துகள் (இந்த வகை*

போராட்டங்களில் பிற வகுப்பினர் எண்ணிக்கையில் குறைவு) கண் விழித்தார்கள் , அதற்கு முன்பு தங்கள் இழிவுக்கு எதிராக போராடாமல் தங்கள் மீதான இழிவை ஏற்று கிடந்தார்கள் என்ற பொருளில் திராவிட கட்சிகள் பரப்பி வந்திருக்கும் நம்பிக்கையை ஏற்றுக் கொண்ட பார்வை தான் புவியரசனுடையதாக இருக்கிறது.

இந்த உரிமை கோரலின் தொடர்ச்சியாக கட்டுரையில் வரும் வரிகள் கவனிக்கத்தக்கவை. அதாவது "அடிமைத்தளையிலிருந்து விடுபட்ட தொழிலாளர்கள் அடுத்தக் கட்டமாக, கூலி உயர்வு போராட்டத்தைக் கையிலெடுத்தார்கள்" என்கிறது கட்டுரை . அடிமைத்தளையிலிருந்து விடுபட்டிருந்தார்கள் என்று கூறுவதே பிரச்சினைக்குரிய கருத்து என்பது ஒரு புறமிருக்க ஒரு பிரச்சினையை முடித்து வைத்து விட்டு அடுத்த பிரச்சினைக்கு சென்றார்கள் என்ற பொருளில் கூறுவது சமூக பிரச்சினைகளை கட்டுரையாளர் எவ்வாறு மேலோட்டமாக புரிந்திருக்கிறார் என்பதைக் காட்டுகிறது. இதில் வேறொரு வரலாற்று அர்த்தமும் கட்டமைக்கப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

நிலவுரிமை போராட்டங்களை இடதுசாரிகளே நடத்தினார்கள் என்ற வரலாறு உள்ள நிலையில் அதற்கிணையாக திராவிடர் கழக பணிகள் இல்லாததால் அதை சரி செய்யும் விதத்தில் கூலி உயர்வு போராட்டத்தை நடத்துவதற்கு ஏதுவாக சமூக அடிமைத்தனத்திலிருந்து விடுபடும் போராட்டத்தை திராவிடர் கழகம் நடத்தி வைத்திருந்தது என்கிறது கட்டுரை . அதாவது இப்போராட்டத்திலும் திராவிடமே முதல் . மொத்தத்தில் இக்கட்டுரை தலித் குரல்களுடையதை மட்டுமல்ல கம்யூனிஸ்ட் கட்சிகளின் போராட்டத்திற்கான முகவாண்மையையும் சேர்த்தே மறுக்கிறது.

அதே போல இக்கட்டுரையில் அண்ணா வெண்மணிக்காக அக்கறை காட்டினார் என்பதை " செய்தியறிந்து நிலைகுலைந்தார்" போன்ற சொற்களால் காட்டியிருக்கிறார். இது போன்று புதிதாக கூற வரும் போது ஆதாரத்தோடு எழுதாமல் பொத்தாம் பொதுவாக எழுதுவது என்ன வகை வரலாறு?

வெண்மணி சம்பவத்தை விசாரிக்கவே கணபதியா பிள்ளை கமிஷன் அமைக்கப்பட்டது என்றே படித்திருக்கிறோம். ஆனால் இக் கட்டுரை அதைப் பற்றியே மூச்சு விடாமல் "நிலவுடைமையாளர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையில் உள்ள உறவைப் பற்றியும் விசாரிப்பதற்காக நீதிபதி கணபதியா பிள்ளையைக் கொண்டு தனி நபர் விசாரணை ஆணையத்தை அமைத்தார் அண்ணா " என்றும் அண்ணாவுக்குப் பின் முதல்வராகப் பொறுப்பேற்ற கருணாநிதி அவற்றை நடைமுறைப்படுத்தினார் என்றும்

கூறுகிறது. முன்பிருந்தே நடந்து வந்த நெடிய போராட்டங்கள் இழப்புகள் அழுத்தங்கள் என்று எவற்றையும் கணக்கில் காட்டாமல் அண்ணாவும் கருணாநிதியும் நல்லெண்ணத்தால் இயல்பாகவே இதையெல்லாம் செய்தார்கள் என்று மொத்த உரிமையையும் திராவிடக் கட்சிக்கே சமர்ப்பிக்கிறது கட்டுரை .

வரலாற்றில் திராவிட இயக்கத்திற்கு உரிய இடத்தை பெற்றுத்தர வேண்டும் என்று புதிய தலைமுறை அறிவுஜீவிகளும் ஊடகவியலாளர்களும் கொண்டிருக்கும் விழிப்புணர்வில் தவறில்லை. ஆனால் அது பிறரின் குரல்களை ,போராட்டங்களை, இழப்புகளை மறைத்துவிடுவதாகவோ தன்னுடையதாக்குவதாகவோ இருக்குமானால் அது அறமற்ற வரலாற்று எழுதியல்.

நியாயப்படி இதற்கு கம்யூனிஸ்ட் தரப்பிலிருந்து எதிர்வினை வந்திருக்க வேண்டும். ஏனோ வரவில்லை.

ஸ்டாலின் ராஜாங்கம்

எனக்கு கீழ்வெண்மணி நிகழ்வு குறித்து விக்கிப்பீடியாவிலிருந்துதான் தெரியும். தி ஹிந்து கட்டுரையில் அந்நிகழ்ச்சியை வாசித்தபோது திராவிட இயக்கத்தினரால் நடத்தப்பட்ட போராட்டம் அது என்றுதான் புரிந்துகொண்டேன். அதன்பிறகுதான் இக்கட்டுரையை வாசித்தேன். மிகப்பெரிய ஒரு மோசடிக்காளானதுபோல் உணர்ந்தேன். [புவியரசன் எழுதிய ] கட்டுரையில் எங்குமே கொல்லப்பட்டவர்கள் தலித்துக்கள் என்ற செய்தியே இல்லை. இதற்கிணையான ஒரு மாபெரும் மோசடி சென்ற பல ஆண்டுகளில் தமிழில் நிகழ்ந்ததில்லை.

நீங்கள் இதைக்குறித்து எழுதவேண்டும் என நினைத்து இக்கடிதத்தை அனுப்புகிறேன். உண்மையிலேயே இப்படி உண்மையான மறுபக்கம் ஒன்று உண்டு என்பதை பொதுவில் வைக்க உங்கள் இணையதளம் அன்றி தமிழில் இன்றைக்கு ஊடகமே இல்லை என நினைக்கிறேன்.

**எஸ்.மகாதேவன்**

*அன்புள்ள மகாதேவன்*

*கீழ்வெண்மணி நிகழ்வின் 50 ஆவது நினைவுகூரலை ஒட்டி தி ஹிந்து தமிழ் நாளிதழ் வெளியிட்ட கட்டுரைகளை கண்டபோது நினைத்தேன், இதோ இன்னொரு வைக்கம்போராட்ட புராணம் என. பிறர் நிகழ்த்திய போராட்டங்களை தன்னுடையதென வரலாற்றுத்திரிபு செய்வது திராவிட இயக்கத்தின் மரபு. கீழ்வெண்மணி நிகழ்வு தமிழகத்தில் அனைவரும் அறிந்ததாக இருந்தது என்பதனால் அதில் கொஞ்சம் அடக்கிவாசித்தனர்.*

*ஈவேரா கீழ்வெண்மணியின் ஆதிக்கசாதியினராகிய கோபாலகிருஷ்ணநாயிடு போன்றவர்களை வெளிப்படையாகவே ஆதரித்தார் என்பதும் தொழிலாளர்கள் கூலி உயர்வுகோரி நடத்திய போராட்டங்களை கொச்சைப்படுத்திப் பேசினார் என்பதும் ஆதாரபூர்வமாக பதிவானவை. மீளமீள குறிப்பிடப்பட்டவை. கீழ்வெண்மணி நிகழ்வு சி.என்.அண்ணாத்துரை ஆட்சியில் நிகழ்ந்தது. குற்றவாளிகள் மீது முறையான குற்றப்பதிவுசெய்யாமல் அவர்கள் தப்பிக்கவிட்ட பொறுப்பும் திராவிட இயக்க ஆட்சிக்கே. ஐம்பதாண்டுகாலத்தில் இவையனைத்துமே கடந்தகாலமாக ஆகி, சம்பந்தப்பட்ட பெரும்பாலானவர்கள் மறைந்துவிட்டபின் மெல்ல திராவிட இயக்கத்தின் அறிவுஜீவிகள் தங்கள் திரிபுப்பணியை தொடங்கியிருப்பதன் ஆதாரமே இக்கட்டுரை,. பலவகையிலும் மழுப்பிமழுப்பிப்பேசும் தியாகுவின் பேட்டியும் அதையே காட்டுகிறது.*

*கம்யூனிஸ்டுகள் நடத்தியது அப்போராட்டம், ஆனால் இன்று அதைப்பற்றிப் பேச இங்கே ஆட்களில்லை. இன்னும் சில ஆண்டுகளில் கீழ்வெண்மணி போராட்டமே பெரியாரால் நிகழ்த்தப்பட்டது என வரலாறுகள் எழுதப்படும். மறுக்கும் தலித் அறிவுஜீவிகள் வசைபாடப்படுவார்கள். ஒரு கட்டத்தில் ஈவேரா கீழ்வெண்மணிப்போராட்டத்தை நடத்தினார் என்பது ஒரு தரப்பு இல்லை என்பது இன்னொரு தரப்பு என ஆகும். அந்த மறுக்கும் தரப்பை பார்ப்பனத்தரப்பு என வசைபாடுவார்கள், அவர்கள் தலித்துக்களாக இருந்தாலும்!*

*இன்று உருவாகி வரும் தலித் தலைமுறை ஈவேரா தலித்துக்களுக்கென என்ன போராட்டத்தை நடத்தினார் என்ற வலுவான கேள்வியை முன்வைக்கிறார்கள். முன்னர்*

*அதற்கான பொய்விடையாக வைக்கம் கூறப்பட்டது. இப்போது நைச்சியமாக கீழ்வெண்மணியையே கடத்திக்கொண்டு செல்கிறார்கள்.*

*இப்போதுகூட உதிரி தலித் அறிவுஜீவிகளே இதன் உண்மையைப்பேசுகிறார்கள், அவர்களுக்கு முகநூலன்றி ஊடகமில்லை. திரிபாளர்களுக்கு தி ஹிந்து போல மையப்போக்கு ஊடகமே அமைகிறது என்பதை கவனிக்கலாம். கீழ்வெண்மணியின் ஐம்பதாண்டுக்கால வரலாறு குறித்து உண்மையான பதிவுகளும் எதிர்வினைகளும் வெளியிடவிரும்பும் நடுநிலையான ஒரு நாளிதழ் கம்யூனிஸ்டுக் கட்சியினரிடமிருந்து அல்லது தலித் அறிவுஜீவிகளிடமிருந்து கட்டுரை கோரியிருக்கவேண்டும். கீழ்வெண்மணி நிகழ்வில் குற்றவாளித்தரப்பில் நின்ற திராவிட இயக்க அறிவுஜீவியிடமிருந்து [செல்வ புவியரசன் திராவிடர் கழகத்தின் மாவட்டப் பொறுப்பில் இருந்தவர், அவ்வியக்கத்தின் பேச்சாளர்] ஒரு வெள்ளையடிக்கும் கட்டுரையை வாங்கி அதை வரலாறு எனபிரசுரிப்பதிலுள்ளது இடைநிலைச் சாதிநோக்குடன் செய்யப்படும் ஊடகமோசடி மட்டுமே*

**ஜெ**

## *13)* **பெரியார்மதம்**

*அன்புள்ள ஜெயமோகன் அவர்களுக்கு,*

*எந்த விமர்சனமும் இன்றி ஈ வெ ராமசாமி அவர்களையும் திராவிட இயக்கத்தையும் அணுகுபவர்களில் ஒருவன் அல்ல நான். எனினும் அதை பற்றிய தீவிர ஆய்வுகள் ஏதும் நடக்கவில்லை என்பது போல நீங்கள் சொல்வதை என்னால் ஏற்றுகொள்ள முடியாது. 1990களுக்கு பிறகு எஸ் வி ராஜதுரை – வ கீதா, MSS பாண்டியன் போன்று ஆய்வு புலம் சார்ந்தவர்களின் பணிகளை நீங்கள் மறுப்பதையும் கவனித்திருக்கிறேன். அப்படி நீங்கள் மறுப்பதற்கான காரணங்கள் புரிந்தாலும், அந்நிலைப்பாட்டினில் எனக்கு சில பிரச்சனை இருக்கிறது.*

*அவற்றை விட்டுவிடுவொம். அவ்வாய்வு மரபின் தொடர்ச்சியாக அல்லாது கடந்த பத்தாண்டுகளாக அவ்வியக்கம் குறித்த சில முக்கியமான ஆய்வுகள் வெளிவந்திருப்பதை நீங்கள் கவனித்திருக்க வேண்டும்– பழ அதியமானின் சேரன்மா தேவி போராட்ட வரலாறு தொடங்கி சமீபத்திய திருநீலகண்டனின் நீடாமங்கலம் புத்தகம் வரை. மேலும் தமிழ் உலகில் முதன்மையான ஆய்வாளர்களில் ஒருவரான சலபதி பெரியாரின் வரலாற்றை எழுதி கொண்டிருக்கிறார் (அது துதிபாடலாக இருக்காது என்பதை அவரது முந்தைய பணிகளின் தரத்தை கொண்டு நம்பலாம் ), அதியாமனும் வைக்கம் குறித்து ஆய்வு மேற்க்கொண்டு வருகிறார். இப்படியாக வெளிவந்து கொண்டிருக்கும் ஆய்வுகளின் நேர்மையை அத்தனை எளிதில் நிராகரித்து விட முடியாது. சமகாலத்தில் ஒரு குறிப்பிடத்தக்க எண்ணிக்கையிலான வாசகர்களிடம் பாதிப்பை ஏற்ப்படுத்தி – விஷயங்களை அறிமுகப்படுத்தும் நீங்கள், திராவிட இயக்கத்தை முழுமையாக நிராகரிக்கும் பட்டச்சத்தில் இத்தகு ஆய்வுகளுக்கு பதிலளிக்காமல் மட்டுமல்ல பதிவே செய்யாது போவது என்பது பெரும் பிழை என கருதுகிறேன்.*

*நன்றி*

***அருண்.***

அன்புள்ள அருண்

நான் ஈவெரா அவர்கள் எழுதிய நூல்களை வாங்கி வாசித்துக்கொண்டிருந்தவன். என் புரிதல் அவருடைய எழுத்துக்கள் வழியாக, அவருடைய சமகாலத்தவரின் வரலாற்றுப் பதிவுகள் வழியாக

எண்பதுகளில் தமிழகச் சமூகச்சூழலில் இடைநிலைச்சாதிகள் வலுப்பெற்றபின் அவர்களின் அடையாளமாக ஈவெரா முன்னெடுக்கப்பட்டார். அதன்பின்னரே அவரை சிந்தனையாளர் என முன்வைக்கும் இன்றைய முயற்சிகள் அறிவுலகில் வேகம் கொண்டன.

அவ்வாறு எழுதப்பட்ட எஸ்.வி.ராஜதுரை – வ கீதா வின் நூல் உட்பட பலநூல்களை வாசித்திருக்கிறேன். ஈவெராவின் கருத்துக்கள் ஒன்றுக்கொன்று முரண்படுபவை, எந்த தர்க்க ஒழுங்கும் இல்லாதவை, பலசமயம் வெறும் காழ்ப்புக்கள். அவற்றிலிருந்து ஒரு சிந்தனையாளரைத் திரட்டி எடுக்கச் செய்யப்படும் முயற்சிகளே இந்நூல்கள். முன்பின் தொடர்புபடுத்தி இடைவெளிகளை நிரவி உருவாக்கப்படுபவை. இவை காட்டும் ஈவெரா வெறும் புனைவு. இப்படி உலகசிந்தனையில் எந்த சிந்தனையாளராவது கட்டமைக்கப்பட்டிருந்தால் இந்த பெரியாரியர்கள்தான் அவர்களை முதலில் எதிர்ப்பார்கள்.

நீங்கள் மேலே சொன்னவர்கள் எவரும் சற்றேனும் நடுநிலைமை கொண்டவர்களோ, சிந்தனை என்பதன்மேல் அடிப்படை நம்பிக்கைகொண்டவர்களோ அல்ல. அவர்கள் மதவாதிகள், பெரியார் ஒருமதம் அவர்களுக்கு. நபி குறித்து பலநூறு இஸ்லாமியர் நூல்களை எழுதிக்குவித்துள்ளனர். அவற்றிலிருந்து நபி என்னும் வரலாற்று மனிதரை நீங்கள் சென்றடைய முடியுமா?

‘பெரியாரியத்தின்’ அடிப்படை என்பது சாதிப்பற்றும் அதைச்சார்ந்த எதிர் மனநிலையும் அது உருவாக்கும் ஆழ்ந்த காழ்ப்புகளும்தான்.. ஆகவே அவர்களால் எந்த விவாதத்தையும் உணர்ச்சியின்றி நடுநிலையாக எதிர்கொள்ளல் இயலாது. எனக்கு இவர்கள்மேல் இருப்பது பெரும்சலிப்பு. மதவாதிகளுடன் விவாதிக்கக்கூடாது என்பது என் நிலைபாடு. இவர்களையும் அந்தப்பட்டியலில் சேர்க்கலாமென நினைக்கிறேன்.

ஓர் உதாரணம் சொல்கிறேன், வைக்கம் போராட்டம் பற்றி நான் நிறையவே எழுதியிருக்கி றேன். ஆதாரபூர்வமாக. வைக்கம் போராட்டம் ஈவெராஅவர்களால் தொடங்கப்படவில் லை, அவரால் தலைமைதாங்கி நடத்தப்படவில்லை, அவரால் முடித்துவைக்கப்படவுமில் லை. அவர் அதில் பங்குபெற்றார். ஆனால் அவர் அதை தொடங்கி நடத்தினார் என சென்ற ஐம்பதாண்டுகளாக இங்கே சொல்லப்பட்டுள்ளது. பாடநூல்களிலேயே அவர் அவ்வாறு எழுதப்பட்டுள்ளது. *Periyar launched vaikom struggle* என. இது பொய், திருத்தப்படவேண்டும் என்பது என் தரப்பு

அதற்கு பெரியாரியர்கள் எழுதிய இருபதுக்கும் மேலான மறுப்புகளை வாசித்திருக்கிறேன். வசைகளுக்கு நடுவே அவர்கள் வாதிடுவது ஒன்றைமட்டும் சொல்லித்தான். ’பெரியார் வைக்கம்போராட்டத்தில் பங்கேற்றார், கூட பங்கேற்றவர்கள் பலர் அவருடைய பங்கை பு கழ்ந்திருக்கிறார்கள். இதோ ஆதாரம்’ அவ்வளவுதான். திரும்பத்திரும்ப இதேதான். என் மறுப்பு அப்படியேதான் உள்ள து, ஆனால் பெரியார் குறித்த ஜெயமோகனின் அவதூறுகளை இன்னார் கிழி கிழி என கிழி த்துவிட்டார் என நூறு இடங்களிலாவது கொக்கரித்துக்கொண்டிருக்கிறார்கள்.

இதுதான் மதவாதிகளின் மனநிலை. திரு பழ அதியமானின் நூலும் இதே கோணத்தில்தான் அமையும், ஒருபோதும் அவரால் பெரியாரி ன் உண்மையான பங்களிப்பென்ன என்று சொல்லமுடியாது. ஏனென்றால் அவர் பெரியாரி யர் என தன்னை அறிவித்துக்கொண்டுவிட்டார்.

ஜெ

## *14) திராவிட இயக்கங்களின் மறுபிறப்பு*

*அன்புள்ள ஜெயமோகன் அவர்களுக்கு,*

*இத்தலைப்பில் எழுதியுள்ள தங்களது இரண்டு கட்டுரைகளையும் படித்தவுடன் இக்கடிதத்தை எழுதுகிறேன்.*

*திராவிட இயக்கத்தின் பங்களிப்பை மதிப்பிட்டும் அதேசமயத்தில் ஒரு வெற்று பரப்பியமாக அது தமிழ் சமூக பண்பாட்டு தளத்தின் பின்னடைவிற்கு ஏற்படுத்தியுள்ள பின்னடைவுகளை கறாராக நிறுவியுள்ளீர்கள்.*

*தங்கள் வாசகனாக பெருமிதம் கொள்கிறேன் .*

*இப்போதுள்ள தேக்க நிலைகளிலிருந்து மீள்வதற்கான இயக்கங்களை சமூகம் உருவாக்கிக்கொள்வதற்கான சாத்தியங்கள் உள்ளனவா? இதுபற்றி தங்கள் சிந்தனை என்ன என்பதை அறிய விழைகிறேன் .*

*பாபுஜி*

*கரூர்*

*அன்புள்ள பாபுஜி,*

*எல்லா மக்கள் இயக்கங்களும் ஒரு குறிப்பிட்ட வரலாற்றுக் காலகட்டத்தில் சில தேவைகளின் பொருட்டு உருவானவை. காலப்போக்கில் பிழைகளையும் சரிவுகளையும் சேர்த்துக்கொள்பவை. திராவிட இயக்கத்தின் வரலாற்றுத்தேவை இந்தியா தன்னாட்சியை அடையும் காலகட்டத்தில் உருவாகி வந்த அதிகாரத்தில் பிராமணரல்லா உயர்சாதியினருக்கான அதிகாரத்தைக் கோரிப்பெறுவது. பின்னர் அது*

பிற்படுத்தப்பட்டோருக்கான அதிகாரத்தை கோருவதற்கான களமாக ஆகியது. அதைப் பெரும்பாலும் சாதித்தும் விட்டது.

அதன் கட்டமைப்பிலுள்ள பிழை அது பிற்படுத்தப்பட்டோர் அரசியலை மட்டும் சார்ந்ததாக இருப்பதும் அதன்பொருட்டு வரலாற்றுத்திரிபுகளையும் மிகையுணர்ச்சிகளையும் காழ்ப்புகளையும் கட்டமைத்துக்கொண்டதே.

அது உருவாக்கிய முதன்மையான வரலாற்றுத்திரிபு என்பது திராவிட இனவாதம். திராவிடமொழிக்குடும்பம் என்ற ஊகத்தை ஒரு இன உருவகம் என மாற்றிக்கொண்டது. இன்று திராவிட இனக்கோட்பாட்டை அது ஏறத்தாழ கைவிட்டுவிட்டது. அதற்கு மாற்றாக தமிழினம் என சொல்லத் தொடங்கியிருக்கிறது. இந்தியா என்னும் பண்பாட்டுவெளியில் இருந்து தமிழ்ப்பண்பாட்டை பிரித்து எதிர்நிலையில் வைக்கும் போலியான அறிவுத்தளம் ஒன்றை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. அதன் நீண்டகால அழிவுத்தன்மையை உணர்ந்தும்கூட அதைச்செய்கிறது. இப்பிழையே முதன்மையாகக் களையப்படவேண்டும். இனவாத, பிரிவினைவாத எண்ணங்களிலிருந்து அது விடுபடவேண்டும். நவீன ஜனநாயகம் என்பது அனைவரையும் ஒருங்கிணைக்கும் நவீன சமூகம் ஒன்றை முன்னால் காண்பது என உணரவேண்டும்.

அதன் விளைவாக தமிழர்வரலாறு, தமிழ்ப்பெருமை என்னும் மிகையுணர்ச்சிகளை உருவாக்கி நிலைநிறுத்துகிறது. அது வரலாற்றையும் பண்பாட்டையும் சமநிலையுடன் பார்க்கமுடியாதவர்களாக நம்மை ஆக்குகிறது. நமது மெய்யான பெருமைகளையே இந்தப் போலிப்பெருமை மறைத்துவிடுகிறது. நாம் கலை, இலக்கியம் ,சிந்தனை அனைத்திலும் தேங்கிநின்றிருக்கச் செய்கிறது. இம்மிகையுணர்ச்சிகள் களையப்படவேண்டும். யதார்த்தமொழியில் பேச ஆரம்பிக்கவேண்டும்

போலிவரலாறு, மிகையுணர்ச்சி இரண்டும் காழ்ப்புகளை உருவாக்குகின்றன. திராவிட அரசியலின் சாரம்சமாக பிராமண வெறுப்பும், வடவர் வெறுப்பும் உள்ளது. ஆழத்தில் தலித் வெறுப்பு. இவ்வெறுப்புகளிலிருந்து அது விடுபட்டு நேர்நிலைப் பார்வைகொண்டதாக ஆகவேண்டும். காழ்ப்புகள் நீண்டகால அளவில் எதிர்விளைவுகளையே உருவாக்கும். காழ்ப்பின்மொழியிலேயே இன்றும் திராவிட இயக்கம் பேசிக்கொண்டிருக்கிறது. அது களையப்படவேண்டும்

காலப்போக்கில் உருவான பிழைகள் தனிநபர் துதி, குடும்ப ஆட்சி, தொண்டர்அரசியல், ஊழல். மேலிருந்து கீழ்வரை திராவிட அரசியல் என்பது தனிநபர்களை மிதமிஞ்சி துதிப்பதும் வாரிசுகளை முன்னிறுத்துவதும்தான். மாபெரும் தொண்டர்படையை உருவாக்கி அனைவருக்கும் ஊதியம் அளித்தாகவேண்டிய நிலை அதை ஊழலில் ஆழ்த்துகிறது. நவீன ஜனநாயகத்திற்கு எதிரானவை இந்த அம்சங்கள். அது செயல்பாட்டாளர்களை முன்னிறுத்தவேண்டும். தொண்டர்களின் பெருக்கு நவீன ஊடகங்கள் மிகுந்துள்ள இந்தக்காலத்திற்குத் தேவையில்லை. ஊழலை முற்றொழிப்பது ஜனநாயகத்தில் இயலாது. ஆனால் இந்த மாபெரும் தொண்டர்படை பல லட்சம்பேர் ஊழல் செய்ய வழிவகுக்கிறது. அதை ஒழிக்கலாம்

ஓர் இயக்கம் அப்படியே நீடிக்கவேண்டும் என்பதில்லை. அது வேரில் இருந்து முளைத்தெழுந்து பிறிதொன்றாகி, தன் சாராம்சங்களில் உள்ள நல்லவற்றை வளர்த்துக்கொண்டு அல்லவற்றை உதறி முன்செல்லலாம். அது நிகழ்ந்தால் தமிழ்நாட்டுக்கு நல்லது

ஜெ

## *15) திராவிட இயக்கம், தலித்தியம்*

*அன்புள்ள ஜெ,*

*சமீபத்தில் ஆர்.எஸ்.பாரதி என்பவர் பேசும்போது தலித்துக்களின் மேம்பாடு என்பது பெரியாரும் கருணாநிதியும் போட்ட பிச்சை என்று பேசியிருந்தா. தொடர்ச்சியாக தலித் இயக்கங்களை திராவிட இயக்கம் அணுகும் முறையில் இருக்கும் இடைநிலைச் சாதி மேட்டிமைப் பார்வையை நீங்கள் சுட்டிக் காட்டிவருகிறீர்கள். அந்த பேச்சு அதை பொட்டில் அறைந்ததுபோல காட்டியது.*

*எஸ்.அறிவழகன்*

*அன்புள்ள அறிவழகன்,*

*ஆர்.எஸ்.பாரதியின் உரை ஓர் உள்ளரங்க உரை. அவர் சரியான நிலையிலும் இல்லை. ஆகவே அது ஒரு வெறுப்புரை அல்ல, இயல்பான திண்ணைப்பேச்சு. ஆனால் அதில்தான் அவர்களுடைய உண்மையான உளநிலை, நம்பிக்கை வெளியே வருகிறது. அந்த உரையின் இரு பகுதிகள் பிராமணர்களைப் பற்றிய உக்கிரமான வெறுப்பு. அது தாழ்வுணர்ச்சியின் வெளிப்பாடு. இன்னொன்று தலித்துக்களைப் பற்றிய இளக்காரம் அருவருப்பு. அது உயர்வுணர்ச்சியின் வெளிப்பாடு. அவ்வியக்கத்தின் சாராம்சமான உளநிலைகள் அவை*

*இப்போதும் ஒன்று சொல்கிறேன், திராவிட இயக்கம் ஓர் அறிவியக்கம், ஒரு சமூகசீர்திருத்த இயக்கம், தமிழ் பொருளியல் –சமூகவியல் வளர்ச்சிக்கு பங்களிப்பாற்றிய இயக்கம் என்பதே என் எண்ணம். அவ்வியக்கம் வரலாற்றின் ஒரு விளைவு. அதன் கொடைகளை நான் மறுக்கப்போவதில்லை.*

*பலமுறை சொன்னதை மீண்டும் சொல்கிறேன்.*

*அ. தங்களுக்கு முன்பே உருவாகி நிலைகொண்டிருந்த தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தின் பண்பாட்டுக் கொடைகளை விரிவான அளவில் மக்கள்மயமாக்கியது திராவிட இயக்கத்தின் முதல் பெரும் சாதனை*

*ஆ.நவீன ஜனநாயக- சமத்துவக் கருத்துக்களை ஒரு பரப்பிய இயக்கத்தின் எல்லைக்குள் நின்றபடி எளிமையான வடிவில் என்றாலும் அடித்தள மக்களிடம் கொண்டுசென்றது திராவிட இயக்கம். அவர்களுக்கு மொழியையும் தன்னம்பிக்கையையும் அளித்தது.*

*இ. இந்து மதத்தின், இந்திய சாதியினரின் மரபுசார்ந்த மூடப்பழக்கம், பழமைவாத நோக்கு ஆகியவற்றை எதிர்த்து எளிமையான அறிவியல்நோக்கை நிலைநாட்ட அதனால் முடிந்தது*

*ஈ. இடைநிலைச் சாதி மக்கள் ஒருங்கிணைந்து அரசதிகாரம் நோக்கி நகர்வதற்கான ஊர்தியாக அமைந்தது, அவர்களின் அதிகாரத்திற்கான பீடமாகத் திகழ்வது. இடைநிலைச் சாதியினரின் வளர்ச்சி ஒட்டுமொத்த தமிழகத்தின் வளர்ச்சியாக ஆகியது*

*இவற்றைக் கருத்தில்கொள்ளும்போதே இன்றைய ஒரு நவீன சிந்தனை அதில் காணும் மூன்று கூறுகளைச் சுட்டிக்காட்ட வேண்டியிருக்கிறது*

*அ. அதன் மூர்க்கமான அல்லது கொச்சையான மரபு எதிர்ப்புத்தன்மை இந்தியாவின் பெருமரபின் நுண்ணிய தளங்கள் பலவற்றை நிராகரிப்பது. இந்தியாவை வரலாறற்றதாகச் சித்தரிக்கும் ஐரோப்பிய நோக்கை கடன் வாங்குவது.*

*ஆ. அதன் எளிமையான நிரூபண அறிவியல் நோக்கு கவித்துவமான, ஆன்மிகமான, தொன்மம்சார்ந்த மெய்யறிதல்களுக்கு பெரும் தடையாக அமைவது*

*இ. அதன் மொட்டையான இந்துமத எதிர்ப்பு தொடக்கம் முதலே மாபெரும் இந்து பாரம்பரியத்தை, அதன் ஆன்மிக- தத்துவ மேன்மைகளை அழிக்க நினைக்கும் மதமாற்ற சக்திகலுக்கு துணைபோவது*

*ஈ. அதன் தொடக்கம் முதலே இருந்துவந்த பிராமணக் காழ்ப்பு நாஸி இனவெறிக்கு நிகரானது. உண்மையில் ஃபாஸிஸ நாஸிஸ கொள்கைகளையும் சொல்லாடல்களையும் அப்படியே கையகப்படுத்திக்கொண்டது. எந்த ஒரு மக்கள்குழுவையும் வெறுப்பால் அடையாளப்படுத்தும் எந்த ஒரு அமைப்பும் முற்போக்கானது அல்ல*

*உ. அதன் உள்ளடக்கமாக மெல்லமெல்ல திரண்டு வந்துள்ள இடைநிலைச் சாதி மேலாதிக்க நோக்கு தலித் பண்பாட்டுக்குமேல் ஆதிக்கம் செலுத்துவது. அவர்களின் வரலாற்றை அழிப்பது, மறைப்பது திரிப்பது. அவர்களை தங்கள் கருணையால் வளர்ந்தவர்கள், தங்களுக்கு நன்றியுடன் இருக்கவேண்டியவர்கள் என்ற கதையை உருவாக்குவது.*

தலித்துக்கள் பற்றிய ஆர்.எஸ்.பாரதியின் கருத்துத்தான் ஈவேரா அவர்களிடமும் இருந்தது.

*1950 ல் நான் சொன்னேன், இது மனுதர்ம சாஸ்த்திரத்தின் மறுபதிப்பு; ஆகவே,இதைக் கொளுத்த வேண்டும்' என்று. இந்த சட்டம் எழுதியவர்களில் 4 பேர் பார்ப்பனர்கள் இன்னும் இருவரில் ஒருவர் அம்பேத்கர்,இன்னொருவர் சாயபு.*

*அம்பேத்கர் கொஞ்சம் நம் உணர்ச்சி உள்ளவர்.அவர் என்னைக் கேட்டார் 'உன்னுடைய மக்களுக்கு என்ன செய்ய வேண்டும்' என்று.நிறைய விவரங்களை கொடுத்தேன் அதையெல்லாம் அவர் பேச ஆரம்பித்தார் உடனே பார்ப்பனர்கள் அவருக்கு விலை கொடுத்துவிட்டார்கள்.*

*அது என்ன விலை என்றால் அவர் தன் மக்களுக்கு 100க்கு 10 இடம் கல்வியில் வசதி,உத்தியோக வசதி கேட்டார்.அவன் '15 ஆக எடுத்துக்கொள்' என்று சொல்லிவிட்டான்.அவனுக்கு தெரியும் 25 இடம் கொடுத்தால் கூட அவர்களில் 3 அல்லது 4 பேர் கூட வரமாட்டார்கள் என்று.பார்ப்பான் எழுதிக் கொடுத்த சட்டத்தில் அவர் கையெழுத்து போட்டுக் கொடுத்துவிட்டார்.மற்றவர்கள் சங்கதியை பற்றி அவர் சிந்திக்கவில்லை.*

*இத்தகைய மோசடி சட்டம் ஒழிக்கப்பட்டே ஆக வேண்டும்.அந்த முயற்சியாக இந்தச் சட்டத்தைத் தீயிலிட்டுப் பொசுக்கப் போகிறோம்*

*--ஈவேரா அவர்களின் சுவாமிமலைச் சொற்பொழிவு- விடுதலை 11.11.1957*

*இந்த வகையான பேச்சுக்களை ஈவேரா அவர்களிடம் நிறைய காணலாம். பத்திபத்தியாக. உடனே அவர் எந்தச்சூழ்நிலையில் எந்த நோக்கில் பேசினார் என்று பார்க்கவேண்டும் என ஆரம்பிப்பார்கள். ஆனால் காந்தி இருபத்தெட்டு வயதில் சொன்ன வரியைக்கொண்டு காந்தியை வரையறை செய்யவும் செய்வார்கள்.*

*இந்த பேச்சில் உள்ள உணர்வுநிலையை கவனியுங்கள். அம்பேத்கர் அன்று ஒரு தேசியத் தலைவர் – உலகம் முழுக்க அறியப்பட்டவர். முறையான பெருங்கல்வி கொண்டவர். சட்டம்- தத்துவம்- சமூகவியல் சார்ந்து மிக ஆழமான ஆய்வுகள் செய்த பேரறிஞர். இந்தியாவின் தத்துவ- சமூகவியல் ஆய்வுகளின் முன்னோடிகளில் ஒருவர்.*

*அவருடன் ஒப்பிட ஈவேரா படிப்பே அற்றவர். எந்த துறையிலும் முறையாக எந்தக் கல்வியும் அவருக்கு இல்லை. தானே கற்றுக்கொள்ளும் முனைப்பும் இருந்ததில்லை. சமயம், தத்துவம், சமூகவியல் தளங்கலிள் அவருக்கு அடிப்படைப் புரிதல்களே இல்லை. அவர் பேசியதெல்லாமே பாமரத்தனமான பேச்சுக்கள்தான். அவருடைய ஆதரவாளர்களேகூட அவர் பாமரர்களின் சிந்தனையாளர் என்று சொல்லித்தான் அவருடைய தவறுகளை முரண்பாடுகளை நியாயப்படுத்துவார்கள்*

*தமிழகத்தின் மிகச்சிறிய வட்டத்துக்கு வெளியே அவருக்கு எந்த ஆதரவுப்புலமும் அன்று இருக்கவில்லை. ஒரு தேசத்தலைவரை நோக்கி ஒரு பஞ்சாயத்து தலைவர் பேசும் பேச்சு இது. கவனியுங்கள் இதிலுள்ள தோரணையை. மனசாட்சி உள்ளவர்கள் யோசிக்கட்டும். இந்தியாவின் மாபெரும் தேசத்தலைவர்களான காந்தியும் நேருவும் அம்பேத்கருடன் முரண்பட்டு விவாதித்துக்கொண்டே இருந்தவர்கள். பேரறிஞர்களான ராம் மனோகர் லோகியாவும் ஈ.எம்.எஸும் அவருடைன் மாறுபட்டு பேசியவர்கள். எவரேனும் ஒரு சொல்லேனும் அம்பேத்கரின் மாபெரும் கல்வியை, நேர்மையை மறுத்து சொன்னதுண்டா? எந்த சந்தர்ப்பத்திலேனும் சற்றேனும் சிறுமைப்படுத்தியது உண்டா?*

ஆனால் அம்பேத்கருக்கு ஒன்றும் தெரியாது, தான் சொல்லிக்கொடுத்தேன் என்கிறார் ஈவேரா. ஆனால் பார்ப்பனர்களிடம் லஞ்சம் வாங்கிக்கொண்டு அம்பேத்கர் சோரம்போனார் என்கிறார். அவருடைய கல்வி,நேர்மை எதுவும் இவருக்கு ஒரு பொருட்டல்ல. இந்த சிறிய ஆளுமைக்கு அந்த மாபெரும் ஆளுமை ஏன் கண்ணுக்குப் படாமலேயே போய்விட்டது? இட ஒதுக்கீட்டின் பயன்கள் என்ன என்று நாம் இன்று அறிவோம், ஆனால் தலித்துக்களுக்கு இட ஒதுக்கீட்டால் பயனே இல்லை, அது வெறும் ஏமாற்று என்கிறார். அதாவது பிற்படுத்தப்பட்டோர் [நம்] ஒதுக்கீடுதான் பயனுள்ளது, அவர்களால் பயன்படுத்திக்கொள்ள முடியும் என்கிறார். இந்த தோரணை எப்படி வந்தது?

அந்த மேட்டிமைத்தனம்தான் 'பிச்சைபோட்டோம்' என்ற ஆர்.எஸ்.பாரதியின் வார்த்தைகளில் வெளிப்படுகிறது. அது எப்போதும் உள்ளே இருக்கும். அதை தனிப்பட்ட முறையில் உணராத ஒரு தலித் கூட இருக்கமாட்டார் – திருமாவளவன் உட்பட. அந்த மேட்டிமைத்தனம்தான் அயோத்திதாசரில் தொடங்கும் ஒட்டுமொத்த தலித் இயக்கத்தையே மறைத்து ஈவேராவிலிருந்து ஆனா ஆவன்னாவை தொடங்குகிறது.

இன்றைய நவீன அறிவியக்கவாதி திராவிட இயக்கம் உருவாக்கும் காழ்ப்புகள், எளிமைப்படுத்தல்கள், வரலாற்றுத்திரிப்புகளில் இருந்து வெளியேறியாக வேண்டும். தன் சாதிப்பற்றால் அதை பேணிநிற்பான் என்றால், வகைவகையான் சப்பைக்கட்டுகளே அவனுக்குப் போதும் என்றால் அவன் சிந்திக்கவே தொடங்கவில்லை. எளிய மதவெறியர்களுக்கும் அவனுக்கும் வேறுபாடில்லை.

ஜெ

## *16) புறக்கணிக்கப்படுகிறார்களா திராவிட இயக்க எழுத்தாளர்கள்?*

*அன்புள்ள ஜெ*

*திராவிட இயக்க எழுத்தாளர்கள் இலக்கியவாதிகளால் தொடர்ந்து புறக்கணிக்கப்பட்டுவருவது ஏன்? இதைப்பற்றி பலர் எழுதியிருக்கிறார்கள். இதற்கு தங்களிடமிருந்து ஒரு சிறந்த பதிலை எதிர்பார்க்கிறேன் [வைரமுத்து தன் சிறுகதைத் தொகுதி வெளியிடப்படுவதை ஒட்டி தி ஹிந்துவில் எழுதிய கட்டுரையை சார்ந்து நடந்த விவாதங்களை வைத்து இந்தக்கேள்வியை கேட்கிறேன்]*

*எஸ். மகாலிங்கம்*

*அன்புள்ள மகாலிங்கம்,*

*இதற்கான பதிலையும் தொடர்ந்து பலமுறை எழுதியிருக்கிறேன். ஒருவேளை இதைப்போன்ற வரலாற்றுத்தகவல்களை இப்படித்தான் திரும்பத்திரும்பச் சொல்லிக்கொண்டிருக்கவேண்டும் போலும். எத்தனை முறை எத்தனை தெளிவாகச் சொன்னாலும் அடிப்படைகளைத் தெரிந்துகொள்ளும் ஆர்வமில்லாதவர்கள் மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டே இருப்பார்கள். சார்புநிலைகள் மட்டுமே கொண்டவர்கள், ஆனால் எதையும் வாசிக்கும் வழக்கமில்லாதவர்கள், அதை நம்பி கூச்சலிட்டுக்கொண்டும் இருப்பார்கள்.*

*தமிழ்ச்சூழலில் இலக்கியத்தில் பல தரப்புகள் செயல்பட்டன. அவை இலக்கியம் என்றால் என்ன என்பதற்கு தங்களுக்கான வரையறைகள் கொண்டிருந்தன. அவற்றின் அடிப்படையில் இலக்கியமரபுகளை வகுத்துக்கொண்டிருந்தன. அவற்றை பொதுவாக நான்காகப் பிரிக்கலாம்.*

*ஒன்று* ***வணிக-கேளிக்கை எழுத்தாளர்கள்****. வெகுஜன எழுத்துமுறை என அதை நாம் சொல்கிறோம். அவர்களுக்கு எழுத்து என்பது மக்களைக் கவர்ந்து அவர்களை*

*வாசிக்கச்செய்யவேண்டும். ஆகவே அவர்களுக்குப் பிடித்தமானவற்றை பிடித்தமான முறையில் சொல்லவேண்டும். மக்களிடமுள்ள புகழே அளவுகோல்*

*இந்த தரப்பு வடுவூர் துரைசாமி அய்யங்கார், வை மு கோதைநாயகி அம்மாள், கல்கி, தேவன், சாண்டில்யன், நா.பார்த்தசாரதி, அகிலன், சுஜாதா, பாலகுமாரன், சிவசங்கரி, வாசந்தி, இந்துமதி என ஒரு வரிசையை உருவாக்கியது. இவர்களை மட்டுமே இலக்கியவாதிகளாக முன்னிறுத்தியது. இவர்கள் இலக்கியவிருதுகள் அனைத்தையும் பெற்றார்கள். பல்கலை கழங்களில் இவர்களின் படைப்புகள் ஆராய்ச்சி செய்யப்பட்டன. ஒரு காலகட்டத்தில் இவ்வெழுத்தாளர்கள் திரைநட்சத்திரங்கள் போல வலம்வந்தனர். அவர்கள் பிற தரப்பினரை பொருட்படுத்தவில்லை. ஏன் அறிந்திருக்கவே இல்லை.*

*இரண்டாவது தரப்பு இங்கிருந்த* **திராவிடஎழுத்தாளர்கள்.** *அன்று மிகவலுவான ஒரு அரசியல் கட்சியாக எழுந்து வந்த வெகுஜன இயக்கத்தின் படைப்பாளிகள் இவர்கள். மூவாலூர் ராமாமிருதத்தம்மையார், சி.என்.அண்ணாத்துரை, ஈ.வே.கி.சம்பத்,மு.கருணாநிதி, எஸ்.எஸ்.தென்னரசு,புலவர் குழந்தை, வேழவேந்தன், முடியரசன், சுரதா என இவர்களுக்கும் ஒரு பட்டியல் இருந்தது.*

*இவர்களும் ஏராளமான பத்திரிகைகளை நடத்தினர். திராவிட இயக்கம் பின்னர் தமிழக ஆட்சியையே கைப்பற்றியது. இவ்வெழுத்தாளர்கள் அனைவரும் பட்டங்களை, பதவிகளைப் பெற்றனர். அனைத்துவகையான அரசுமுறை அங்கீகாரங்களும் கிடைத்தன.மாற்றுத்தரப்பில் முதலில் சொல்லப்பட்ட வணிக எழுத்தாளர்களை மட்டுமே இவர்கள் பொருட்படுத்தினர்.*

*மூன்றாவது தரப்பு* **முற்போக்கு எழுத்தாளர்கள்.** *இவர்களுக்கும் வலுவான கட்சி அமைப்பும் பத்திரிகைகளும் இருந்தன. தொ.மு.சி.ரகுநாதன், கே.முத்தையா, செ.கணேசலிங்கன், டி .செல்வராஜ்,கு.சின்னப்பபாரதி, மேலாண்மைப் பொன்னுச்சாமி, ச.தமிழ்ச்செல்வன் என இவர்களுக்கும் ஒரு பட்டியல் இருந்தது. இடதுசாரிக் கட்சியும் பத்திரிகைகளும் அறிவுஜீவிகளும் இவ்வெழுத்தாளர்களை தொடர்ச்சியாகப்பிரச்சாரம் செய்தன.இவர்கள் தீவிர இலக்கியவாதிகளை மிகமிகக் கடுமையாக நிராகரித்தனர்.*

*நான்காம் தரப்புதான்* **தீவிர இலக்கியவாதிகள்.** *ஓர் அடையாளமாக இச்சொல்லைக் கையாள்வது தமிழ்சூழலின் வழக்கம். புதுமைப்பித்தன், கு.ப.ரா, மௌனி, ந.பிச்சமூர்த்தி, கு.அழகிரிசாமி, லா.ச.ராமாமிருதம்,சுந்தர ராமசாமி, அசோகமித்திரன்,*

*நாஞ்சில்நாடன், வண்ணதாசன் என ஒரு மரபு இவர்களுக்கு உள்ளது. இன்றும் வலுவாக அது நீடிக்கிறது*

*இவர்களுக்கு எந்தவகையான கட்சிப்பின்புலமும் இருக்கவில்லை. எந்த அரசியலமைப்பின் ஆதரவும் இருக்கவில்லை.பத்திரிகைகளின் ஆதரவு பிரமுகர்களின் சிபாரிசு அறவே இல்லை. கல்வித்துறைக்கு இவர்கள் இருப்பதே தெரியாது. பெரும்பாலும் தனிநபர்க்ளாகவே செயல்பட்டனர். ஆர்வமும் அர்ப்பணிப்பும் மட்டுமே இவர்களை செயல்படவைத்தன. எழுத்தின் வழியாக இவர்கள் அடைந்தவை ஏதுமில்லை. பணம், புகழ், அங்கீகாரம் ஏதுமில்லை*

*எழுதுவதற்கு ஊடகங்கள் இல்லாமல் இவர்களே சொந்தச்செலவில் ஆரம்பித்தவைதான் சிற்றிதழ்கள். தமிழ்ச்சிற்றிதழ் இயக்கமே இவர்களை அரைநூற்றாண்டுக்காலம் செயல்படச்செய்தது.அதிகமும் 300 பிரதிகள் வரை அச்சிடப்பட்டு மாதம் ஒருமுறையோ மூன்றுமாதங்களுக்கு ஒருமுறையோ வெளிவரும் சிற்றிதழ்களில் இவர்கள் எழுதினர். இருநூறு பக்கங்கள் கொண்ட ஒரு நூலை வெளியிட ஐந்தாண்டுகள் ஆகும் இவர்களுக்கு. பெரும்பாலும் தங்களுக்குள்ளேயே வாசித்துக்கொண்டார்கள். கடுமையாக தங்களைத்தாங்களே விமர்சனம் செய்துகொண்டார்கள்.*

*இவர்கள்தான் அனைத்துவகையான புதிய இலக்கியப் போக்குகளையும் கற்று இங்கே கொண்டுவந்தனர். மொழியாக்கங்கள் செய்தனர். அரசியல்,சமூகவியல் சிந்தனைகளை விவாதித்தனர்.நவீனக் கலைகளை இலக்கியத்துடன் இணைத்து அறிந்துகொள்ள முயன்றனர். மாறாக மேலே சொன்ன மூன்று தரப்புகளில் வணிகஎழுத்துக்கும் திராவிட இயக்க எழுத்துக்கும் சமகால சிந்தனைகளுடனும், கலைப்போக்குகளுடனும் சம்பந்தமே இருக்கவில்லை.*

*இன்று நீங்கள் திரும்பிப்பார்க்கலாம். தமிழ்ச்சிற்றிதழ் இயக்கம் என்னும் இந்தச் சின்னஞ்சிறிய உலகின் உள்ளேதான் அத்தனை புதியவிஷயங்களும் நிகழ்ந்தன. தமிழில் நவீன ஓவியம் , நவீனத் திரைப்படம், நவீன மேற்கத்திய இசை என அனைத்துமே சென்றகாலங்களில் இந்தச்சிற்றிதழ் வட்டத்திற்குள் மட்டுமே அறிமுகம் செய்யப்பட்டன.*

*சத்யஜித் ராயோ, இங்மார் பர்க்மானோ, பிக்காஸோவோ, குளோட் மோனேவோ, யான்னியோ பெயர் அச்சிடப்படுவதுகூட இந்தச்சிற்றிதழ்களில் மட்டும்தான். அண்டோனியோ கிராம்ஷியோ, மிகயீல் பக்தினோ, ஹரால்ட் ப்ளூமோ பிற*

*இதழ்களுக்கு இன்றும்கூட அறியப்படாதவர்களே. இன்று நீங்கள் பேசிக்கொண்டிருக்கும் ஒவ்வொன்றும் இங்கேதான் முளைவிட்டெழுந்தன.*

*தமிழின் உண்மையான அறிவார்ந்த மரபு என்று சொல்லத்தக்க இந்த வட்டம் அனைத்துவகையான புறக்கணிப்புகளுக்கும் உள்ளாகியது. இன்றும் அது அரசு, ஊடகம் சார்ந்த எந்த அங்கீகாரத்தையும் பெறவில்லை. சமீபத்தில் இறந்த சுரதாவுக்குக்கூட இங்கே சிலை வைக்கப்பட்டுள்ளது. நவீனத் தமிழிலக்கியத்தின் தலைமகனாகிய புதுமைப்பித்தன் பெயரில் ஒரு சாலைகூட இங்கே இல்லை. புறக்கணிப்பு நிகழ்வது எங்கே?*

*காலம் கறாரான ஒரு அளவுகோலையே கொண்டிருக்கிறது. அரைநூற்றாண்டுக்காலம் கடந்தபோது இந்தச்சிற்றிதழ் சார்ந்த இலக்கியவாதிகளும் இலக்கியமரபும் மட்டுமே வாழும்தரப்பாக உள்ளன. மற்றவை வெறும் வரலாற்றுக்குறிப்புகளாக எஞ்சியிருக்கின்றன.*

*ஓர் உதாரணம் சொல்கிறேன். சிற்றிதழ்ச்சூழலில் புதுமைப்பித்தனை சிறுகதை மன்னன் என்று சொல்வது வழக்கம். இது அவருக்கு அவர் இறந்தபோது ஓர் அஞ்சலிக்கட்டுரையில் அளிக்கப்பட்ட பெயர். இப்பெயருக்குப் போட்டியாக வணிகக்கேளிக்கை எழுத்தியக்கத்தால் முன்வைக்கப்பட்டவர் அகிலன்.*

*திராவிட இயக்கத்தினரால் சிறுகதை மன்னன் என்று புகழப்பட்டவர் எஸ்.எஸ்,தென்னரசு. முற்போக்கு முகாம் புதுமைப்பித்தனை நசிவிலக்கியவாதி என்று சொல்லி நிராகரித்துவிட்டு விந்தனை சிறுகதையின் சாதனையாளர் என்றார்கள். அவர்களெல்லாம் எங்கே? இன்று ஒரு நுண்ணுணர்வுள்ள வாசகன் அவர்களை வாசிக்கமுடியுமா?*

*வணிக எழுத்துத் தரப்பால் தமிழ் நாவலின் சாதனையாளர் என்று சொல்லப்பட்டவர் கல்கி. திராவிட இயக்கத்தவர் தமிழின் தலைசிறந்த நாவலாசிரியராக முன்வைத்தது மு.கருணாநிதியை. முற்போக்கினர் செ.கணேசலிங்கனை. அவரது செவ்வானம் தமிழின் முதன்மை நாவல் என்று எவ்வளவு எழுதப்பட்டிருக்கிறது தெரியுமா? அந்நூல்கள் இன்று எப்படிப்பார்க்கப்படுகின்றன?*

*1980 வாக்கில் பாவை சந்திரன் புதுமைப்பித்தனின் மனித யந்திரம் என்னும் கதையை குங்குமத்தில் மறுபிரசுரம் செய்திருந்தார். அதை வாசித்த நினைவுள்ளது. அதில் 'இவர் பெயர் புதுமைப்பித்தன். தமிழில் சிறுகதைகள் எழுதியவர்' என்று அறிமுகம் செய்திருந்தார். அந்த அளவுக்குத்தான் புதுமைப்பித்தன் அன்று பொது வாசகர்களுக்குத்தெரிந்திருந்தார். அன்றைய நட்சத்திரங்கள் சுஜாதா, பாலகுமாரன் போன்றவர்கள்.*

*தொண்ணூறுகளில் நவீன இலக்கியம் சில தனிமனிதர்களின் முயற்சி மூலம் பரவலாக கொண்டுசெல்லப்பட்டது [ ஐராவதம் மகாதேவன், மாலன், வாசந்தி, கோமல் சுவாமிநாதன்] அதன்பின்னரே புதுமைப்பித்தன் மரபு பரவலாக அறியப்பட்டது. இணையம் வந்தது. புத்தகக் கண்காட்சிகள் வந்தன.*

*இன்று இந்த இலக்கிய மரபு பரவலாக அறியப்படுகிறது என்றால் இதன்மீதான அர்ப்பணிப்பினால் மட்டுமே திரும்பத்திரும்ப இதைப்பற்றி பேசி முன்னெடுத்த முன்னோடிகள்தான் காரணம். க.நா.சு,சி.சு.செல்லப்பா,வெங்கட் சாமிநாதன். சுந்தர ராமசாமி, வேதசகாயகுமார் என ஒரு தொடர்ச்சி அதற்கும் உள்ளது.*

*நானும் அந்த மரபைச் சேர்ந்தவனே. இந்த ஒரே ஒரு இணையதளத்தை மட்டும் பாருங்கள். நவீனத்தமிழ் இலக்கிய முன்னோடிகளைப்பற்றி எத்தனை முறை எத்தனை விரிவாக எழுதப்பட்டுள்ளது என தெரியும். கிட்டத்தட்ட 600 கட்டுரைகள் உள்ளன. அச்சில் பல்லாயிரம் பக்கம் அளவுக்கு எழுதியிருக்கிறேன். என் உயிருள்ளளவும் எழுதிக்கொண்டும் இருப்பேன். இதனால் எனக்கு என்ன லாபம்? ஒன்றுமில்லை. இந்த மரபை நிலைநாட்ட நான் விழைகிறேன். இது என் அறிவுலகப்பணி*

*இந்த அளவுக்கு அர்ப்பணிப்புடனும் தீவிரத்துடனும் முன்னர் சொல்லப்பட்ட மூன்று மரபுகளைச்சேர்ந்த எவரைப்பற்றியும் எவராவது எழுதுகிறார்களா? ஏன்? ஏனென்றால் அவை அந்த அளவுக்கு பாதிப்பைச் செலுத்தவில்லை. இல்லை பாதிப்பைச்செலுத்தியிருக்கின்றன என்றால் அப்படிச் சொல்பவர்கள் இதேபோல எழுதி நிலைநாட்டலாமே?*

*ஓர் அரசியல் அலையை தொடங்கிவைத்த சி.என்.அண்ணாத்துரையைப்பற்றிக்கூட இன்று சொல்லும்படி ஏதும் எழுதப்படுவதில்லை. அவர்களுக்கெல்லாம் அரசு இருந்தது, அமைப்புகள் இருந்தன, இதழ்கள் இருந்தன. எங்கள் தரப்புக்கு இருப்பது தீவிரம்,*

அர்ப்பணிப்பு மட்டுமே. அதுவே எங்கள் முன்னோடிகளை வாழச்செய்கிறது. இது அமைப்புகளுக்கு எதிரான அறிவியக்கத்தின் வேகம்.

இன்று இலக்கியத்திற்காகப் போடப்படும் புதுமைப்பித்தன், கு.ப.ரா, மௌனி, ந.பிச்சமூர்த்தி, கு.அழகிரிசாமி, ராமாகிருதம் என நீளும் மரபுவரிசை க.நா.சு- வால் முன்வைக்கப்பட்டது. பல கோணங்களில் அது விவாதிக்கப்பட்டு திருத்தப்பட்டு இன்றும் பெரும்பாலும் வலுவாக நீடிக்கிறது. இதுவே இலக்கியமரபாக அறியப்படுகிறது. காரணம் இதன் தீவிரம். இதையொட்டிச் செயல்பட்ட அறிவியக்கம். இது இன்றும் செல்லுபடியாகக்கூடிய கலைத்தன்மை கொண்டிருப்பது.

அனால் சிற்றிதழ் சார்ந்த இலக்கியமரபு எப்போதும் அதன் அளவுகோல்களை துல்லியமாகவே வைத்துள்ளது. அதற்கு மனிதர்கள் முக்கியமல்ல ,படைப்புகள்தான்.முற்போக்கு முகாமைச்சேர்ந்த கு.சின்னப்பபாரதியின் படைப்பை இலக்கியமென அங்கீகரிக்க க.நா.சுவுக்கு தயக்கமில்லை. ஆனால் க.நா.சு பெயரைச் சொல்லவே அவர்கள் தயங்குவார்கள்.

மற்றமரபுகள் இவ்வியக்கத்தை முற்றிலும் புறக்கணித்தன. இது தன் உண்மைத்தன்மையால் அர்ப்பணிப்பால் செயல்பாட்டால் அறிவுலக வெற்றி அடைந்த ஓர் இயக்கம். மற்ற மரபுகள் இன்று காலாவதியாகிவிடடன. இந்த மரபு வாழ்கிறது .அந்த காலாவதியான மரபுகளைச் சேர்ந்தவர்கள் கிளம்பிவந்து இந்த இலக்கியமரபில் ஏன் தங்களைச் சேர்த்துக்கொள்ளவில்லை, இதெல்லாம் அநீதி என்று கூச்சலிடுகிறார்கள்.

பாருங்கள் வைரமுத்துவை. அவர் தன்னை தமிழ்ச்சிறுகதை மரபின் வளமான தொடர்ச்சியில் தன்னை பொருத்திக்கொள்ள விரும்புகிறார். அவர் அதற்குப்போடும் பட்டியல் வணிக எழுத்துமரபோ, திராவிட இலக்கிய மரபோ, முற்போக்குமரபோ முன்வைத்த பட்டியல் அல்ல. க.நா.சு போட்ட இலக்கியப்பட்டியல். புதுமைப்பித்தனின் நீட்சியாகவே அவர் தன்னை எண்ணுகிறார். அகிலனின் நீட்சியாக அல்ல. எஸ்.எஸ்.தென்னரசுவின் நீட்சியாக அல்ல. விந்தனின் நீட்சியாக அல்ல.

அது இயல்பும்கூட. அவரது ரசனைக்கு அவரால் மேலே சொன்னவர்களை வாசிக்கமுடியாது. புதுமைப்பித்தனையே ரசிக்கமுடியும். ஆனால் அதன்பின்

*இந்தப்பட்டியலில் திராவிட இயக்கத்தவர் புறக்கணிக்கப்படுகிறார்கள் என்று ஒரு பாட்டை எடுத்துவிடுகிறார். அது வெறும் அரசியல் விளையாட்டு.*

*அரசு அங்கீகாரங்களை, ஊடகப்புகழை, கல்வித்துறை ஆதரவைப் பெற்றவர்கள் இந்தச் சின்னவட்டத்தின் அங்கீகாரத்திற்காக துடிப்பதேகூட இதன் வெற்றிதான்.*

*ஜெ*

## *17)* **திராவிட இயக்க இலக்கியம் – ஒரு வினா**

*கி.ரா உடனான சமஸின் அந்தப் பேட்டி, தமிழ் சிற்றிதழ் சார்ந்த எழுத்தாளர்களால் அண்ணாவும், திராவிட இயக்க கருத்தியலும் புறக்கணிக்கப்பட்டதற்கான காரணத்தை பற்றி பேச முயல்கிறதேத் தவிர தமிழ் இலக்கியத்தில் அண்ணாவிற்கான இடத்தைப் பற்றி பேசுவதாக இல்லை. பிறகு ஏன் சமஸ், தமிழ் சிற்றிதழ் சார்ந்த இலக்கியவாதிகளால் அண்ணா புறக்கணிக்கப்பட்டதைப் பற்றி பேச விரும்புகிறார் என்பது தான் இங்கு அடிப்படைக் கேள்விகளில் ஒன்றாக இருக்க முடியும்.*

*தமிழ் சிற்றிதழ் சார்ந்த இலக்கிய மரபும் சரி, திராவிட அரசியல் மரபும் சரி மாற்றத்தை நோக்கிய தீவிரமான லட்சியக் கனவுகளை அடிப்படையாகக் கொண்டவைகள். ஒரு அரசியல் இயக்கமாக திராவிட இயக்கத்திற்கு புறவயமான சமூக மாற்றம் தான் அடிப்படை நோக்கமாக இருக்க முடியும். ஆனால் ஒரு சூழலின் இலக்கியத் தரப்பு, சமூக அரசியல் நிகழ்வுகளை புறந்தள்ளிவிட்டு வெறும் பிரதி சார்ந்து மட்டும் தன் எல்லைகளை வகுத்துக் கொள்ள முடியாது. அரசியல் இயக்கத்திற்கு இலக்கியத் தரப்பு என்பது பிரதானமான ஒன்று அல்ல. ஆனால் இலக்கியத்திற்கு சமூக மாற்றம் என்பது பிரதானமானது மட்டுமல்ல அதன் அடிப்படைக் கடமைகளில் ஒன்றும்கூட. அதன் அடிப்படையில் தான் சமஸின் அந்தக் கேள்வி தமிழ் இலக்கியத்தின் பிரதிநிதியான ஒரு மூத்த இலக்கிய ஆளுமையை நோக்கி வைக்கப்படுகிறது.*

*மட்டுமல்லாமல் அண்ணாவின் காலகட்டம் என்பது வழமையான அரசியல் நிகழ்வுகள் உள்ளடங்கிய ஒரு காலகட்டமாக கடந்து செல்லக்கூடியதும் அன்று. அதன் சாரத்தில் கம்யூனிஸ கருத்தியலுக்கு நிகரான அடர்த்தியை கொண்டது திராவிட இயக்கத்தின் கருத்தியல். ஒரு கருத்தியல் வெகு மக்களால் சுவகரிக்கப்படும் போது அது அதன் நோக்கத்திற்கு மாற்றான விருப்பத்தகாத விளைவுகளையும் ஏற்படுத்தக் கூடும். அந்த இயங்கு முறைகளைத் தான் இலக்கியம் பேச முயல வேண்டும்.*

*அக்காலச் சூழ்நிலையில் தமிழ் எழுத்தாளன் சாமானியன், குரலற்றவன். அவனுடைய அடிப்படை நோக்கமாக பொதுப்பார்வைக்கு மாற்றான ஒரு இலக்கியத் தரப்பினை உருவாக்கக் கூடியதாக மட்டுமே இருக்க முடியுமே தவிர அவன் அப்போது அரசியல் சார்ந்து எதிர்வினையாற்றிக் கொண்டிருக்க முடியாது என்றெல்லாம் சொல்வதற்கில்லை.*

*கடந்த ஐம்பது ஆண்டுகலாமாக தமிழ் இலக்கியச் சூழலில் சமூக அரசியல் என்பது பேசா பொருளாகவே இருந்து வருகிறது. இன்னுமும் தமிழ் இலக்கிய உலகம் ஆண் – பெண் பாலியல் சிக்கலைத் தாண்டி சிந்திக்க மறுக்கிறது.*

*அண்ணா ஏன் இப்போது பேசப்பட வேண்டியவராகிறார் என்பது இங்கு அடுத்த கேள்வி. தற்போதைய இந்தியா அதன் அரசியல் விழுமியங்களில் சீரழிவின் உச்சத்தில் இருக்கிறது. தற்போதைய தமிழக அரசியல் நிலவரமும் அதுவே. சமூக அக்கறை என்பது தற்போதுள்ள எவ்வரசியல் கட்சிகளுக்கும் ஒரு பொருட்டல்ல. இந்நிலையில் இதே தமிழ் நாட்டில் அறைநூற்றண்டிற்கு முன்னால் சமூக மாற்றத்தை அடிப்படையாக கொண்டு ஒரு புரட்சியே நிகழ்ந்தேறியிருக்கிறது.*

*இந்நிலையில் இன்று அண்ணாவை, திராவிட இயக்க கருத்தியலைப் பேசுவது என்பது அவற்றை மட்டும் பேசுவதாக இல்லாமல் அவற்றை முன்னிறுத்தி சமூக அரசியல் மீதான உரையாடலை நிகழ்த்தச் செய்வதாகவே அமையும். தற்போதைய திராவிட கட்சிகளுக்கே திராவிட இயக்க வரலாற்றை மீள் கூற வேண்டியத் தேவை உருவாகியிருக்கிறது. இன்று அண்ணா காலத்து தன்மையிலான சமூக மைய அரசியல் நோக்கினை தற்போதுள்ள ஸ்டாலினிடமோ, அவருடைய அன்புக் குழந்தை உதயநிதியிடமோ தேடுவதற்கில்லை. அது திருமாவளவனிடம் குடி கொண்டுள்ளது.*

*அண்ணாவைப் பற்றி ஒரு நூல் உருவாக்கப்பட்டுக் கொண்டிருப்பதை நான் கேள்வியுற்றபோது அதில் அண்ணா குறித்தான ஜெயகாந்தனின் கட்டுரை இருந்தால் பொருத்தமாக இருக்கும் என்று நினைத்தேன். எதிர்த் தரப்பின் வழியேயும் அண்ணா அறியப்பட வேண்டியவராகிறார்.*

*அன்புள்ள ஜெயமோகன் இவையாவையும் நீங்கள் அறியாதவர் அல்ல. நான் இவற்றை மேற்கூறியதற்கு காரணம் இத்தலைமுறையைச் சார்ந்த ஒருவனாக அண்ணாவையும் திராவிட இயக்கத்தின் கருத்தியல் தரப்பையும் நான் இவ்வாறே உள்வாங்கிக்கொள்கிறேன் என்பதை விளக்குவதற்காகத்தான். சமஸ் கட்டுரையையும் நான் இதனடிப்படையில் தான் புரிந்துகொள்கிறேன். சமஸின் அந்தப் பேட்டியில் நான் பிழையெனக் கருதுவது அதன் தலைப்பைத் தான். அந்த தலைப்பு வாசகனுள் ஒரு திணிப்பை நிகழ்த்துகிறது. திராவிட இயக்கத்தின் மீதான தமிழ் இலக்கிய உலகின்*

*விலக்கத்திற்கு தன் நோக்கிலான வண்ணத்தை பூசுவதாக அமைந்து விடுகிறது. தவிர்த்து சமஸின் தரப்பை விமர்சிப்பதற்கில்லை. தன்னளவிலான அடிப்படை நேர்மையே சமஸை முன்னகர்த்தி செல்கிறது.*

*சமஸின் குரல் ஒரு அறிவுஜீயின் குரலல்ல. அது ஒரு குடிமகனின் தார்மீகக் குரல். அவருடைய எழுத்துக்கள் சூழலின் மீதான விமர்சனத்தை முன்வைத்து விட்டு நகர்ந்து செல்லக் கூடியவைகள் அல்ல. அவைகள் சூழலுடன் உரையாடலை நிகழ்த்த முயல்பவைகள். சமஸ் பத்திரிக்கையாளராக அல்ல, தமிழ் இலக்கியத்தரப்பின் முகமாக அடையாளப்படுத்தப்பட வேண்டியவர். கடந்த இருபது ஆண்டுகளில் தமிழ் இலக்கியம்சார் அறிவுச் சூழலில் நிகழ்ந்த முக்கிய நிகழ்வுகளில் ஒன்று சமஸின் வருகை.*

*சமஸ் பேட்டி குறித்து நீங்கள் எழுதிய கட்டுரையை வாசிக்கும்போது, திராவிட இயக்கத்தின் மீதான உங்களது ஒவ்வாமையும்,தமிழ் தி இந்து மீதான எரிச்சலையும் தான் உணர முடிந்தது. 'தெற்கிலிருந்து ஒரு சூரியன்' நூல் வெளிவர இருந்த சமயமும் நீங்கள் இத்தன்மையிலேயே எதிர்வினையாற்றி இருந்தீர்கள். இரண்டிலும் உங்கள் குரல் நியாயமான மாற்றுத் தரப்பின் குரலாக வெளிப்படவில்லை என்பதே வருத்ததிற்குரிய ஒன்று.*

*அன்புடன்*

*ரியாஸ்*

*அன்புள்ள ரியாஸ்,*

*ஓர் வாசகராக உங்கள் குரலை புரிந்துகொள்கிறேன். ஆனால் தமிழ் நவீன இலக்கியச் செயல்பாட்டாளராக நீங்கள் இதை சொன்னீர்கள் என்றால் எனக்கு மிகப்பெரிய ஏமாற்றமே. இதில் உங்கள் எளிய சார்புநிலைகள் மட்டுமே வெளிப்படுகின்றன. என்னிடம் வெளிப்படுவது திராவிட இயக்க ஒவ்வாமை என நான் நினைக்கவில்லை – அவ்வியக்கத்தின் குறிப்பிடத்தக்க படைப்பாளிகளைப் பற்றி சற்றேனும் படித்து பேசிக்கொண்டிருப்பவன் நான் மட்டுமே.*

*அதன்மேல் கடுமையான விமர்சனம் உண்டு, அவ்வாறு விமர்சனம் கொண்டிருக்க எனக்கு உரிமையும் உண்டு, ஒரு சூழலில் அத்தனைபேரும் ஒன்றை ஆதரித்தாகவேண்டும் என்றில்லை. ஆனால் அதை காழ்ப்பு என நான் நினைக்கவில்லை. அவ்வாறு காழ்ப்பு என முத்திரைகுத்தித்தான் என் எதிர்த்தரப்பை எதிர்கொள்ள அதன் ஆதரவாளர்களால் இயலும் என்றால் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை.*

*சமஸ் மீதோ அவருடைய இதழ்மீதோ காழ்ப்பு எனக்கிருப்பதாகவும் நான் எண்ணவில்லை. அவ்விதழில் எழுதியிருக்கிறேன். அவருடைய தொகுதிக்கு முன்னுரை எழுதியிருக்கிறேன். பிணக்கு ஏதும் இதுவரை நிகழவுமில்லை. பகைமையோ காழ்ப்போ ஏன் வரவேண்டும்?*

*இவ்வண்ணம் தனிப்பட்ட முத்திரை குத்தியபடி வரும் எதிர்வினைகளை முற்றாக தவிர்ப்பதும், அவர்களை கடந்துசெல்வதுமே இதுவரை என் வழி. இந்த மறுமொழி நீங்கள் இப்போதுவரை என் நண்பர் என்பதனால், இளையவாசகர் என்பதனால்.*

*

*முதலில் சமஸ் பற்றி. சமஸின் வினா 'திராவிட இயக்கத்தை சிற்றிதழ்சார் நவீன இலக்கியவாதிகள் புறக்கணித்தார்கள் என நினைக்கிறீர்களா? ஆம் என்றால் ஏன்?'' என்று இருந்து அதற்கு கி.ரா அப்பதிலை சொல்லியிருந்தால் அதுவேறு. சமஸ்ஸின் வினாவிலேயே திராவிட இயக்கத்தை சிற்றிதழ்சார் இலக்கியவாதிகள் புறக்கணித்தனர் என்னும் முடிவும், அதற்கு பிராமணியநோக்கு காரணம் என்னும் முடிவும் உள்ளது.*

*அதற்கு கி.ரா சொல்லும் மறுமொழி திட்டவட்டமானது அல்ல. இருக்கலாம் என்னும் அளவிலேயே உள்ளது. அந்த மறுமொழியிலேயே இரண்டு நிலைபாட்டையும் சொல்கிறார். அந்தக் குழப்பமான மறுமொழியை கி.ராஜநாராயணனின் கொள்கைஅறிவிப்பாக மாற்றி அக்கட்டுரைக்கு தலைப்பு அளிக்கிறார் சமஸ். இது கீழ்மையான இதழியல். மிகமிக எளிய உத்தி. கொஞ்சம் தரமான இதழாளர்கள் இதை செய்யமாட்டார்கள். கடும் எதிர்வினை இங்கிருந்தே தொடங்குகிறது.*

*சமஸ் ஓர் இலக்கியவிமர்சகரோ ஆய்வாளரோ அல்ல. அத்தகுதியை அவர் இன்னமும் நிறுவவில்லை. அவர் இதழாளர். அவருடைய இதழியல்செயல்பாடுகள் மேல் எனக்கு*

நம்பிக்கையும் மதிப்பும் உண்டு. தமிழகம் வெவ்வேறு வகைகளில் சுரண்டப்படுவதைப் பற்றிய அவருடைய கட்டுரைகள் முக்கியமானவை. மேஜையிலமர்ந்து எழுதுபவர் அல்ல.

ஆனால் இதழாளரின் எல்லைகளை அவர் புரிந்துகொள்ளவேண்டும். இதழாளர் அரசியல் ஆய்வாளராக தன்னை எண்ணிக்கொள்வதே கொஞ்சம் மிகை. ஆனால் இதழாளர் முதிர்ந்து, நீண்ட அனுபவத்தின் அடிப்படையில் அவ்வாறு ஆக முடியும். ஆனால் இலக்கியவிமர்சனம், இலக்கிய வரலாறு என்பது முற்றாகவே வேறு. தனக்கு ஊடகம் இருப்பதனால் தன்னால் எல்லாவற்றிலும் கருத்துருவாக்கம் நிகழ்த்த முடியும், அதற்கான உரிமை உண்டு என இதழாளர் நினைப்பாரென்றால் அது கண்டிக்கப்படவேண்டியது.

சமஸ் கி.ராஜநாராயணனிடம் 'பேட்டி' எடுக்கவில்லை. அவர் கி.ராஜநாராயணனை சாக்காகக் கொண்டு தமிழ் நவீன இலக்கிய மரபின்மேல் ஒட்டுமொத்தமாக ஒரு பெரும்பழியை சுமத்துகிறார். அது ஒரு பெரும் திரிபு. அது வெளியாகும் ஊடகம் மிகப்பெரிது. பல்லாயிரம் இளைஞர்களை அது சென்றடையும். தொடக்கநிலையில், இலக்கிய அறிமுகமே இல்லாத வாசகர்களிடம் மிகஎதிர்மறையான உளப்பதிவை உருவாக்கும்.

ஏற்கனவே நவீனத்தமிழிலக்கியம் மீது சூழலால் ஒவ்வாமையும் விலக்கமும் உருவாக்கப்பட்டுள்ளது. இதற்குள் நுழைபவர்களே குறைவு. இத்தகைய பொய்யான முத்திரைகுத்தல்கள் வழியாக அது மேலும் அயன்மைப்படுத்தப்படும். அதை சாதியமுன்முடிவுகளுடன் நோக்கத் தொடங்கும் ஒருவர் அந்தத்தடையைக் கடந்து உள்ளே நுழைவது மிக அரிது.

எனக்கு தமிழ்நவீன இலக்கிய மரபில், சிற்றிதழ்மரபில் நம்பிக்கை உண்டு. இதில் உருவாகிவந்து இங்கே நிலைகொள்பவன் நான். பொய்மொழிகளும் மிகையுணர்ச்சிகளும் இல்லாத சிந்தனைக்கும், கூரிய அளவீடுகளுக்கும், மெய்யான அழகியலுக்கும் இன்றைய தமிழ் அறிவுச்சூழலில் இது ஒன்றே களம் என நான் எண்ணுகிறேன். இதை கூடுமானவரை கொண்டுசெல்ல என் வாழ்க்கையை செலவிட்டுக்கொண்டிருக்கிறேன்.

இந்நிலையில் தகுதியற்ற ஒருவர் ஒரு வகை சதி வழியாக அதை முத்திரைகுத்தி, பெரிய ஊடகத்தின் வாய்ப்பு வழியாக பிரச்சாரம் செய்து இளைய வாசகர்களிடமிருந்து விலக்க

*முயல்வார் என்றால் அது எனக்கு கடும் எதிர்ப்புக்குரிய செயலே. கூரிய விமர்சனம் வழியாக அச்சதியை, அதிலுள்ள உள்ளீடற்றதன்மையை சுட்டிக்காட்டுவதே என் பணி.*

*இந்த விவாதம் வழியாக சமஸ் உருவாக்கும் பொய்த்திரையை இலக்கியவாசகரில் ஒருசாரார் உணரக்கூடும். இதன்வழியாக இப்படி ஒரு மறுப்பும் அதற்கு எழுந்தது என்றாவது அவர்கள் அறியக்கூடும். நான் செய்யமுடிவது அதை மட்டுமே. அதைத்தான் செய்திருக்கிறேன். எந்த இலக்கியவாசகனுக்கும் எளிதில் புரியும்.*

*தமிழ்ச்சூழலில் பொதுவாக எந்த ஊடகவியலாளருக்கும் அவருடைய ஊடகநிறுவனங்களின் அரசியலை, பொருளியல்நலன்களைக் கடந்த அரசியல் நிலைபாடோ செயல்பாடோ கொள்ள உரிமை இல்லை. இதை அறியாதவர்கள் குழந்தைகளாகவே இருக்கக்கூடும். சில ஆண்டுகளுக்கு முன்பு நான் திரு.மு.கருணாநிதி அவர்களின் ஆக்கங்கள் இலக்கியத் தகுதி கொண்டவை அல்ல என எழுதினேன். அப்போது மிகமிகக் கடுமையாக எதிர்வினையாற்றி, என்னை எதிர்த்து கருணாநிதி அவர்களுக்காக வாதிட்டவர் மாலன். அன்று அவர் சன் டிவி ஊழியர்.*

*சமஸின் இந்தச்செயல் அவருடைய தனிப்பட்ட ஆர்வத்தால் முயற்சியால் நிகழ்கிறது என்றால் அதன்பொருள் வேறு. இதற்குப்பின் உள்ள பெருமுதலீடு, தொடர்புகள், வெளியீட்டு வசதி ஆகியவை அந்நிறுவனத்திற்குரியவை. அதற்கு எதிரான கருத்துச்செயல்பாடுகளை கண்காணாமல் ஆக்கிவிடும் ஆற்றல் அதற்குண்டு. அந்த நிறுவனத்தைத் தவிர்த்து இதை ஆராயவே முடியாது. ஆகவே இது கருத்துத் தரப்பு அல்ல, ஒரு மாபெரும் பரப்புப் பிரச்சாரம் மட்டுமே.*

*அதாவது நவீனத்தமிழிலக்கியத்தை ஒட்டுமொத்தமாக இழிவுசெய்து முத்திரைகுத்தி ஒரு மாபெரும் பிரச்சாரம் செய்யப்படுகிறது. அதை மறுத்து அது பிழை, அதன்பின் ஒரு ஊகக்கேள்வியின் மோசடியே உள்ளது என்று மறுப்பு தெரிவிக்கப்படுகிறது. உங்களுக்கு அந்த மறுப்பு காழ்ப்பின் வெளிப்பாடு என தெரிகிறது என்றால் நீங்கள் நின்றிருக்கும் இடம் என்ன? இதற்கு எவர் எதிர்வினையாற்றுகிறார்கள், அவர்களின் மொழித்தரம் என்ன என்று நீங்களே பார்க்கலாம்.*

*சி.என்.அண்ணாதுரையின் அரசியல் பற்றி அல்ல இங்கே பேச்சு, அவருடைய இலக்கிய இடம் பற்றி மட்டுமே. அது ஓர் எழுத்தாளரிடம் கேட்கப்படுகிறது. அண்ணாதுரையின் அரசியலைப்பற்றி எழுதப்பட்ட நூற்றுக்கணக்கான கட்டுரைகளுக்கு நான் இத்தகைய*

எதிர்வினையை ஆற்றியதிலை. நான் எழுதினால் அவருடைய கலாசாரப் பங்களிப்பைப் பற்றி மட்டுமே எழுதுவேன். அரசியலை முழுமையாக ஆராய்ந்து எழுதும் தரவுகள் என்னிடமில்லை. என் துறை அது அல்ல.

ஏன் அந்த எதிர்ப்பு? ஓர் ஊகக்கேள்வி. புதுமைப்பித்தன் நவீனத் தமிழிலக்கியத்தின் தொடக்கம். ஆனால் 'நவீனத்தமிழிலக்கியத்தின் மாபெரும் ஞானசூரியன்! விடிவெள்ளி! புதுமைப்பித்தன்!'' என தலைப்பிட்டு ஒரு மலர் வருமென்றால் அதை நவீன இலக்கியவாதிகள் எப்படி எதிர்கொள்வார்கள்? அப்படியே கிழித்து குப்பைக்கூடைக்குள் செலுத்துவார்கள்.

சுந்தர ராமசாமி என் ஆசிரியர். அவர் பெயரைச் சொல்லாமல் இந்தத் தளம் ஒருவாரத்தை கடப்பதில்லை. ஆனால் அவருடைய பதிப்பக நிறுவனம் அவருக்குப்பின் 'பாரதி, புதுமைப்பித்தன், சுந்தர ராம்சாமி' என ஒரு கருத்தரங்கை நடத்தியபோது கடுமையான கண்டனங்களை நான் எழுதினேன். ஏனென்றால் அமைப்புசார்ந்து அப்படி ஒரு கருத்து நிறுவப்படலாகாது. விமர்சன உரையாடல் வழியாகவே நிறுவப்படவேண்டும்.

புதுமைப்பித்தனையே ஏற்பும் மறுப்புமாகத்தான் க.நா.சு. முதல் நான் வரை சிற்றிதழ்தரப்பில் விமர்சனம் செய்திருக்கிறோம். அதுதான் சிற்றிதழ் மரபு. அந்த மரபிலிருந்துகொண்டு பார்க்கையில் 'தெற்கிலிருந்து ஒரு சூரியன்' 'மாபெரும் தமிழ்க்கனவு' தலைப்புக்கள் ஒவ்வாமையையே அளிக்கும். அந்த நுண்ணுணர்வை உருவாக்கி நிலைநிறுத்தவே அவை செயல்பட்டு வருகின்றன. இன்று அந்நூல்கள் மேல் எளிய விமர்சனம் வந்தால்கூட அவற்றின் ஆதரவாளர் எழுதும் மிகையுணர்ச்சிக் கொந்தளிப்புகளை பாருங்கள். அடிப்படையில் அந்த உளநிலைக்கு எதிரான இயக்கம் சிற்றிதழ் சார்ந்த நவீன இலக்கியம்.

தமிழகத்தில் அனைவரும் கருணாநிதியையும் அண்ணாதுரையையும் 'சூரியநமஸ்காரம்' செய்யவேண்டியதில்லை, அந்த உளநிலைக்கும் அந்த மிகைச்செயற்கைக்கும் எதிரான தரப்பும் இங்கே இருக்கலாம்,அவர்கள் எதிர்வினை ஆற்றலாம்,அது சாதிக் காழ்ப்பு மட்டுமாக இருக்கவேண்டியதில்லை, அது ஓர் அறிவுத்தரப்பாக இங்கே நீடிக்க முடியும் என்றுகூட இந்தக் கும்பலால் நம்ப முடியவில்லை, நீங்கள் அவர்களின் குரலாக பேசுகிறீர்கள்.

இவ்விரு நூல்களும் சி.என்.அண்ணாதுரை மற்றும் மு.கருணாநிதி இருவரின் அரசியலை திறனாய்வுசெய்து மதிப்பிடுவனவாக இருந்தால் எந்தச் சிக்கலும் இல்லை. அவற்றுக்கு எதிர்வினையாற்றி உரையாடலாம். இந்தியச்சூழலில் அவர்களின் இடத்தை நிறுவ முயல்வதுகூட அறிவியக்கச் செயல்பாடே. ஆனால் இவை மாமனிதர்களாக, மாபெரும் அரசியல்தலைவர்களாக, குறைகளே அற்ற சூரியன்களாக அவர்களை முன்னிறுத்துகின்றன.

நான் இன்றைய காந்தி என ஒரு நூல் எழுதியிருக்கிறேன். நீங்கள் நேரம்கிடைத்தால் ஒப்பிட்டுப்பார்க்கலாம். காந்தியின் அனைத்துக்குறைபாடுகளையும் விரித்துப் பேசி அவரை மதிப்பிடும் நூல் அது. சிற்றிதழ்சார்ந்த அறிவியக்கம் உருவாக்கிய மரபு அது. அந்த மரபுக்கு மேலே சொன்ன நூல்கள் ஒவ்வாமையையே உருவாக்கும். அந்த ஒவ்வாமை பதிவாகவும் செய்யும்.

மேலே சொன்ன நூல்கள் சி.என்.அண்ணாதுரை, மு.கருணாநிதி இருவரையும் மேற்கொண்டு நவீன இலக்கியச் சிற்பிகளாகவும் முன்னிறுத்த முயல்கின்றன. அவர்களை ஏற்காதவர்கள் சாதியநோக்கில்தான் அவ்வாறுசெய்கிறார்கள் என முத்திரைகுத்துகின்றன. அதை நிறுவன வல்லமையால் நிறுவுகின்றன.

சிற்றிதழ்சார்ந்த எழுத்தாளர் எவராயினும் அதைத்தான் கண்டித்தாகவேண்டும். அந்த நிறுவனத்தாக்குதல்களில் இருந்து நவீன இலக்கியம் என்னும் இந்தச்சின்னஞ்சிறு அறிவியக்கத்தை காத்தாகவேண்டும். ஆனால் பெரும்பாலானவர்கள் பேசமாட்டார்கள். ஏனென்றால் இங்கே ஆற்றலற்றவர்களை எதிர்த்து நின்று கலகம், அதிகார எதிர்ப்பு எனப் பேசுபவர்களே மிகுதி. மெய்யான அதிகாரத்துடன் உடனடியாக சமரசம் செய்துகொள்வார்கள்.

ஆனால் புதுமைப்பித்தன் சொன்னதுபோல வாழையடி வாழையாக வந்துகொண்டுதான் இருப்பார்கள். அவர்களை நோக்கியே பேசவேண்டியிருக்கிறது. முன்பு சிற்றிதழ்ச்சூழல் எதிர்கொண்டது நிறுவனங்களின் புறக்கணிப்பை. இது நிறுவன எதிர்ப்பை, திரிபை எதிர்கொள்ளவேண்டிய காலம்போலும். நீங்கள் நின்றிருக்க விரும்பும் இடம் தெரிகிறது. உங்களுக்கு அது வழங்கவிருப்பது நிகழட்டும்.

*

*தமிழ் நவீன இலக்கியம் சமூகமாற்றத்தை எழுதவில்லை, ஆகவே திராவிட இயக்கத்தை கண்டுகொள்ளவில்லை, ஆண்பெண் உறவை எழுதியது என்பதெல்லாம் மெய்யான இலக்கியவாசகன் சொல்லும் வரிகள் அல்ல. சமூகவலைத்தளங்களில் எழுதும் வாசிப்பில்லாத நபர்களின் கருத்துக்களின் எதிரொலிகள். அவர்கள் நவீன இலக்கியம் 'சமூக அக்கறை' அற்றது என்ற பொய்யை எழுதிக்கொண்டே இருக்கிறார்கள்.*

*அத்தகைய ஒருவர் நவீன இலக்கியம் நெருக்கடி நிலைபற்றி எழுதவே இல்லை என ஒருமுறை சொன்னார். தமிழில் நவீன இலக்கியத்தில் மட்டும்தான் நெருக்கடிநிலை பற்றிய பரந்துபட்ட நுண்ணிய பதிவுகள் உள்ளன என நான் சான்றுகளுடன் விளக்கி எழுதினேன். இவ்வாறு எழுதிக்கொண்டே இருக்கவேண்டியிருக்கிறது இன்று.*

*உண்மையில் திராவிட இயக்க எழுத்துக்களை மெய்யாகவே வாசிக்கும் என்னைப்போன்ற ஒருவர் அறிந்த ஒன்று உண்டு, அவற்றில்தான் மிகப்பெரும்பாலானவை காமத்தை மட்டுமே பேசியவை. அவற்றிலிருந்து அன்றைய சமூகச்சூழலின் உண்மையை வாசிக்கவே முடியாது. அவை கட்டமைக்கப்பட்ட பொய்யான ஒரு நாடகத்தன்மைகொண்ட சூழலில் தங்கள் கருத்துக்களை பேசியவை. அவற்றின் மிகையழகியலுக்கு அந்த செயற்கை சமூகச்சூழலே உகந்ததாக இருந்தது.*

*மாறாக நவீன இலக்கியச்சூழலிலேயே அழுத்தமான நுட்பமான சமூகமாற்றச் சித்திரம், சமூகத்தின் அகவயச் சித்திரம் உள்ளது. எவரேனும் சென்ற நூறாண்டுக்கால தமிழ்ச்சமூக மாற்றம் பற்றி ஆராயவேண்டும் என்றால் நவீன இலக்கியத்தை மட்டுமே ஆதாரமாகக் கொள்ளமுடியும்.*

*சென்ற நூறாண்டில் பெரிய மாறுதல்கள் நிகழ்ந்த களங்கள் மூன்று. அ. குடும்பம் மற்றும் தனிநபர் உறவுகள். ஆ. அரசியல் மற்றும் சமூகச்சூழல் இ. ஆன்மீகம் மற்றும் மதச்சூழல். இந்த வரிசைப்படியே நவீன இலக்கியம் பேசியிருக்கிறது.*

*ஒப்புநோக்க மிகுதியாகப் பேசப்பட்டது குடும்பம் மற்றும் தனிநபர் உறவுகள். ஆனால் சமூக, அரசியல் சூழலை வலுவாகப் பேசும் படைப்புகள் இங்கே ஏராளமானவை. புதுமைப்பித்தனின் துன்பக்கேணி முதல் செல்லப்பாவின் சுதந்திர தாகம், சுந்தர ராமசாமியின் புளியமரத்தின் கதை, பூமணியின் பிறகு என இந்திய-தமிழ்ச்*

சமூகவரலாற்றின் சித்திரங்கள் என சொல்லத்தக்க ஐம்பது முக்கியமான படைப்புக்களை எவரும் சுட்டிக்காட்டமுடியும். குறைவாகவே ஆன்மிக மாற்றத்தை நவீன இலக்கியம் பேசியிருக்கிறது.

இலக்கியம் எப்போதும் புறவயமான 'ஆவணப்படுத்தல்' மற்றும் 'விவாதித்தல்'களில் ஈடுபடாது. அதற்குரிய மொழிவடிவங்கள் வேறு. இலக்கியம் மானுட அகத்தைப் பேசுவதற்கான மொழிவடிவம். ஆகவே அரசியலையும் சமூகவியலையும்கூட மானுட அகம் எதிர்கொண்ட வகையிலேயே அது பேசியிருக்கும்.

அந்தவகையில் திராவிட இயக்கத்தின் மிகைமொழித்தன்மை, அதன் போலிப்புரட்சிகரம் ஆகியவற்றை அது விமர்சனம் செய்திருக்கிறது. இன்னொரு பக்கம் அது சமூகவியலில் குறிப்பாக சாதியச் சூழலில் உருவாக்கிய மாற்றங்களையும் அங்கீகரித்துள்ளது.

என் கட்டுரையில் நவீன இலக்கியம் சி.என் அண்ணாதுரையையோ திராவிட இயக்கத்தையோ பொருட்படுத்தவில்லை என்பது பொய் என்றும் அவர்களின் அரசியலை கருத்தில்கொண்டிருக்கிறது, அழகியல்சார்ந்து விமர்சன நிராகரிப்பை முன்வைத்தது என்றும் ஆதாரங்களுடன் சொல்லியிருக்கிறேன். ஏனென்றால் அது திராவிட இயக்கத்தின் மிகையழகியலுக்கு எதிரான இயக்கம், அவ்வாறுதான் இருக்கமுடியும். இவர்கள் இன்று உருவாக்கும் போற்றிப்பாடடி பாட்டுக்கு நவீன இலக்கியம் வராது. ஆனால் அதை நீங்கள் கருத்திலேயே கொள்ளாமல் மீண்டும் புறக்கணித்தது நியாயமா என ஆரம்பிக்கிறீர்கள். இதுதான் பெருநிறுவனப் பிரச்சாரத்தின் ஆற்றல்.

வாசித்துப்பாருங்கள். காலப்போக்கில் உங்களுக்கே புரியக்கூடும். எளிய அரசியல்லாப நோக்குக்காக பெருநிறுவனம் ஒன்றால் ஓர் இன்றியமையாத அறிவியக்கம் முத்திரைகுத்தி அழிக்கப்படுவதற்கு துணைநிற்காதீர்கள் என்று மட்டுமே என்னால் கோரமுடியும்.

**ஜெ**

## *18) திராவிட இயக்க இலக்கியம் – சாதனைகளும் மிகைகளும்*

*திராவிட இயக்க எழுத்துக்களை பற்றிய விவாதத்தின் தொடர்ச்சியாகப் பல கடிதங்கள் வந்தன. வழக்கமான வசைகளுக்கு அப்பால் உண்மையிலேயே திராவிட இயக்கத்தின் பங்களிப்பென்ன என்பதை அறியவிரும்பும் வினாக்கள் ஆர்வமூட்டின. அந்த வாசகர்களுக்காக இக்குறிப்பு*

*இன்று திராவிட அரசியல்சார்ந்த சில எழுத்தாளர்களால் ஒரு கருத்துத்தரப்பு உருவாக்கப்படுகிறது. அதாவது, திராவிட இயக்கம் 'எளியமக்களின்' வாழ்க்கையை எழுதியது. அதுவரை நவீன இலக்கியம் என்பது கற்றவர்களுக்கும் மேல்தட்டினருக்கும் உரியதாக இருந்தது. திராவிட இயக்கமே எளியமக்களை, அடித்தள மக்களை இலக்கியத்தில் எழுதிக்காட்டியது. திராவிட இயக்க எழுத்தாளர்களே எழுதவந்த முதல் சாமானியர்கள். அது அன்றிருந்த சாதி, மதம், சமூகமேலாதிக்கம் ஆகியவற்றுக்கு எதிரான கலக இலக்கியமாக இருந்தது. திராவிட இலக்கியத்தின் ஓங்கிய குரல் பிரச்சாரத்தன்மை இதெல்லாம் இந்த இயல்பால் வந்தவை. அவற்றை உயர்மட்டத்தவர்தான் அழகியலில்லாதவை என்கிறார்கள். எளியமக்களை எழுதியவை என்பதனால் அவை கலைப்படைப்புக்களே –- இத்தரப்பு சுழற்றிச் சுழற்றி முன்வைக்கப்படுகிறது. நேரடியாக திராவிட இயக்க எழுத்துக்களை வாசித்த இளைய தலைமுறை வாசகர்கள் சிலரே. வரலாறு அறிந்தவர் அதனினும் சிலர். ஆகவே இவ்வினாக்கள் எழுகின்றன*

### *எளியோரின் இலக்கியமா? எதிர்ப்பிலக்கியமா?*

*திராவிட இயக்க எழுத்துக்களைப் பற்றி எழுதப்படுவன பெரும்பாலும் கட்சி அல்லது சாதிச்சார்புநிலை கொண்ட விதந்தோதுதல்கள் மட்டுமே. ஆய்வுத்தகுதியோ ரசனைநிலைபாடோ அற்றவை. போற்றிப்பாடல்கள் இல்லாமல், பெரியார் பேறறிஞர் முதல் தெற்குச்சூரியன் வரை அடைமொழிகள் இல்லாமல் அவர்களால் சிந்திக்கமுடியாது. விமர்சனரீதியான அணுகுமுறைக்கு முற்றிலும் எதிரானது இந்த அடைமொழிப்பார்வை. நவீன இலக்கியத்தில் எவரும் புதுமைப்பித்தனை சிறுகதை மன்னன் என்று*

சொல்வதில்லை. நவீன இலக்கிய முன்னோடியாக புதுமைப்பித்தனை முன்னிறுத்தும் என் நூல் அவருடைய கலைக்குறைபாடுகளையே பாதிப்பங்கு பேசுகிறது [நவீன இலக்கிய முன்னோடிகள்- நற்றிணை பிரசுரம்] விமர்சனநோக்கோ அடிப்படை வாசிப்போ இல்லாத ஒற்றைவரிகள் என்றே திராவிட இயக்க எழுத்தாளர்களைப் பற்றிய மேலேசொன்ன கருத்துக்களை மதிப்பிட இயலும்.

சி.என்.அண்ணாத்துரை முதல் மு.கருணாநிதி வரை திராவிட இயக்க எழுத்துக்களில் பெண்கள் சித்தரிக்கப்பட்டிருக்கும் விதத்தில், அவர்களின் கண்ணகிXமாதவி என்னும் எதிரீட்டிலிருக்கும் திகைக்கவைக்கும் பழமைவாதமே இருபதாம்நூற்றாண்டுச் சிந்தனையில் தமிழில் முன்வைக்கப்பட்ட ஆகப்பிற்போக்கான கருத்து. நான் அவற்றை ஓரளவு சுட்டி எழுதியிருக்கிறேன். அவர்களின் எழுத்துக்கள் பெரும்பாலும் தாசிகளைச் சுற்றியே அமைந்திருந்தன. ஆனால் தாசிகளை அன்றிருந்த வடுவூர் துரைசாமி அய்யங்கார் முதலியோர் பார்த்த அதே பழைமையான ஒழுக்கவிமர்சன நோக்கிலேயே அணுகினார்கள். அவர்களுக்கு மாறாக கண்ணகி போன்ற கதைமாந்தரை முன்வைத்தனர்.அந்தக் கண்ணகி ஓர் ஆணின் கருத்தியலுக்குக் கட்டுப்பட்டு, காதலுக்கு அடிமைப்பட்டுச் செயல்படுபவளாகவே அவர்களால் காட்டப்பட்டாள்.

திராவிட இயக்க எழுத்தாளர்களின் படைப்புலகில் தலித்துக்கள் சித்தரிக்கப்பட்டிருக்கும் விதம் தந்திரமான மேட்டிமைவாதம்தான். ஒருவாசகன் எழுப்பவேண்டிய எளிமையான கேள்வி, அவர்களின் ஆக்கங்களில் தலித் கதைநாயகனாக வந்ததுண்டா என்பதே. அதுவே பெரிய தொடக்கமாக அமையும். சிற்றிதழ்சார்ந்த இலக்கியத்தில், முற்போக்கு இலக்கியத்தில் தலித் கதைநாயகர்கள் முதன்மை இடம்பெறு அரைநூற்றாண்டுக்குப் பின்னராவது திராவிட இயக்க எழுத்தாளர்களின் ஆக்கங்களில் தலித் வாழ்க்கை வந்ததா என்று மட்டும் பார்த்தால்போதும்.

பெரும்பாலும் திராவிட இயக்க எழுத்தாளர்களின் எழுத்துக்கள் வேளாளர், முதலியார் கதைகள். பிற்படுத்தப்பட்டோரே அரிது. ஏராளமான படைப்புக்கள் பழந்தமிழ்ச்சூழலை மிகையாக்கி, அவற்றின் மறவர்பெருமையை, வேளாளர்பெருமையை தமிழர்ப்பெருமையாக காட்டும் ஆக்கங்கள். சி.என்.அண்ணாத்துரையின் கதைகளில் முதன்மையானதாக பலராலும் சுட்டிக்காட்டப்படும் ‘செவ்வாழை’ என்னும் கதை மலையாளத்தில் சங்ஙம்புழா கிருஷ்ணபிள்ளை எழுதிய ’வாழக்குல’ நீள்கவிதையை பெரும்பாலும் வரிக்குவரி தழுவி மீண்டும் எழுதப்பட்டது. [முன்னரே கா. அப்பாத்துரையால் அக்கவிதை தமிழாக்கம் செய்யப்பட்டது என்றும்

*சி.என்.அண்ணாத்துரை அது தழுவல் என்னும் குறிப்புடன்தான் அதை முதலில் வெளியிட்டார் எனச் சொல்லப்பட்டது.]*

*அடித்தள மக்களின் வாழ்க்கையை திராவிட இயக்கம் எழுதியது என்பதைப்போல அப்பட்டமான பொய் ஏதுமில்லை. அடித்தளமக்களின் வாழ்க்கையை அவர்கள்நோக்கில் எழுதும் மரபு தொடங்கியது புதுமைப்பித்தனிடம். துன்பக்கேணிதான் அதற்கு தொடக்கம். அதன்பின்னர் அடித்தள மக்களின், தலித்துக்களின், அதற்கும் கீழே விளிம்புநிலையில் வாழ்பவர்களின் வாழ்க்கையை எதியவர்கள் முதன்மையாக இடதுசாரி எழுத்தாளர்கள். அதற்கு அடுத்தபடியாக சிற்றிதழ்மரபு சார்ந்த தமிழ் படைப்பாளிகள். திராவிட இயக்கப் படைப்பாளிகள் அல்ல.*

*எளியோரின் குரலை எழுதியவை இவ்விரு இலக்கியப்போக்குகளும் மட்டும்தான். புதுமைப்பித்தன், கு.ப.ராஜகோபாலன், ந.பிச்சமூர்த்தி, கு.அழகிரிசாமி, ஜி.நாகராஜன், ஜெயகாந்தன், கரிச்சான்குஞ்சு, ஆ.மாதவன், பூமணி, ஹெப்ஸிபா ஜேசுதாசன், தோப்பில் முகமதுமீரான், கோணங்கி, சோ.தருமன், மு.சுயம்புலிங்கம், பாரததேவி, ஜோ.டி.குரூஸ் என நீளும் இருபது முதன்மைப்படைப்பாளிகளின் ஆக்கங்களையாவது ஒரு வாசகர் எடுத்துப் பார்க்கலாம்.*

*கே.முத்தையா, டி.செல்வராஜ், மேலாண்மைப் பொன்னுச்சாமி, லட்சுமணப்பெருமாள், பவா செல்லத்துரை, என நீளும் முற்போக்கு இலக்கிய மரபின் படைப்பாளிகளின் எழுத்தையும் வாசிக்கலாம். 1940 களில் இருந்து இவர்கள் எழுதத் தொடங்கியதே தமிழக அடித்தளமக்களின் வாழ்க்கை. அவர்கள் அடித்தளச் சூழலில் இருந்து வந்தவர்களும்கூட. இவ்விரு சாராருக்கும் வெளியே அடித்தள மக்களின், விளிம்புநிலைமக்களின் வாழ்க்கையை இங்கே எவரும் எழுதவில்லை.*

*திராவிட இயக்க எழுத்தை கலக இலக்கியம், அடித்தள இலக்கியம் என்பதும் அப்பட்டமான பொய். அவர்களின் அரசியலை முன்வைப்பதற்கான ஒரு செயற்கைக் களத்தையே அவர்கள் உருவாக்கினர். அதில் அத்தனை கதைமாந்தரும் நாடகத்தன்மை கொண்டவை, உண்மைக்கு அணுக்கமில்லாதவை. சிற்றிதழ்சார்ந்து உருவாகி வந்த நவீனத்தமிழிலக்கியத்துடன் ஒப்பிடுகையில் திராவிட எழுத்துக்கள் மிகமிகப் பழமையான ஒழுக்கவாதநோக்கும். தூய்மை வாதமும் பிற்போக்குத்தன்மையும்*

கொண்டவை. அதற்குக் காரணம் அவர்களின் பழைமைவழிபாடு மற்றும் பொற்காலத்தேடல்.

திராவிட இயக்கம் இங்கிருந்த மரபான அற, ஒழுக்கநெறிகளை எவ்வகையிலும் எதிர்த்தது அல்ல. மாறாக அவற்றை புதியவடிவில் முன்வைத்தது அது. அதை அவர்களின் முன்னோடிகள் எழுதிய பார்வதி பீஏ. வெள்ளிக்கிழமை போன்ற ஆக்கங்களில் வெளிப்படையாகவே காணலாம். ஏனென்றால் அவர்கள் முன்வைத்தது ஒரு தமிழ்பழைமையைத்தான். புதிய உலகை அல்ல.

திராவிட இயக்கத்தவர் எதிர்த்தது இங்கிருந்த பிராமணிய மேலாதிக்கத்தை மட்டுமே. அந்த பிராமணிய தொன்மங்களும் ஆசாரங்களும் ஒழுக்கவியலும் அறவியலும் அவர்களின் மதம் உருவாகி வந்த தொல்பழங்காலத்தில் அடித்தளம் கொண்டவை. ஆகவே அவை பழங்குடித்தன்மை கொண்டவை. அவற்றை பிராமணியச் சிந்தனையாளர்கள் பலவாறாக மழுப்பி, மறுவிளக்கம் கொடுத்து, மறைத்து ஒரு கட்டமைப்பை உருவாக்கியிருந்தனர். அந்தக் கட்டமைப்பைத்தான் திராவிட இயக்கத்தவர் தாக்கி உடைத்தனர்.

அதற்கு அவர்கள் கையிலெடுத்தது ஒப்புநோக்க சற்று காலத்தால் பிந்தையதும் மேம்பட்ட செவ்வியல்பின்னணி கொண்டதுமான பழந்தமிழ்ப் பண்பாட்டின் தொன்மம், ஆசாரம், ஒழுக்கம், அறம் ஆகியவற்றைத்தான். பிராமணர்கள் முன்வைத்த புராணங்கள், தொன்மங்களை அன்றுமுதல் இன்றுவரை எந்தக்கோணத்தில் திராவிட இயக்கம் எதிர்கொண்டது என்று நோக்கும் ஓர் ஆய்வாளர் இதை தெளிவாகக் காணமுடியும். மிகநேரடியான ஒழுக்கநோக்குதான் அது. மிகவும் பழைமைவாத அணுகுமுறை கொண்டது. இன்றைய பெண்நிலைவாதப் பார்வைக்கு அருவருப்பை ஊட்டுவது.

உதாரணமாக குந்தியை, பாஞ்சாலியை திராவிட இயக்கம் எப்படி முத்திரைகுத்தியது என்று நோக்கலாம். அவர்களை 'தேவடியாள்'களாகவே அவர்கள் முத்திரைகுத்தினர். ராவணனால் கவரப்பட்ட சீதையே 'கற்பிழந்தவள்' என்றனர். கண்ணகி சீதை ஒப்பீடு என்பது அன்றைய திராவிட இயக்கத்தின் முக்கியமான பேசுபொருள். பிராமணர்களின்

*புராணங்களில் உள்ள ‘ஆபாசத்தை’ சுட்டிக்காட்டுவதே அவர்களின் வழி. ஆபாசம் என்னும் கருத்தே ஒழுக்கம், தூய்மை என்னும் இரு அடிப்படைகளில் அமைந்தது. குந்தி, பாஞ்சாலி போன்ற தொன்மங்கள் மானுடச் சமூகநெறிகள் உருவாகிவந்த தொடக்க காலத்தைச் சேர்ந்தவை, அவற்றை ஆபாசமாக பார்ப்பது விக்டோரிய ஒழுக்கவியல் என்பதையெல்லாம் புரிந்துகொள்பவர்கள் அல்ல திராவிட இயக்கத்தவர்.*

*அதாவது திராவிட இயக்கத்தவர் எழுதியது ‘கலகம்’ அல்ல. அது மரபின் தொன்மையான ஒரு பகுதியை சற்றே புதிய இன்னொரு பகுதியைக்கொண்டு எதிர்ப்பதே. இரண்டுமே இரண்டுவகை மரபுவாதங்கள், பழைமைநோக்குகள்*

*மெய்யான கலகம் நிகழ்ந்தது சிற்றிதழ்ச்சூழலில்தான். மேலே குறிப்பிட்ட திராவிட இயக்க எழுத்துக்களுடன் எம்.வி.வெங்கட்ராமின் நித்யகன்னியை ஒப்பிட்டுப்பார்க்கலாம். கற்பு, தூய்மை, புனிதம் என நிறுவப்பட்ட அனைத்தையும் மீறிச்செல்லும் மெய்யான படைப்புக்கலகம் அது. அந்தக் கலகம் தொடங்கியது புதுமைப்பித்தனின் சாபவிமோசனம், அகலிகை போன்ற ஆக்கங்கள் வழியாக*

*திராவிட இயக்கத்தவர் பாலியல்தொழிலாளர் குறித்து எழுதியதையும் ஜி.நாகராஜன் எழுதியதையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம். பசித்தமானுடம் போன்ற ஒன்றை திராவிட இயக்கத்தவர் எழுதக்கூடுமா என எண்ணிப்பார்க்கலாம். ஆ.மாதவனின் சாலைத்தெருவின் வாழ்க்கையின் முழுமையான ஒழுக்கமின்மையின் உலகை ஒருமுறை நோக்கலாம். தன் சாதிய- சமூகப் பின்னணியின் அனைத்து கட்டுப்பாடுகளையும் மீறிச்சென்று எழுதிய தி.ஜானகிராமனின் அம்மாவந்தாள் போன்ற ஒரு நாவலை எந்தத் திராவிட இயக்க எழுத்தாளராவது எழுதமுடியுமா, எவரேனும் தங்கள் சொந்தச் சாதியின்மேல் சிறு விமர்சனத்தையாவது முன்வைத்திருக்கிறார்களா என்றுஆராயலாம். கலகம் என்றால் என்ன என்றுபுரியும்.*

*என்றாவது இலக்கிய ஆய்வாளர்கள் இவற்றை மேலும் விரிவாக எழுதக்கூடும். நான் அவ்வப்போது எழுதியிருக்கிறேன், ஆனால் நவீனத்தமிழிலக்கிய மேதைகளைப் பற்றியே இங்கே பெரிதாக எழுதப்படவில்லை என்னும்போது இவர்களை ஆராய்வது மிகைப்பணி என்று படுகிறது*

**பண்பாட்டுப் பங்களிப்பு**

*திராவிட இயக்கத்தவரின் அரசியல் பங்களிப்பை இங்கே பேசவில்லை. அவர்கள் செயல்பட்ட தளம் பண்பாட்டுஅரசியல் என்பதனால் அவர்களின் அரசியலும் பண்பாடும் ஒன்றோடொன்று பின்னிப்பிணைந்தவை. ஆகவே அவர்களில் நேரடியாக அரசியலை எழுதிய குத்தூசி குருசாமி போன்றவர்களை தவிர்க்கிறேன். ஈ.வே.ரா அவர்களை அரசியல்விமர்சகராகவே கருத்தில்கொள்கிறேன்.*

*திராவிட இயக்கத்தவரின் பண்பாட்டுப் பார்வையை வடிவமைத்த நான்கு முன்னோடிகள்* ***மு.சி.பூர்ணலிங்கம் பிள்ளை****,* ***இ.மு.சுப்ரமணிய பிள்ளை*** *,* ***கா.அப்பாத்துரை*** *மற்றும்* **தேவநேயப் பாவாணர்***. இவர்கள்தான் தமிழ் மரபிலக்கியத்திலிருந்து மதத்தை அகற்றி ஒரு பொதுத்தமிழ் மரபை கட்டமைத்தவர்கள். தமிழ்ப்பெருமித வரலாற்றை உருவாக்கியவர்கள். தங்கள் முன்னோடிகளாக மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை போன்ற சைவ அறிஞர்களை கொண்டிருந்தார்கள். இவ்வரிசையில் சேராத, ஆனால் குறிப்பிடத்தக்க ஒருவர்* **கைவல்யம்***. [இவர் பெயர்தான் தேவதேவனுக்கு அவருடைய தந்தையாரால் போடப்பட்டது] அவர் தமிழ்ச்சித்தர் மரபுக்கும் திராவிட இயக்கத்துக்குமான ஒரு தொடர்பை உருவாக்கியவர்.*

*அடுத்த கட்ட அறிஞர்களில்* ***சி.இலக்குவனார், சாமி சிதம்பரனார், ந.சஞ்சீவி*** **ஆ***கியோரை குறிப்பிடவேண்டும். முன்னோடிகள் உருவாக்கிய ஒரு கருத்தியல்தரப்பை வளர்த்தெடுத்தவர்கள் இவர்கள். இவர்களனைவருமே விரிவான மரபிலக்கிய விமர்சனங்களும் விளக்கங்களும் எழுதியிருக்கிறார்கள். கவிதைகளும் எழுதியிருக்கிறார்கள். இவர்களின் பங்களிப்பு கருத்தியலை உருவாக்கியவர்கள் என்றவகையிலேயே. இறுதியாகச் சுட்டிக்காட்டப்படவேண்டியவர்* **பெருஞ்சித்திரனார்***. அவருடைய தமிழ்ப்புலமை பழையபாணியிலானது எனினும் தனித்தமிழியக்கத்தின் இறுதி ஆளுமை அவரே.*

*திராவிட இயக்க எழுத்தாளர்களின் பங்களிப்பு என்ன? அணிமொழி [ Rhetoric] என ஒன்று எந்தத் தொன்மையான மொழியிலும் உருவாகி வந்திருக்கும். அது பழைய கற்பனாவாத*

இலக்கியத்தின் ஒருபகுதியாக இருக்கும்.தமிழ் வளமான அணிமொழித் தொடர்கள் கொண்ட தொல்மொழி. அதை சைவ எழுச்சியில் உருவாகிவந்த மேடைப்பேச்சாளர்கள் நவீனச் சூழலுக்குக் கொண்டுவந்தனர். அந்த மரபை பரப்பியல்தளத்திற்குக் கொண்டுசென்றனர் திராவிட இயக்கத்தவர். அதுவே அவர்களின் முதன்மைப் பங்களிப்பு.

இங்கிருந்த எளியமனிதர்களைப் பொறுத்தவரை அதுவரை அவர்கள் பேச்சுத்தமிழை மட்டுமே அறிந்திருந்தனர். பரவலாக இருந்த தெருக்கூத்து போன்ற கலைவடிவங்கள்கூட பேச்சுமொழியையே கையாண்டன. தூயதமிழ் கற்றோரின் செல்வமாகவே இருந்தது. ஆகவே தமிழின் எழிலும் தொன்மையும் பெருவாரியான தமிழர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. சைவ-வைணவ மதப்பேருரைகளின் தமிழ்கூட சிறிய வட்டத்திற்குள் புழங்கியது.

திராவிட இயக்கம் தன் அணிமொழியினூடாக தமிழின் அழகை விரிவாக அனைத்து மக்களிடமும் கொண்டுசென்றது. பேச்சுமொழிக்கு அப்பால் இருந்த தமிழின் பெருமைமிக்க மரபை, இலக்கியவிரிவை அது தமிழ்மக்கள் அறியச்செய்தது. அதற்கு ஐம்பதாண்டுகளுக்கு முன்னரே தமிழின் மறுமலர்ச்சி உருவாகியிருந்தது. திராவிட இயக்கம் அதை மக்கள்மயமாக்கியது. தமிழ்ப்பற்று தமிழ்ப்பெருமிதம் என்பது ஒரு பொதுவான உணர்வாக ஆகியது அவர்களால்தான்.

அத்துடன் ஒரு மக்கள்த்திரளுக்கு சீர்மொழியை அளிப்பதென்பது ஒரு பெரும் பண்பாட்டுப் பணி. அதை தமிழியக்கம் தொடங்கிவைத்தது, அதைப் பரவலாக்கியது திராவிட இயக்கம். வட்டாரவழக்கு பெரும் பண்பாட்டு மரபு கொண்டது, ஆழமானது. ஆனாலும் அது மக்களை வட்டாரங்களாகப் பிரிக்கிறது. எல்லைகடந்து அனைவரையும் ஒருங்குதிரட்டுவதில்லை. சீர்மொழி எளிய மக்களைச் சென்றடைகையில் மிகப்பெரிய ஆற்றலை அவர்கள் அடைகிறார்கள். மையப்பெரும்போக்கில் அவர்கள் இணைகிறார்கள்.

இங்கே மதம் சீர்மொழியில் அமைந்திருந்தது. சீர்மொழி அறிந்தவர்கள் அதன் வழியாக மத அதிகாரத்தைக் கையாண்டார்கள். மக்களாட்சியின் அதிகார அமைப்புகள்கூட சீர்மொழியிலேயே அமைந்திருக்கும். சீர்மொழி என்பதே தன்னளவில் ஓர் அதிகாரம். சீர்மொழியை மக்கள்மயமாக்கியதன் வழியாக திராவிட இயக்கம் தமிழகத்தின்

*அடித்தளமக்களிடையே மக்களாட்சியின் அதிகாரத்தைப் பரவலாக்கியது. மத அதிகாரத்தை நோக்கி அவர்கள் செல்லவைத்தது.*

*அடித்தளமக்கள் எத்தனை ஆர்வத்துடன் ஆவேசத்துடன் சீர்மொழி நோக்கி வருகிறார்கள், அது அவர்களை எப்படி பெருமிதமும் தன்னம்பிக்கையும் கொண்டவர்களாக ஆக்குகிறது என்பதை இன்றும் காணலாம். திராவிட இயக்கம் உருவான ஐம்பதாண்டுகளில்தான் தமிழகத்து நாட்டார்த்தெய்வங்கள் கூட சீர்மொழியில் புகழ்மொழிகளைச் சூடிக்கொள்ளலாயின.ஒரு திராவிட இயக்கமேடையில் 'தலைவர்களே பொதுமக்களே' என பேசத் தொடங்கும் அடித்தளத்து இளைஞர் ஒருவர் பல்லாயிரமாண்டுகளாக மொழிக்குள் சிறைப்பட்டிருந்த ஒரு தரப்பிலிருந்து சிறகுமுளைத்து எழுந்தவர். அதுவே திராவிட இயக்கத்தின் முதன்மைப் பண்பாட்டுப் பெருஞ்சாதனை. அதன்பொருட்டு சி.என்.அண்ணாத்துரை அவர்களுக்குத் தமிழகம் கடன்பட்டுள்ளது.*

*திராவிட இயக்கம் உருவாகிவந்த காலகட்டம் இந்தியாவில் அச்சு,காட்சி ஊடகங்கள் வல்லமை அடைந்து வந்த வரலாற்றுமுனை. பொதுக்கூட்டம் என்னும் தொடர்புவடிவம் எழுச்சிகொண்ட தருணம். அவர்கள் அதைப் பயன்படுத்திக்கொண்டனர். தமிழக மக்களில் ஒருபகுதியினருக்கு தமிழ் தாய்மொழி அல்ல. புழக்கத்தேவைக்கு அப்பால் அவர்களுக்குத் தமிழ் தெரியாது. திராவிட இயக்கம் உருவாக்கிய தமிழுணர்வு அவர்கள் அனைவரையும் தமிழ்நோக்கி ஈர்த்தது. தமிழ் தமிழகத்தை இணைக்கும் பொதுவுணர்வாக ஆகியது.*

*ஏற்கனவே நிகழ்ந்திருந்த தமிழியக்கத்தின் மூன்று கிளைகளையும் மக்கள்வயமாக்கினார்கள் திராவிட இயக்கத்தவர். தனித்தமிழ் இயக்கம், தமிழிசை இயக்கம், தமிழ்ப்பதிப்பியக்கம் ஆகியவற்றை மேலும் விரிவடையச்செய்தனர். தமிழியக்கத்தின் ஆக்கபூர்வமான பாதிப்பு திராவிட இயக்கம் இல்லையேல் இத்தனை விரிவானதாக இருந்திருக்காது. தமிழிசை இயக்கம் மெல்லத் தேய்வடைந்தாலும் திராவிட இயக்கத்தால் தனித்தமிழியக்கம் மேம்பட்டது. தமிழ்ப்பதிப்பியக்கம் திராவிட இயக்கத்தின் பங்களிப்பால் குவியம் கொண்டு திருக்குறள், சிலப்பதிகாரம், சங்க இலக்கியம் மீதான ஒரு கூட்டுவாசிப்பை உருவாக்கியது.*

*இன்று நான் தூயதமிழில் எழுதும் ஓர் எழுத்தாளன். தமிழில் எழுதுபவர்களிலேயே என்னுடைய நடையே தூயதமிழ்நடை – குறிப்பாக கொற்றவை, வெண்முரசு போன்றவை. என்னுடன் ஒப்பிடுகையில் சி.என்.அண்ணாத்துரையும் மு.கருணாநிதியும் மிகமிக சம்ஸ்கிருதக் கலப்பு மிக்க நடையில் எழுதியவர்கள். ஆனால் தூயதமிழில் எழுதவேண்டும் என்னும் விழைவு, அனைத்திற்கும் தமிழ்க்கலைச்சொற்களை உருவாக்கவேண்டும் என்னும் துடிப்பு நவீனத்தமிழிலக்கியச் சூழலில் உருவானதே திராவிட இயக்கத்தின் செல்வாக்கால்தான். எழுபதுகளுக்குப் பின்னர் உருவான அலை அது. நான் அதன் மூன்றாம்தலைமுறை. அதன்பொருட்டு தனித்தமிழ் இயக்க முன்னோடிகளுக்குக் கடன்பட்டிருக்கிறேன். அதைப் பரவலாக்கிய சி.என்.அண்ணாத்துரை அவர்களுக்கும்.*

*இந்தப் பண்பாட்டுப் பங்களிப்புகளைக் கருத்தில்கொண்டே நான் திராவிட இயக்கம் பற்றிப் பேசுகிறேன். அது முதன்மையாகப் பரப்பியக்கம். ஆகவே அது சிந்தனைகளை எளிமைப்படுத்தி ஒற்றைவரிக்கூச்சல்களாக ஆக்கும். அனைத்து நுட்பங்களையும் அழிக்கும். திராவிட இயக்கத்தில் இருந்த ஆழ்ந்த ஆய்வுப்புலம் இல்லாத எளிய வரலாற்றுப் பார்வைகள், பண்பாட்டுத்தளத்தில் அவர்கள் உருவாக்கிய எதிரீடுகள் அறிவார்ந்த பெறுமதி அற்றவை. அழிவுப்போக்கு கொண்டவையும்கூட. உதாரணமாக, தமிழ்ப்பண்பாட்டின் கலைவெற்றிகளான நம் ஆலயங்களை, சிற்பங்களைப் பற்றிய அதன் பார்வையைச் சொல்லலாம். தமிழ்ப் பண்பாட்டின் வெற்றியாகிய பக்திஇயக்கம் பற்றிய அதன் வரலாற்றுணர்வு இல்லாத சிறுமைப்படுத்தும் நோக்கைச் சுட்டிக்காட்டலாம்*

*திராவிட இயக்கத்தின் மிகையுணர்ச்சியும் செயற்கைநடையும் நவீன இலக்கியத்திற்கு நேர் எதிரானவை. அதன் தனிமனித வழிபாட்டு நோக்கு அறிவியக்கச் செயல்பாடுகளுக்கு மாறானது. ஆகவே நவீன இலக்கியவாதியாக அவ்வியக்கத்தை நான் நிராகரிக்கிறேன். ஆனால் எப்போதும் அதை சீரார்ந்த ஏற்பு மறுப்புகளுடன் தர்க்கபூர்வமாகவே அணுகுகிறேன். அதிலுள்ள ஒரு கலைவெற்றியைக்கூட கருத்தில்கொள்ளாது தவறவிடுவதில்லை*

**இலக்கியப் பங்களிப்பு**

*படைப்புசார்ந்து திராவிட இயக்க எழுத்து கலைவெற்றியை அடைவது அவர்களின் அடிப்படை இயல்புகளான பழந்தமிழ்வாழ்க்கை பற்றிய கனவு முன்வைக்கப்படுகையில், அதற்குரிய அணிமொழி சரியாக இணைந்துகொள்கையில் மட்டுமே. இவ்வியல்பு உரைநடைக்கு ஒத்துப்போவது அல்ல. ஆகவே புனைகதை, புதுக்கவிதை இரண்டிலும் சொல்லும்படியான பங்களிப்பு ஏதும் திராவிட இயக்கத்தில் செயல்பட்ட படைப்பாளிகளிடமிருந்து வரவில்லை. விலக்காகச் சொல்லத்தக்கது* ***எஸ்.எஸ்.தென்னரசு*** *அவர்களின் படைப்புலகு. அவருடைய* ***கோபுரகலசம்*** *ஒரு குறிப்பிடத்தக்க படைப்பு. சேதுநாட்டுச் செல்லக்கிளி மற்றும் சில சிறுகதைகளையும் சுட்டிக்காட்டலாம்.*

***மு.கருணாநிதி*** *அவர்களின் வெள்ளிக்கிழமை போன்ற சமூகப்படைப்புக்களில் அந்த மொழி பொருந்தவில்லை. ஆனால்* ***ரோமாபுரிப்பாண்டியன்*** *அந்த பழந்தமிழ்க் கனவை உருவாக்க முயலும் ஆக்கம். ஆனால் தொடர்கதையாக வந்து, சமகால அரசியலை உள்ளிழுத்துக்கொண்டமையால் வடிவ ஒருமையே இலலாத ஆக்கமாக நின்றுவிட்டது அது. பொன்னர்சங்கர் போன்ற நாட்டார்ப்புலம் கொண்ட ஆக்கங்களில் அந்த அணிமொழி பொருந்தவில்லை.* ***சி.என் அண்ணாத்துரை*** *அவர்களின் பார்வதி பீ.ஏ போன்ற படைப்புக்கள் புனைவுத்தன்மைகூட அற்றவை. மொழியும் அவருடைய கட்டுரைகளில் உள்ள அளவுக்குக் கூட அணிநடை கொண்டது அல்ல.*

*திராவிட இயக்க அணுக்கம் இல்லாதவர், அவ்வரசியலை எழுதாதவர் என்றாலும்* ***மு.வரதராசனா****ரை அழகியல்சார்ந்து திராவிட இயக்கத்தவர் என்று வரையறைசெய்வதே என் வழக்கம். அவருடைய நாவல்களாகிய* ***கள்ளோ காவியமோ, கரித்துண்டு*** *ஆகியவை திராவிட இயக்க எழுத்தின் சிறந்த மாதிரிகளாகக் கொள்ளலாம். மு.வரதராசனார் அணிமொழியை கைக்கொள்ளவில்லை. சீர்மொழியை புனைவுக்குப் பயன்படுத்தினார். திராவிட இயக்கம் முன்வைத்த அரசியலைப் பேசவில்லை, அவர்கள் வலியுறுத்திய தமிழ்ப்பழைமைசார்ந்த அறத்தையும் ஒழுக்கத்தையும் முன்வைத்தார். அவை சீரான வாசிப்புத்தன்மை கொண்டவை. ஒருவகையான அறப்பிரச்சார நூல்கள்.*

*நாடகங்களில் அணிமொழிக்கு ஓர் இடமுண்டு. திராவிட இயக்கத்தினரின் நாடகங்களில் சி.என்.அண்ணாத்துரையின்* ***சிவாஜி கண்ட இந்துராஜ்யம்*** *அந்த நடை வெளிப்பட்ட*

படைப்பு. மு.கருணாநிதி அவர்களின் அணிநடை வெளிப்பட்டவை பராசக்தி, மந்திரிகுமாரி போன்ற திரைப்படங்களுக்கு எழுதப்பட்ட உரையாடல்கள்தான். அவற்றின் மக்கள்செல்வாக்கு ஒருபக்கம் இருந்தாலும் அவை நவீன இலக்கியத்திற்குரிய இயல்புகள் கொண்டவை அல்ல. பரப்பிலக்கியத்தின் வகைமைக்குள் மட்டுமே வருபவை. பிரச்சாரத் தன்மை கொண்டவை. அவர்களும் அதற்குமேல் இலக்கு கொண்டிருக்கவில்லை. திராவிட இயக்கம் உருவாக்கிய நாடகங்களில் தலையாயது **புலவர் ஆ.பழனி** அவர்கள் எழுதிய **அனிச்ச அடி** என நான் எண்ணுகிறேன்.

திராவிட இயக்க எழுத்தாளர்களில் **சாலை இளந்திரையன்** அவர்களின் புனைகதைகள் குறிப்பிடத்தக்கவை அல்ல. ஆனால் அவர் தொடர்ச்சியாக இலக்கியத் திறனாய்வுக் கருத்துக்களை முன்வைத்திருக்கிறார். நவீன இலக்கியம் சார்ந்தும் கூரிய கருத்துக்களை முன்வைத்திருக்கிறார். மரபிலக்கியம் சார்ந்து **புலவர் ஆ.பழனி** உருவாக்கிய விமர்சன அணுகுமுறை பின்னாளில் முன்னெடுக்கப்படவில்லை. ஆனால் அவரையும் திராவிட இயக்க இலக்கியக் கோட்பாட்டாளர்களில் முதன்மையானவராகச் சுட்டவேண்டும். மு.வரதராசனாரின் சங்க இலக்கிய ஆய்வுகளையும் சற்று விரிந்த எல்லைக்குள் திராவிட இயக்க அணுகுமுறைகொண்டவை என வகுக்கலாம்.

இந்த மரபில் திராவிட இயக்கத்தவர் சொல்லமறந்துவிடுவார்கள் என்றாலும் நான் ஒருவரை முதன்மையாகச் சொல்வேன். **விந்தன்**. அவர் சி.என்.அண்ணாத்துரையை ஏற்காமல் ஈ.வே.ரா அவர்களுக்கு அணுக்கமானவராக இருந்தவர் என்பதனால் தி.மு.கவினரால் பெரிதும் கண்டுகொள்ளப்படவில்லை.. திராவிட இயக்கம் உருவாக்கிய அரசியலெதிர்ப்பின் கூரிய பகடிக்குரல் விந்தனுடையதுதான். திராவிட இயக்கத்திலிருந்துகொண்டு புதுமைப்பித்தனின் நடை, அழகியலை உள்வாங்கிக்கொண்டவர். சொல்லப்போனால் திராவிட இயக்க எழுத்தாளர்களில் இன்றைய வாசிப்பிலும் மிளிரும் எழுத்து அவருடையது மட்டுமே. அவருடைய **பாலும்பாவையும், பசிகோவிந்தம்** என்பவை அவர் செயல்பட்ட இருவகை எழுத்துக்களின் சிறந்த மாதிரிகள். சென்ற ஆண்டு விந்தனின் நூற்றாண்டு. ஒரு தனிவாசகர் அவருடைய நூல்களை மறுபதிப்பாகக் கொண்டுவந்தார். அவரை நினைவுகூர்ந்து நான் எழுதியிருந்தேன். வேறு எவரும் எழுதியதாகத் தெரியவில்லை.

தமிழில் பிரச்சார இலக்கியத்திற்கு ஒரு மரபு உண்டு. பாரதியின் சிறுகதைகள், வ.ரா, ராஜாஜி, அகிலன், நா.பார்த்தசாரதி போன்றவர்களின் ஆக்கங்கள், ஏராளமான முற்போக்கு எழுத்துக்கள் பிரச்சார எழுத்துக்களாகவே வகைமைப் படுத்தப்படுகின்றன.

*அவற்றை நவீனஇலக்கியத்தின் வட்டத்திற்குள் சேர்ப்பதில்லை. அவை அவற்றின் நோக்கத்தால் மட்டுமே கவனத்திற்குரியவை. சி.என்.அண்ணாத்துரை, மு.கருணாநிதி ஆகியோரின் ஆக்கங்கள் அத்தகையவை. முன்னோடியான திராவிட இயக்கப் பிரச்சார படைப்பு* ***மூவாலூர் ராமாமிருதத்தம்மையா****ரின் தாசிகளின் மோசவலை அல்லது மதிபெற்ற மைனர்.*

*சி.என்.அண்ணாத்துரைக்கு நவீன இலக்கியம் எந்த இடத்தை அளித்ததோ அதையே ராஜாஜிக்கும் அளித்தது என்பதை நோக்கினால் அதன் அளவுகோல்களைப் புரிந்துகொள்ள முடியும். சி.என்.அண்ணாத்துரை 'பிராமணிய' நோக்கால் புறக்கணிக்கப்பட்டார் என்பவர்கள் எந்த அடிப்படையில் ராஜாஜி அண்ணாத்துரைக்கு அளிக்கப்பட்ட இடம்கூட அளிக்கப்படாமல் விலக்கப்பட்டார் என்பதை உசாவ வேண்டும். இத்தனைக்கும் சி.என்.அண்ணாத்துரையை விட மேம்பட்ட சிலகதைகளை ராஜாஜி எழுதியிருக்கிறார்.*

*திராவிட இயக்கத்தின் சாதனை எங்கே? நவீனமரபுக்கவிதையில் அதன் சாதனை உள்ளது என நினைக்கிறேன். திராவிட இயக்கத்தின் அணிமொழி சரியாக இயைந்துபோகும் இடம் அதுவே. அதன் கற்பனாவாதத் தன்மை அணிநடைக்கு உகந்தது.* ***பாரதிதாசன்*** *அதன் தொடக்கப்புள்ளி. அந்த நிரையில்* ***முடியரசன்*** *ஒரு முதன்மையான கவிஞர் என நினைக்கிறேன். அடுத்தபடியாக* ***வேழவேந்தனும் சுரதா****வும் குறிப்பிடத்தக்கவர்கள். ஒரு நெகிழ்வான நோக்கில்* ***குலோத்துங்கன், மா.இலெ.தங்கப்பா*** *ஆகியோரையும் அவ்வரிசையில் சேர்க்கலாம்.*

*இவ்வரிசையில் திராவிட இயக்கத்தவரால் சேர்க்கப்படாத ஒருவர், அழகியல் மற்றும் கொள்கை சார்ந்து சேர்க்கப்பட்டாகவேண்டியவர்* ***தமிழ்ஒளி****. முற்போக்கு இலக்கியமரபுடன் அணுக்கமானவர் என்றாலும் அவருடைய நிலைபாடு திராவிட இயக்கம் சார்ந்தது. தனிப்பட்ட இயல்பிலிருந்த கட்டற்ற தன்மை, குடிப்பழக்கம் மற்றும் நேரடி அரசியல் ஈடுபாடின்மை போன்றவற்றால் தமிழ்ஒளி திராவிட இயக்கத்தவரால் எவ்வகையிலும் பொருட்படுத்தப்படவில்லை. அவருடைய* ***மாதவிகாவியம்*** *திராவிட இயக்க இலக்கியங்களில் மிக முக்கியமானது..*

ஆனால் சிற்றிதழ்சார்ந்த நவீனத்தமிழிலக்கியவாதிகள் நவீனமரபுக்கவிதையை பாரதிகாலகட்டத்துக்குப் பின்னர் உள்ளத்தால், அழகியலால் நெடுந்தொலைவு கடந்துவிட்டனர். அவர்களில் எவருமே அந்தத் தளத்தில் ஆர்வம் கொண்டவர்கள் அல்ல. சொல்லப்போனால் எண்பதுகளில் மரபிலக்கிய ஈடுபாடு கொண்ட நவீனத்தமிழிலக்கிய விமர்சகனாக நான் உள்ளே நுழைந்தபோதுதான் நவீன மரபுக்கவிதையை கருத்தில்கொண்டு முடியரசன் வேழவேந்தன் ஆகியோரைப்பற்றி எழுதினேன். அவர்களை நவீன இலக்கியத்திற்குள் சேர்க்கமுடியாது. ஆனால் தமிழிலக்கியமரபில் அவர்களுக்கு தவிர்க்கமுடியாத இடம் உண்டு.

முடியரசன், வேழவேந்தன், சுரதா, தமிழ்ஒளி நால்வருமே பாரதிதாசனின் வழித்தோன்றல்கள். கவிதைத்திறன் என்றுபார்த்தால் பாரதிதாசனைவிட மேம்பட்டவர்கள். அணிமொழிக்கு இன்றியமையாதது தங்குதடையற்ற ஒழுக்கு. அது பாரதிதாசனிடம் குறைவு. இவர்களிடம் அது இருந்தது. தமிழில் அணிமொழி இயல்பான ஒழுக்கை அடைந்தது தமிழ்ஒளியின் **மாதவிகாவிய**த்திலும் முடியரசனின் **பூங்கொடி**யிலும்தான். இவற்றைப்பற்றி சுருக்கமாக எழுதியிருக்கிறேன். விரித்து எழுதவேண்டும்.

இங்கே அரசியல்தலைவர்களையே மாபெரும் படைப்பாளிகளாக பரணிபாடி ஏத்துகிறார்கள். அந்த அதிகார வழிபாடு திராவிட இயக்க உளநிலைகளில் மையமானது. நிறுவனங்களின் அரசியல்நோக்கம் சார்ந்து இது நிகழ்கிறது. ஆனால் அதன் விளைவாக மேலே சொன்ன திராவிட இயக்கப் படைப்பாளிகளே மறக்கப்பட்டுவிடுகிறார்கள்.ஒருவகையில் திராவிட இயக்க இலக்கியத்திற்கே தீங்கை விளைவிப்பது இந்த வெளியிலிருந்து செலுத்தப்படும் மதிப்பீடுகள்.

திராவிட இயக்கத்தின் பங்களிப்பு என்பதை ஒரு முழுமையான நோக்கில், வாசித்து மதிப்பிட்டு, ஏற்பு மறுப்புகளுடன் எழுதவேண்டும் என்பதே நவீனச்சிந்தனையில் ஆர்வமும் பயிற்சியும் உள்ளவர்களின் தரப்பாக இருக்கும். க.பூரணசந்திரன் போன்றவர்கள் எழுதியிருக்கிறார்கள். வெறும் வாய்ச்சவடால்களும் போற்றிப்பாடல்களும் இலக்கியத்திற்கு புறம்பானவை.

## *19) திராவிட இயக்க இலக்கியம்- முடிவாக*

*அன்புள்ள ஜெமோ,*

*நவீனத் தமிழிலக்கியத்தில் பார்ப்பனியமே இல்லை என்கிறீர்களா என்ன? அதைச் சுட்டிக்காட்டுவது தவறு என்கிறீர்களா? விமர்சனம் செய்வதில் என்ன தவறு என்றுதான் கேட்கவிரும்புகிறேன். உங்கள் நியாயங்கள் புரிந்தாலும் இந்த சந்தேகம் எஞ்சியிருக்கிறது. இங்கே எல்லாவற்றிலும் சாதியம் ஒளிந்திருக்கிறது. உதாரணமாக நான் செந்தில் என்ற பெயர்கொண்ட ஒரு பார்ப்பனரைக்கூட இதுவரைப் பார்த்ததில்லை. ஆறுமுகம், முருகன், பழனி போன்ற பெயர்கள் கூட அவர்களிடம் இல்லை. கார்த்திக், சுப்ரமணியன் சாதாரணம். காரணம் அவர்கள் தமிழ்ப்பெயரை வைத்துக்கொள்ள மாட்டார்கள். இந்தப் பண்பாட்டு நுட்பங்கள் பேசப்படவேண்டாமா?*

*டி.செந்தில்குமார்*

*அன்புள்ள செந்தில்குமார்,*

*நான் நவீனத்தமிழிலக்கிய முன்னோடிகளைப் பற்றி ஏழு நூல்கள் எழுதியிருக்கிறேன். அவை ஒற்றைத் தொகுதியாக நற்றிணை வெளியீடாக வந்துள்ளன. அவற்றில் பிராமண எழுத்தாளர்களின் – மேலும் குறிப்பாக ஸ்மார்த்த எழுத்தாளர்களின் – சமூகவியல் தன்மைகள், அழகியல்நோக்குகள் என விரிவாகவே விவாதித்திருக்கிறேன். மௌனி, .லா.ச.ரா, கு.ப.ராஜகோபாலன் ஜானகிராமன் ஆகியோரை அந்தக்கோணத்தில் ஆராய்ந்திருக்கிறேன். அதற்காக அவ்வட்டாரத்தில் வசைபாடவும்பட்டிருக்கிறேன். அந்த கோணத்தில் எந்தத் திராவிட இயக்கத்தவரும் நவீனத்தமிழிலக்கிய ஆய்வைச் செய்ததில்லை*

*ஆனால் அது இலக்கிய ஆய்வு. இலக்கிய ஆய்வில் எதுவுமே விலக்கல்ல. ஆனால் அது இலக்கியநோக்கம் கொண்டிருக்கவேண்டும். ஒட்டுமொத்தமாகவே நவீனத் தமிழிலக்கியத்தை பார்ப்பனியம் என முத்திரைகுத்துவது அந்தப் பேரியக்கத்தைச் சிறுமைசெய்வது. தகுதியற்றவர்களை செயற்கையாக மேலே தூக்க தகுதியானவற்றைக் கீழிறக்குவது. அது இலக்கியச் செயல்பாடு அல்ல. அதன்பின் பெருநிறுவனமும் முதலீடும் இருக்கையில் அது ஒருவகை பண்பாட்டு அழிப்புச் செயல்பாடு.*

*ஜெ*

*அன்புள்ள ஜெ*

*திராவிட இயக்க இலக்கியம் பற்றிய விவாதத்தைப் பார்த்தேன். தமிழகத்தில் இலக்கியம் மற்றும் அறிவியக்கத்திற்கும் திராவிட இயக்கத்திற்கும் சென்ற ஐம்பதாண்டுகளாக எந்தத் தொடர்பும் இல்லை. அந்த இயக்கமே 1940களில் தொடங்கி 70களில் முடிந்துவிட்டது. இன்று அதில் வாசிக்கும் வழக்கம்கொண்ட எவருமில்லை. அவர்களைப்பற்றி அவர்களே எழுதும் நூல்களே எந்தத்தரத்தில் இருக்கின்றன என்று பாருங்கள். அவர்களில் எவர் குறிப்பிடும்படி எழுதியிருக்கிறார்கள் என்பதையே உங்களைப்போன்றவர்கள் சொல்லவேண்டியிருக்கிறது*

*இன்று அந்த இயக்கம் வெறும் அரசியல்கட்சியாக மாறிவிட்டது. ஒருபக்கம் சாதாரணமான குடும்ப அரசியல். மற்றபக்கம் அடிமையரசியல். அதன் உறுப்பினர்களுக்குக்கூட அதைப்பற்றி வேறேதும் தெரியாது. இந்தச்சூழலில் இன்றைக்கு அவர்களுக்கு ஒரு 'கொள்கை நிறம்' தேவையாகிறது. ஆகவே அறிவுஜீவிகளை வாடகைக்கு எடுத்து எழுதச்செய்கிறார்கள்.. இந்த அறிவுஜீவிகள் எவரும் அந்த இயக்கம் வழியாக உருவானவர்கள் அல்ல. அவர்கள் பெரும்பாலும் இடதுசாரி அறிவியக்கத்தைச்*

சேர்ந்தவர்கள்.. அல்லது நவீனஇலக்கியத்தைச் சேர்ந்தவர்கள். அப்படித்தான் அறிமுகமாகி கவனம் பெற்றிருப்பார்கள் . அதை அங்கே கொண்டுசென்று செலவாணியாக்கிக்கொள்கிறார்கள். இவர்கள் அவர்களுக்கு தேவையான சிலவற்றைக் கொடுக்கிறார்கள். பெரும்பாலும் அது ஒருவகை ஊடகக் கவனம் மட்டுமே.

இவ்வாறு உருவாக்கப்படும் இந்தக்குரலுக்கு அறிவியக்கத்தில் என்ன மரியாதை உருவாக முடியும் என நினைக்கிறீர்கள்? வாசிப்பவர்கள் இன்னொரு பக்கம் இருக்கிறார்கள். அவர்களிடம் எந்த விளக்கமும் சொல்லவேண்டியதில்லை. வாசித்துப்பாருங்கள் என்று மட்டும் சொன்னாலே போதுமானது.

ஆர்.பாஸ்கர்

அன்புள்ள பாஸ்கர்

அமைப்புசார்ந்த ஊடகவல்லமை என்பது கருத்தியல்செயல்பாடுகளில் மிகப்பெரிய சக்தி. ஈவேரா அவர்களை அவ்வாறு பெருநிதிச் செலவில் கட்டி எழுப்பினார்கள். எண்பதுகளில் அம்பேத்கர் நூற்றாண்டு விழாவை ஒட்டி அம்பேத்கர் இங்கே ஒரு அறிவடையாளமாக எழுந்தபோது அதை நிழலால் மூடும்பொருட்டு உருவாக்கப்பட்டது ஈவேராவின் பிம்பம். பெரும்பாலும் அது மிகைப்படுத்தப்பட்டது. ஆனால் அது தொடங்கியபோது அதனால் என்ன நிகழும் என எவரும் கணித்திருக்கவில்லை.அதன் சாதிய உட்கணக்குகளும் புரிந்துகொள்ளப்படவில்லை. இன்று தமிழகத்தின் இடைநிலைச்சாதியினரின் பொது அடையாளமாக, திருவுருவாக ஈவேரா ஆகிவிட்டிருக்கிறார். இப்போது சி.என்.அண்ணாத்துரை, மு.கருணநிதி இருவரையும் அதேவகையில் அமைப்பு- நிதி வல்லமையுடன் நிறுவ முயல்கிறார்கள். ஒரு கருத்துச்சூழலில் அதிகாரத்தால் நிறுவப்படும் எந்த திருவுருவும் எதிர்மறை விளைவையே உருவாக்கும்.

இன்று இடதுசாரி அறிவியக்கம் நசித்துக்கொண்டிருக்கிறது. பேருருக்கொண்ட ஓர் அமைப்பு சிதைந்து துண்டுகளாக ஆவதை நாம் பார்த்துக்கொண்டிருக்கிறோம். அந்தத்துண்டுகளிலிருந்து இந்தப் திராவிட இயக்க மீட்பாளர்கள் தங்கள் புதிய வழக்கறிஞர்களை தெரிவுசெய்துகொண்டிருக்கிறார்கள். இன்று இடதுசாரிகளில் மார்க்ஸிய தத்துவப்பயிற்சி கொண்டவர்கள், அரசியல்கோட்பாட்டு அறிஞர்கள் அருகிவிட்டனர். புதியதலைமுறையினரில் எவருமில்லை. மார்க்ஸியர்கள் ஐம்பதாண்டுகளாக உருவாக்கி எடுத்த தத்துவார்த்தமான தர்க்கங்களும் அதற்கான மொழியும் முழுமையாகவே அழிந்துவிட்டிருக்கின்றன. இடதுசாரிகளும் திராவிட இயக்கத்தவருக்குரிய பரப்பியக்க மொழியில்,தெருப்பூசலின் தரத்தில் பேசுவதையே நாம் காண்கிறோம். மார்க்ஸியத்தைவிட இடைநிலைச்சாதி உளநிலையை உள்ளீடாகக் கொண்ட திராவிட அரசியலே அவர்களில் பலருக்கு ஈர்ப்புடையதாக உள்ளது. அவர்கள் தங்கள் இயக்கம் முன்பு திராவிட இயக்கத்தின் பரப்பு அரசியலுக்கு எதிராக முன்னெடுத்த பெரும் கருத்துப்போரைப் பற்றி ஏதும் அறியாதவர்களாக இருக்கிறார்கள்.

இன்னொரு பக்கம் வலதுசாரி வெறுப்பரசியல் வலுப்பெற்று வருகிறது. நீங்கள் விரும்பினாலும் இல்லாவிட்டாலும் மக்கள் வலதுசாரி மதவெறி அரசியலை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிறார்கள். [திராவிட இயக்கத்தின் இன்றைய கொழுந்தான தி.மு.க ஒரு இஸ்லாமிய வேட்பாளரைக்கூட தேர்தலில் நிறுத்தவில்லை என்பதை காணலாம். மேடைப்பேச்சு வேறு, களநிலவரம் வேறு என அவர்கள் அறிவார்கள்] இடதுசாரிகளும் திராவிட இயக்கத்தவரும் எல்லா வலதுசாரி அரசியலுக்கும் எதிராக நிலைகொள்வதை விடுத்து இந்து வலதுசாரி அரசியலுக்கு எதிராக இஸ்லாமிய தீவிரவாத இயக்கங்களைக்கூட ஆதரிக்கும் நிலைக்குச் சென்றுவிட்டமைதான் இந்து வலதுசாரி வெறிக்கு அடிப்படையான உணர்வுநிலைகளை உருவாக்குகிறது. தேர்தலரசியலின் கட்டாயத்தால், வாக்குவங்கிக்காக திராவிட இயக்கத்தவரும் மார்க்ஸியரும் சிறுபான்மை மத அடிப்படைவாதம் என்ற புலிவாலில் பிடித்திருக்கின்றனர். விடவும் முடியாது, பிடித்திருக்கவும் இயலாது. வலதுசாரி அடிப்படைவாத வெறிக்கு எதிராக திராவிட இயக்கமும் அதற்கு நேர் எதிரான இடதுசாரிகளும் கைகோர்த்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களின் முரண்பாடுகளை மழுங்கடித்துக்கொள்கிறார்கள்.

இச்சூழலில் இத்தகைய முன்னெடுப்புக்கள் எதிர்பாராத விளைவுகளையே உருவாக்கும். அரசியலில் அது எதைவேண்டுமென்றாலும் உருவாக்கட்டும். ஆனால் சிந்தனைத் தளத்தில் திராவிடப் பரப்பரசியலை நோக்கி அனைத்து வலதுசாரி அல்லாதவர்களையும் குவியச்செய்துவிடும். விளைவாக விமர்சன அணுகுமுறை, தர்க்க அணுகுமுறை, அழகியல்நோக்கு ஆகியவற்றை இழந்து திராவிட அரசியலின் ஒற்றைப்படையாக்கல், வெறுப்பரசியல், போற்றிப்பாடடி கலாச்சாரத்திற்கு அனைவரையும் கொண்டுசென்றுவிடும். திராவிடப் பரப்பரசியல் வலதுசாரிவெறிக்கு எதிரான இன்றியமையாத விசையாக புரிந்துகொள்ளப்படும். உண்மையில் அது மண்குதிரை, பெருவெள்ளத்தை தாங்காது என்பது மறக்கப்படும். சொல்லப்போனால் மதவெறி அரசியலுடன் தேவைக்காக தயங்காமல் கைகோத்துக்கொள்ளும் தன்மை கொண்டது அது .

இன்று இடதுசாரிகள் வரிசையில் நின்று பெரியார், அண்ணா, கலைஞர் என கூச்சலிட்டு கும்பிட ஆரம்பித்திருக்கிறார்கள். ஜீவாவும் பாலதண்டாயுதமும் கல்யாணசுந்தரமும் மறக்கப்பட்டுவிட்டனர். நா.வானமாமலையும் கைலாசபதியும் எவராலும் மேற்கோள் காட்டப்படுவதில்லை. அவர்கள் அனைவருக்கும் மேலாக ஈவேராவும் அண்ணாத்துரையும் ஏன் மு கருணாநிதியும் தூக்கிவைக்கப்படும் சூழல் நிலவுகிறது. திராவிட பரப்பரசியலே வெற்றியை அளிப்பது, இடதுசாரிகளின் இயங்கியல் நோக்கு அல்ல என்றஎண்ணம் இடதுசாரி எழுத்தாளர்கள் நடுவே பரவலாகிவிட்டிருக்கிறது. இது சிந்தனைத்தளத்தில் மிகப்பெரிய அழிவு இவற்றுக்கிடையேயான முரண்பாடுகளை கூரிழக்கச் செய்பவர்கள் இடதுசாரி சிந்தனைகளை இனவாத, சாதிவாத அரசியலுக்குள் கொண்டுசெல்கிறார்கள். எஞ்சியிருக்கும் ஒரே சிறுவட்டம் நவீன இலக்கியத்தில் திகழ்வது. அதை திராவிட இயக்கத்தவர் அவர்களுக்குத் தெரிந்த சாதியவாத முத்திரை குத்தி சிறுமைசெய்து ஒழிக்கமுயல்கிறார்கள். அதற்கு இடதுசாரிகள் ஒத்து ஊதுகிறார்கள்

இப்போதே இங்கே அழகியலையோ தத்துவத்தையோ பேசுபவர்கள் இருமுனைகளிலும் வசைகளை மட்டுமே கேட்கவேண்டிய நிலைமையில் இருக்கிறார்கள் .அரசியல்களத்தில் நிகழும் இந்த தளக்குறுகலின் உடனடி நடைமுறைவிளைவு என்னவாக இருந்தாலும் இலக்கியத்தில் கருத்தியக்கத்தில் நீண்டகால அளவில் பேரழிவுதான் விளையும். இந்த

வெறிபிடித்த இருமுனைப்படுத்தலின் நடுவே, வசைகள் சிறுமைப்படுத்தல்கள் ஒற்றைப்படையாக்கல்கள் திரித்தல்களிலிருந்து தப்பி, இலக்கியம், தத்துவம் ஆகியவை சார்ந்து நேர்மையான கருத்துச்செயல்பாடுகளுக்கான ஒரு சிறுகளமாவது இங்கே எஞ்சியிருக்கவேண்டும். அவர்கள் இந்த போற்றிப்பாடடிகளை ஒட்டி ஜாலரா தட்ட முனையாமல் இங்கே முன்னோடிகளால் நிறுவப்பட்ட விமர்சனப்பார்வையை தக்கவைக்க முயலவேண்டும். இங்குள்ள எல்லா முரண்பாடுகளும் பேணப்படவேண்டும். இந்த திரள்கருத்துக்கள் உருவாக்கும் முத்திரைகளில் இருந்து இந்தச் சிறிய அறிவியக்கம் காக்கப்படவேண்டும். ஒரு நூறுபேர் எஞ்சினாலே போதும்.

ஜெ

## *20) திராவிட இயக்கம்- ராஜ் கௌதமன்*

*அன்புள்ள ஜெ*

*சமஸ் அவர்களின் கட்டுரையை மறுத்து எழுதியிருந்தீர்கள். ராஜன் குறை, ராஜ் கௌதமன் போன்றவர்களின் கட்டுரையைச் சுட்டிக்காட்டி அவற்றுடன் விவாதிக்கும்படி சமஸ் அறைகூவியிருந்தார். நீங்கள் பதில்சொல்வீர்கள் என எதிர்பார்க்கிறேன்.*

*என்.திவாகர்*

*****

*அன்புள்ள திவாகர்,*

*நான் எவரிடம் விவாதிப்பது என்பதை நானே முடிவுசெய்வேன். என் நேரம் எனக்கு முதன்மையானது. விவாதம் சரியா பிழையா என முடிவுசெய்யவேண்டியவர்கள் வாசகர்கள். நான் ராஜன்குறையிடம் விவாதிப்பதில்லை. 2003ல் நான் மு.கருணாநிதி அவர்களின் இலக்கியத்தகுதி பற்றி பேசியபோது அன்று சன் டிவி ஊழியராக இருந்த மாலன் திராவிட இயக்கத்திற்காகவும் கருணாநிதிக்காகவும் களமாடினார். நான் அவரை பொருட்படுத்தவே இல்லை. ஏனென்றால் மாலன் யார் என எனக்குத்தெரியும் – இன்று எல்லாருக்கும் தெரியும். ராஜன் குறை யார் என எனக்கு முப்பதாண்டுகளுக்கும் மேலாக நன்றாகவே தெரியும்.தொழில்முறை வக்கீல்களிடம் விவாதிப்பது வெட்டிவேலை. அதிலும் அடிப்படைகளைப் புரிந்துகொள்ளும் திராணியற்ற அசட்டுவக்கீல் என்றால் விவாதிப்பது பித்துக்குளித்தனம்.*

*[மார்க்ஸியமா, திராவிடமா, நக்ஸலிசமா, தமிழ்த்தேசியமா, பார்ப்பனிய எதிர்ப்பா, இந்துத்துவமா எதுவானாலும் ஐயங்கார்களிடம்தான் விவாதிக்கவேண்டும் என்பதைப்போல அபத்தச்சூழல் திராவிடத் தமிழகம் தவிர வேறெங்காவது இருக்குமா? வஹாபிய ஐயங்காரிசம் ஒன்று மட்டும்தான் இப்போது இல்லை. கொஞ்சநாளில் அதுவும் வந்துவிடும்.]*

*

*திராவிட இயக்கம் பற்றிய ராஜ் கௌதமனின் கருத்தாக தி ஹிந்து பிரசுரித்துள்ள – சமஸ் மேற்கோள்காட்டும் – அக்கட்டுரை 1995 வாக்கில் அவர் எழுதியது. அன்று அவர் இருந்த கருத்துநிலை அது. அச்சூழலைப் புரிந்துகொள்ள ஒரு பின்னணி அறிதல் தேவை. 1991ல் அம்பேத்கர் நூற்றாண்டு . அதை ஒட்டி 1981 முதல் பத்தாண்டுக்காலம் அம்பேத்கரின் கருத்துக்களை இந்தியா முழுக்க கொண்டுசெல்லும் திட்டம் ஒன்று மகாராஷ்டிரத்தில் உருவானது. கர்நாடகத்தில் டி.ஆர்.நாகராஜ் அதன் முகமாக திகழ்ந்தார். அது மகாராஷ்டிரத்திலிருந்து குஜராத்துக்கும் கர்நாடகத்திற்கும் சென்றது. அரசியலில் தலித் எழில்மலை போன்றவர்களும் இலக்கியச் சூழலில் தமிழவன், அ.மார்க்ஸ் போன்றவர்களும் அதைப்பற்றிப் பேசலாயினர். தலித் என்னும் சொல் இங்கே வந்தது. அம்பேத்கர் குறித்த ஆய்வுகள் உருவாயின. ஊருக்கு ஊர் அம்பேத்கர் படிப்பகங்கள் உருவாயின. அம்பேத்கர் சிலைகள் திறக்கப்பட்டன.*

*அதையொட்டி அம்பேத்கரையும் பெரியாரையும் இணைத்து, ஈவேரா அவர்களை ஒருபடி மேலாக நிறுத்தி, சொல்லப்போனால் அம்பேத்கர் ஒரு குட்டிப்பெரியார் என்னும் கோணத்தில் பேசும் ஒரு தரப்பு மெல்ல உருப்பெற தொடங்கியது. நுணுக்கமான சொல்லாடல்கள் வழியாக இது கட்டமைக்கப்பட்டது.அம்பேத்காரியத்திற்கு பதிலாக, அம்பேத்காரியத்துடன் இணைத்து பெரியாரியம் என்னும் சொல் பயிலத்தொடங்கியது. 1991 ல் சோவியத் ருஷ்யா உடைந்ததும் புரட்சியில் நம்பிக்கையிழந்த இடதுசாரி அமைப்புகளில் இருந்து வெளியேறியவர்கள் பெரியாரியம் நோக்கிச் சென்றனர். எஸ்.வி.ராஜதுரை போன்றவர்கள் அப்போதுதான் புதுப்பெரியாரியர்களாக தோன்றினர்.*

*அந்த சிந்தனை அலையின் உருவாக்கமே மிகக்குறுகிய காலம் மட்டும் வெளிவந்த நிறப்பிரிகை. அதில் இருந்த இரு தலித்துக்கள் ரவிக்குமாரும், ராஜ் கௌதமனும். விரைவிலேயே அவர்கள் அதிலிருந்து அகன்றனர் தமிழகத் தலித் சிந்தனை அதன்பின்னரே உருவானது. தலித் இயக்கங்கள் தோன்றி வலுப்பெற்றன. ரவிக்குமாரும் ராஜ் கௌதமனும் அவற்றுடன் இணைந்து பணியாற்றினர். ரவிக்குமார் ஈவேரா மேல் மிகக்கடுமையான விமர்சனங்களை முன்வைத்தார்.*

*நிறப்பிரிகையில் எஞ்சிய இடைநிலைச் சாதியினர் பெரியாரியர்களாக நீடிக்க அவர்களை தலித் சிந்தனையாளர்கள் விமர்சித்து நிராகரித்தனர். பெரியாரியர்களின் செயல்பாடுகள்*

நுட்பமாக அம்பேத்காரை மறைக்கும் தன்மை கொண்டிருந்தன. அம்பேத்கரை முதன்மைத்தலைவராக ஏற்பதற்கான தயக்கமே அவற்றின் உண்மையான உள்ளீடு. தலித் முன்னோடிகளின் நூல்கள் அச்சேறியது, தலித் முன்னோடிகள் பண்பாட்டில் பேசுபொருள் ஆனது, தலித் இலக்கியம் உருவானது எல்லாமே பின்னர் அந்த பெரியாரிய அலையில் இருந்து பிரிந்து தலித் இயக்கம் உருவானபோதுதான்.

.ஈவேரா அதுவரை திராவிட இயக்கத்தின் பழைய முகங்களில் ஒன்றாகவே இருந்தார். திராவிட இயக்கத்தின் முகமாக அன்று இரு கட்சியினராலும் நிறுத்தப்பபட்டவர் அண்ணாத்துரைதான். அதுவும் கட்சிச்சூழலில் மட்டும். நிறப்பிரிகை காலகட்டத்தில்தான் அறிவியக்கச் சூழலில் ஈவேரா ஓர் முதன்மை ஆளுமையாக முன்வைக்கப்பட்டடார். ஈவேராவுக்கு சிந்தனையாளரின் நிறம் அளிக்கப்பட்டது . அதைச் செய்தவர்கள் முன்னாள் இடதுசாரிகள். அதுவரை அறிவுச்சூழலில் ஈவேராவை முன்வைத்துப்பேசிய ஓர் ஆளுமைகூட இருக்கவில்லை அதில் முதன்மையானவர்கள் அ.மார்க்ஸும் எஸ்.வி.ராஜதுரையும். வியப்பிற்குரிய செய்தி, அந்தச் சொல்லாடல்களில் பெரியாரியர்களால் அண்ணாத்துரை மிகஎதிர்மறையாகவே பேசப்பட்டார். ஈவேராவின் 'கலக'ச்சிந்தனைகளை வாக்குவங்கி அரசியலுக்காக மழுங்கடித்தவர் என்னும் கோணத்தில். இன்று அண்ணாத்துரை மகத்தான சிந்தனையாளராக மீட்டு எடுக்கப்படுகிறார். அதே ஓய்வுபெற்ற மார்க்ஸியர்கள் கிளம்பி வருகிறார்கள்.

ராஜ் கௌதமன் நிறப்பிரிகையுடன் இருந்த காலகட்டத்தில் எழுதியது அக்கட்டுரை.ராஜ் கௌதமன் நிறப்பிரிகை காலகட்டத்தைக் கடந்தபின்புதான் அவருடைய அழுத்தமான ஆய்வுநூல்கள் அனைத்தும் வெளிவந்தன. அந்த ஆய்வுநூல்களில் ராஜ் கௌதமன் திராவிட இயக்கம் உருவாக்கிய பழந்தமிழ்ப்பொற்காலம் என்ற கருத்து எப்படி ஒரு நவீன ஃபாஸிஸத்தின் அடிப்படையை கட்டமைத்தது என்று ஆராய்கிறார். அது உண்மையில் எவருடைய பொற்காலம் என்று வினவுகிறார். பொற்காலங்களைக் கட்டமைக்கும் அந்தப் பார்வையில் உள்ள இடைநிலைச் சாதிய உள்ளடக்கம் என்ன என்றும் மிக மிக விரிவாக எழுதுகிறார்.

தன் ஆய்வுநூல்களில் ராஜ் கௌதமன் சங்க காலம் முதல் இங்கெ தொடர்ந்து வளர்ந்து வந்த சாதியக் கட்டமைப்பு, ஒடுக்குமுறை , அதற்குரிய கருத்துநிலைகள் ஆகியவற்றை எடுத்துக் காட்டுகிறார். அவ்வகையில் தமிழ்ப்பண்பாடு உருவாக்கிய அறம் என்னும் கருத்து எப்படி ஒடுக்குமுறைக் கருவியாக ஆகியது என விவரிக்கிறார். திருக்குறள் குறித்த திராவிட இயக்கத்தின் வாசிப்பை அவர் அந்நோக்கில் மிகக் கடுமையாக நிராகரிக்கிறார்.

*தலித்துக்கள் மீதான ஒடுக்குமுறையின் வரலாற்றை சங்ககாலம் முதல் எழுதி கொண்டுவரும் ராஜ் கௌதமன் அந்த உண்மையை மறைத்து திராவிட இயக்கத்தால் உருவாக்கப்படும் பொற்காலக் கனவு என்பது இன்றைய சாதிய ஒடுக்குமுறையை நியாயப்படுத்தவே என வாதிடுகிறார்.*

*சமஸ் எடுத்துக்கொடுத்திருக்கும் அக்கட்டுரையிலுள்ள பார்வையை மறுக்கும் வலுவான வாதங்களை ராஜ் கௌதமனே அவருடைய பிற்கால நூல்களான பாட்டும் தொகையும் பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச சமுக உருவாக்கமும், ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும், தலித் பார்வையில் தமிழ்ப் பண்பாடு,கலித்தொகை-பரிபாடல்: ஒரு விளிம்புநிலை நோக்கு, ஆரம்பகட்ட முதலாளியமும் தமிழ்ச்சமூக உருவாக்கமும் போன்ற நூல்களில் விரிவாகப் பேசியிருக்கிறார்.*

*ராஜ் கௌதமன் திராவிட இயக்கத்தின் தமிழ்ப்பெருமித உருவாக்கத்தை நிராகரித்துத்தான் தலித் அரசியலை முன்வைத்தார். திராவிட இயக்கத்தை அவர் இடைநிலைச்சாதிகள் அதிகாரத்தின்பொருட்டு பழந்தமிழ்ப்பெருமிதம், திராவிட இனவாதம் என்னும் அடையாளத்தை உருவாக்கிக்கொண்ட அரசியல்நிகழ்வாகவே மதிப்பிடுகிறார். அந்தக் காரணத்தாலேயே அவர் அவர்களால் விமர்சிக்கப்பட்டார், புறக்கணிக்கப்பட்டார்.*

*இன்று ஒரு தேவைக்காக அவருடைய ஒரு பழைய கட்டுரையின் ஒரு பகுதியை எடுத்துப் பிரசுரித்து அவருடைய கருத்து அது என சொல்லி வாதிடும்படி அறைகூவுகிறார்கள். இது எப்போதுமே திராவிட இயக்கத்தின் வழிமுறை. கீழ்வெண்மணி வரலாறு முதல் எப்போதுமே இந்தத் திரிப்பை அவர்கள் செய்து வருகிறார்கள். [கீழ்வெண்மணி – பிறிதொரு போலிவரலாறு,தி ஹிந்து –நாளிதழ் அறத்தின் சாவு] மாறாக சிற்றிதழ் மரபு என்பது நேர்மையாகவும் முழுமையாகவும் ஒரு சிந்தனையாளனின் கருத்தை எதிர்கொள்வதுதான். உண்மையில் நான் முன்வைக்க விழைவது இந்த வேறுபாட்டைத்தான்*

*தொண்ணுறுகளில் ராஜ் கௌதமன் எழுதிய கலகமையநோக்கு கொண்ட கட்டுரைகளை மிகக் கடுமையாக விமர்சனம் செய்திருக்கிறேன். அப்போதும் அவருடைய நண்பனாக, மாணவனாகவே இருந்தேன். 2018 ஆம் ஆண்டுக்கான விஷ்ணுபுரம் விருது ராஜ் கௌதமனுக்கு அளிக்கப்பட்டது. அப்போது உருவான விவாதங்களிலும் அவருடன்*

முரண்படும் இடங்களை முழுமையாகவே குறிப்பிட்டோம். விஷ்ணுபுரம் விருது அளிக்கப்பட்ட மேடையிலேயே ஏற்பும் மறுப்புமாகவே அவருடைய கருத்துக்கள் பேசப்பட்டன. [அதை ராஜ் கௌதமனே 'திடீர்னு கடிச்சும் வைப்பான், நம்பமுடியாது இவனை' என மேடையில் என்னைப்பற்றி நையாண்டியாகக் குறிப்பிட்டார்]

ஆ.சிவசுப்ரமணியம் அவர்களை நேரில் கண்டால் அவர் தமிழ் இந்துவுக்குக் கொடுத்துள்ள அந்த பேட்டியைப் பற்றி விவாதிக்க நேர்ந்தால், ஐயா சென்ற முப்பதாண்டுகளாக திராவிட இயக்கம் உருவாக்கிய பொற்காலக் கனவுகளின் அரசியல்மோசடித்தனத்தை உங்கள் நூல்களில் மார்க்ஸியநோக்கில் விமர்சனம் செய்திருந்தீர்கள். அக்கருத்துக்களை முழுமையாக திரும்பப்பெற்றுக்கொண்டுதான் இக்கருத்துக்களை வந்தடைந்தீர்களா என்று கேட்பேன். அவர் ஒன்று அறிந்திருப்பார், நான் சமஸ் போல அவர் பெயரை மட்டும் தெரிந்துகொண்டு பேசவருபவன் அல்ல. அவர் எழுதிய அத்தனை நூலையும் வாசித்துவிட்டுப் பேச வருபவன் என்று.

இந்த முரணியக்க நோக்கையும் முழுமையான அணுகுமுறையையுமே நான் முன்வைக்க விரும்புகிறேன். இதில் நம்பிக்கை கொண்டவர்களிடம் மட்டுமே விவாதிப்பேன். அரசியல்நோக்கில் சிலம்பமாடும் வெட்டித்தர்க்கங்களுடன் பேசுவது வீண்வேலை. எவரும் விவாதம் வழியாக கருத்தை மாற்றிக்கொள்வதில்லை. வாசகர்களுக்கு உண்மை தெளிவாகவே தெரியும். விவாதம் அதுவரை மட்டுமே.

ராஜ் கௌதமனின் அக்கட்டுரையை வைத்து அவர் திராவிட இயக்கம் பற்றிக் கொண்டிருக்கும் கருத்தை மதிப்பிடாதீர்கள். இந்த வெட்டிப்பிரசுரிக்கும் மோசடிகளை புரிந்துகொள்ளுங்கள். அவருடைய பெருநூல்களை முழுமையாக வாசியுங்கள்

ஜெ

******